# நாடு நலம் பெற

பேராசிரியர்
**அ. மு. பரமசிவானந்தம்**
நிறுவனர் வள்ளியம்மாள் கல்வி அறம்
தமிழ்க்கலை இல்லம், சென்னை-30

**தமிழ்க்கலைப் பதிப்பகம்**
தமிழ்க்கலை இல்லம்
சென்னை-30

# உள்ளே

1) அ) உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞானம் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்து
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே
(திருமந்திரம் 724)

ஆ) மாறுபாடில்லாத உண்டி மறுத்து உண்ணின்
வேறுபாடு இல்லை உயிர்க்கு (குறள் (945)

இ) அற்றால் அளவறிந்து உண்க அது உடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு (குறள் 943)

2) அ) கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக (குறள் 391)

ஆ) விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடுஏனையவர் (குறள் 410)

இ) கல்வி கரையில கற்பவர் நாள்சில
மெல்ல நினைக்கின் பிணிபல— தெள்ளிதின்
ஆராய்ந்து அமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து (நாலடி 135)

3) அ) மாரிபொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர் பழிக்கும் இக்கண் அகல் ஞாலம்
(புறம் 35- வெள்ளைக்குடி நாகனார்)

ஆ) எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே
(ஔவையார் புறம் 187)

இ) பண்புடையார் பட்டுண்டுலகம் அதுஇன்றேல்
மண்புக்கு மாய்வது மன். (குறள் 996)

ஈ) சான்றவர் சான்றாண்மை குன்றின்
இரு நிலந்தான்
தாங்காது மன்னோ பொறை (குறள் 990)

'எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே'

(தாயுமானவர்)

# முன்னுரை

'அரிதரிது மானுட ராதல் அரிது' என ஔவையார் அருளச் செய்துள்ளார். 'எழுவகைப் பிறவியும் மானுடப் பிறவிதான் எய்துவது அரிது' என்றார் பிறரும். இத்தகைய மானுடப் பிறவியைப் பெற்ற நாம் 'வாழ்வாங்கு வாழ வேண்டும்' என அன்று தொட்டு இன்று வரை உலகச் சான்றோர் — நல்லோர் — நாடு வாழ நலங்கண்டோர் கூறி வருகின்றனர். மனிதன் 'நல்லதன் நலனும் தீயதன் தீமையும்' உணர்ந்து, ஆறறிவு பெற்ற அருந்திறனால் வையத்தை வாடாமல் வைக்கக் கடமைப் பட்டவன். 'தாம் இன்புறுவது உலகின்புறக் காணும்' தகைமை அவனுடையது ஆம்! அவன் நேர்மையுடையவனாக, நீதி — அறம் வழுவாதவனாக — தன்னைப் போல் பிறரை நேசிப்பவனாக — எவ்வுயிரும் தம் உயிராய் எண்ணுபவனாக வாழ்ந்து, வையத்தை வற்றா வளம் சுரந்த ஒன்றாக — நலிவெலாம் நீங்கிய நாடாகக் காணக் கடமைப்பட்டவன். அத்தகைய நன்னெறிக்கெல்லாம் அடிப்படையாகிய உடல், உயிர், உற்ற பண்பாடு இம் மூன்றையும் அவன் போற்றிப் புரக்க வேண்டியவனாகின்றான். அந்த அடிப்படையினை விளக்கவே இந்த நூலில் உள்ள மூன்று கட்டுரைகளும் எழுதப் பெற்றன. வெவ்வேறு சமயங்களில் — வெவ்வேறு அடிப்படையில் எழுதப் பெற்ற இவை இன்று இந்த நூல் வழியாக, 'நாடு நலம் பெற' என்ற தலைப்பில் வெளி வருகின்றது.

முதற் கட்டுரை உடல் ஓம்பும் தன்மையில் 'மூலிகை வளமே நாட்டு வளம்' என்ற தலைப்பில் எழுதப் பெற்றது. இது, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தே மருத்துவத்துறை வழியே, 'மூலிகைமணி கண்ணப்பர் அறக்கட்டளை' அமைப்பில் ஆற்றிய முதற் சொற்பொழிவாகும். இச்சொற்பொழிவினை நான் கேட்டபடியே

தஞ்சையில் இன்றிச் சென்னையில் எங்கள் வள்ளியம்மாள் கல்லூரியிலேயே நிகழ்த்த இசைவு தந்து, அத்துறைத் தலைவரும் பல்கலைக்கழகத் துணைவேந்தரும் உடனிருந்து நடத்த வழி வகுத்தனர். இது எங்கள் வள்ளியம்மாள் கல்லூரியில் நிகழ்த்திய சொற்பொழிவாகும்.

இரண்டாவதாகிய 'நாடு நலம் பெற' என்ற கட்டுரை உயிர் ஓம்பும் கல்வியை — ஒருமைக் கண் கற்றவை எழுகின்ற பிறவிகள் தோறும் இணைந்து வரும் கல்வியை — எல்லோரும் இன்புற்றிருக்க நினைக்கும்— செயல்படச் செய்யும் கல்வியை விளக்க அமைந்ததாகும். தமிழக அரசு தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் வழி அமைந்த தமிழ் வளர்ச்சி மன்றத்தில் என்னையும் ஓர் உறுப்பினனாக இடம் பெறச் செய்துள்ளது. அம்மன்றக் கூட்டங்களில் உறுப்பினர் பலர் தமிழ் எந்தெந்த வகையில் வளரவில்லை — வளர வேண்டும் — அதற்கு ஏற்ற வழிவகை என்ன என்பன போன்ற பலவற்றை ஆராய்ந்தனர். அம்மன்றத்தில் நான் வெளியிட்ட சில கருத்துக்களை— பிறர் கூறிய சில கருத்துக்களுடன் சேர்த்து இத்தலைப்பில் இக்கட்டுரை எழுதப் பெற்றது. சில ஆண்டுகளுக்கு முன் இக்கல்வி பற்றி நான் வேறொரு சமயத்தில் எழுதிய இருபத்தேழு பாடல்களையும் உடன் முதல் இணைப்பாக இணைத்துள்ளேன். பின், தமிழகத்தில் காண முடியாத தமிழ் உணர்வு, பண்பு, வாழ்க்கை முறை, பண்பாட்டு நெறிகளைப் போற்றிக் காக்கும் 'மோரிசு' (மௌரிஷியசு) மக்கள் வாழ்க்கையை உலகத் தமிழ் மாநாட்டுக்கு அரசு சார்பாக நான் சென்ற காலத்தில் கண்டு உளம் நெகிழ்ந்து, தமிழ் எங்கும் என்றும் எப்படியும் வாழும் என்ற மன நிறைவு பெற்று எழுதிய கட்டுரை இரண்டாவது இணைப்பாக உள்ளது.

இந்நூலின் மூன்றாவது கட்டுரை மக்கள் பண்பாடும் மக்கள் வாழ்க்கை நலன்களும் சிறக்கவும் இன்றேல் நிகழும் நிகழ்ச்சியும் பிறவும் குறித்து எழுதப் பெற்றது. இதன் முதற்பகுதி 1993ல் மராட்டிய மாநிலத்தில் பூகம்பம்

—நிலநடுக்கம் உண்டான காலத்திலே சுருக்கமாக எழுதப் பெற்றது. பின் நாட்டிலும் தொலைக்காட்சியிலும் தலை விரி கோலத்தையும் பிற தேவையற்ற மாறாட்டங்களை யும் கண்டும் — நாளிதழ்களின் செய்திகளைக் கொண்டும் பிற மேற்கோள்கள் காட்டியும் எழுதப் பெற்றதாகும்.

இருபதாம் நூற்றாண்டின் எல்லை கடந்து இருபத் தொன்றாம் நூற்றாண்டில் காலை வைக்க நினைக்கும் உலகம் — சிறப்பாக நம் நாடு எதை எதையோ கனவு காண்கிறது. இந்த நூற்றாண்டினைத் திரும்பிப் பார்க் கும் பொழுது, நெஞ்சம் திடுக்கிடும் — அஞ்சும் செயல்கள் தென்படுகின்றன. இரண்டு பெரிய உலகப் பெரும் போர்களே அன்றி, நாட்டுக்கு நாடு — ஊருக்கு ஊர், எல்லைப் போராட்டங்கள், சிறுசிறு போர்கள், கொள்ளை கள், சாதிவெறிச் சண்டைகள், கொலைகள், மாறாட்டங் கள், பிற தீமைகள் நாள்தொறும் பல்கிப் பெருகுவதையே காண்கிறோம். இவை அனைத்தும் மனிதன் 'மனிதனாக' வாழவில்லை என்பதையே காட்டுகிறது. நாட்டுப்பற்று, மொழிப்பற்று, இனப்பற்று இருக்க வேண்டுவதே. ஆனால் அவை வெறியாக மாறக் கூடாது. வேற்றுமையில் ஒற்றுமை காண்பதே மக்கள் சமுதாயத்தின் அடிப்படைக் கொள்கையாக அமைய வேண்டும். எட்டு வேற்றுமை களும் இணைந்துதான் தமிழ் மொழியின் வளம் காக்க வழி செய்கின்றன. மொழி காணும் நலத்தை மனிதன் காண முடியாதா?

பல பெரியோர்கள் கூறியபடி 'யான் எனது' என்ற 'அகங்கார மமகார' உணர்வே மனிதனை விலங்கினும் கீழாகச் செல்லச் செய்கின்றன. எனவே இந்த இரு கொடும் எண்ணங்களும் மனித உள்ளத்திலிருந்து நீங்கி னால் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற உணர்வு பிறக்கும். 'எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்' என்ற தெய்வ நிலை காணும். அத்தகைய உணர்வு — தெய்வ நிலை நாட்டில் — உலகில் அரும்பத்தான் எல்லாச் சமயத் தலைவர்களும் சமுதாயத்தலைவர்களும் கூறிக்கொண்டு வருகின்றனர். ஆனால் அதே சமயத்தின் பேராலும் சமுதாயப் பிரிவுகளின் பேராலுமே எத்தனை எத்த னையோ போர்கள் — கொலைகள் — கொள்ளைகள் பிற

தீமைகள் நடைபெறுகின்றன. இவையனைத்தும் நீங்கிச் சமுதாய ஒற்றுமை — சமயத்தின் சமரசம் காண்பதே மனித நேயமாகும் இந்த அடிப்படைக்குத் தேவையான தூய உடல் ஓம்பலும், தாம் இன்புறுவது உலகின்புறக்கா ணும் கல்வியும், இவற்றோடு இணைந்த சமுதாயப் பழக்க வழக்க பண்பாடுகளும் சிறக்க வேண்டும் என்ற நிலையிலே இந்நூலில் மூன்று கட்டுரைகளும் இடம் பெறுகின்றன. இவற்றுள் சிலவிடங்களில் சில செயல்களை வன்மையாகக் கூடக் கண்டித்திருப்பேன். ஆயினும் அவை தனிப்பட்ட முறையில் யாரையும் பழிக்க வேண்டுமென்றோ— யாருடைய மனமும் புண்பட வேண்டுமென்றோ எழுதப் பெற்றவையல்ல. எப்படியாயினும் அல்லவை நீங்கி, நல்லவை நிறைந்து, நாடு நாடாக, உலகு உலகாக உயர வேண்டும் என்பதே என் கருத்து. எனவே இவ்வெழுத்துக் களில் ஏதேனும் தவறு இருப்பின் மன்னித்து நாடு நலம் பெற நல்வழி காண அனைவரையும் வேண்டிக் கொள்ளு கிறேன்.

இந்நூலை அச்சிடும் போது பிழைகளை ஒப்பு நோக்கி, பிழை திருத்தி உதவிய பச்சையப்பர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் சா. வளவன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்து வாழ்த்துகிறேன்.

இந்தப் பொங்கல் நன்னாளில் நலம் பொங்க—வற்றா வளம் பொங்க — பண்பாடு சிறந்தோங்க — மக்கள் ஆக்க நெறி பற்றி அன்புளம் கொண்டு சிறக்க வாழ்த்துகின் றேன். வாழ்க வையகம்! வளர்க மனிதப் பண்பு.

இந்நூல் வெளிவரக் காரணமாயமைந்த அனைவருக் கும் — இதழ்களுக்கும் நிறுவனங்களுக்கும் பிறருக்கும் என் நன்றியும் வணக்கமும்.

தமிழ்க்கலை இல்லம்,<br>சென்னை — 30.<br>15.1.1996.

பணிவுள்ள,<br>**அ. மு. பரமசிவானந்தம்**

# மூலிகை வளமே நாட்டு வளம்

கண்ணப்பர் வாழ்க்கை:

உலகமே அறிவொளிபெற்று ஆத்மஞானநெறி நிற்க வழிகாட்டிய அறிவுமகனை அன்று வடநாட்டில் பிறந்த ஞானநெறி நின்ற இராமகிருஷ்ணரும் சாரதாமணி அம்மையாரும் உலகுக்குத் தந்து ஞானத் தாய்தந்தையராக அறிவுத் தாய்தந்தையராக உயர்நிலை உற்றனர். நம் வேலூர் இராமகிருஷ்ண முதலியார் அவர்களும் சாரதாம்பிகை அம்மையாரும், அறிவுபெற— பெறுதற்கிடமான உயிர்நிலவும் உடல் நலமுற நம் மூலிகைமணி கண்ணப்பரைத் தந்தனர்.

'உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'

என்ற வகையில் உடம்பை நோயின்றி வளர்க்கும் மூலிகைகளின் நலம் கண்டு, நாட்டுக்கு உதவி, உலகம் உய்யப் பாடுபட்டு, அந்த உடலில் உலவும் உயிர் நலமுற்று இறையருளாம் நல்லொளியைப்பெற நம் கண்ணப்பர் அவர்கள் தம் ஆயுளையே உரிமையாக்கினார்.

அவர்தம் பெற்றோர் அவருக்குக் 'கண்ணப்பர்' என்ற பெயரிட்ட சிறப்பினை எண்ணி, அவர்களைப் பெரிதும் போற்றி வணங்குகின்றேன். காளத்திநாதனின் கண்ணில் இரத்தம் வடிய, வேறு எதனையும் கருதாது, மூலிகையினையே தேடிக்கொணர்ந்து அவர் கண்களில் பிழிந்து வழிகாட்டி, 'நில்லு கண்ணப்ப' என்று அழைக்கப்பெற்று, அப்பெயரை அந்த இறைவனால் பெறப்பெற்ற அத்திருப்

பெயரை— 'கண்ணப்பர்' என்று காலமெல்லாம் நிற்கும் பெயரைப் பிறந்த அன்றே (9.7.21) இவருக்கு இட்ட அப்பெற்றவர்களுக்குச் சிலை வைக்க வேண்டாமா!

மூலிகைமணி கண்ணப்பர் அளவான கல்வி கற்று, முதலில் ஏதேதோ தொழில்களில் சில நாட்கள் உழன்றா ராயினும், காளைப் பருவமாம் இருபத்தொரு வயது எய்திய போது அந்தக் காளத்தி கண்ணப்பரே ஆனார். நல்லவர் துணையுடன் மூலிகைகளை ஆராயத்தொடங்கி, சிறுகட்டுரைகள் எழுதி, பின் 'மூலிகைமணி' என்ற இதழை வேலூரிலேயே தொடங்கினார். பின் சென்னை யில் அதன் வளம் சிறக்க வழி வகுத்தார். தாம் மட்டு மின்றி, தம் மனைவி, மக்கள் அனைவரையும் இம் மூலிகைத் தொண்டில் ஈடுபடுத்தினார். இன்று சென்னை யில் அவர்தம் பணிகள் சிறக்கின்றன.

அவர் 1979-இல் அமரரானபின், அவர் தந்த பொறுப்பை அவர்தம் மூத்த மகனார் வேங்கடேசன் ஏற்று மூலிகைகளை ஆயும் திறத்திலும் 'மூலிகைமணி' வெளியீட்டிலும் சிறக்கத் தொண்டாற்றி வருகிறார். அவர் பணி மேலும் சிறக்க என வாழ்த்துகின்றேன்.

மூலிகைமணி கண்ணப்பர் எனக்கு நாற்பது ஆண்டு களுக்கு முன்பே பழக்கமானார். நான் வணங்கும் தணிகை முருகனுக்கு ஆண்டுதோறும் பெருவிழா நடத்துவார். அதில் நான் பலமுறை கலந்து கொண்டிருக்கிறேன். அவர் மகனார் வேங்கடேசன் திருமணமும் அங்கே தான் நடந்தது. நானும் மணவிழாவில் கலந்து மகிழ்ந்தேன். கண்ணப்பர் அவர்கள் மூலிகைவளம் காணத் தமிழ் பயில் வதே சிறப்பெனக் கருதி, தம்மகனைப் 'பச்சையப்பரில்' தமிழ் முதுகலை பயிலச்செய்தார். பின் வேங்கடேசன் அத் துறையிலே வல்லவராகி—ஆய்வு செய்து 'டாக்டர்' பட்ட மும் பல்கலைக்கழகத்தால் வழங்கப்பெற்றார்.

இன்று, அவர் தந்தையின் பெயரால் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தே ஓர் அறக்கட்டளை நிறுவி, ஆண்டு தோறும் சித்த மருத்துவம், மூலிகை அடிப்படையில் சொற்பொழிவு நடத்த ஏற்பாடு செய்து, என்னை முதல் சொற்பொழிவு ஆற்றப் பணித்தார். அவர்தம் அன்பின் வழியே இன்று உங்கள் முன் நிற்கின்றேன்.

**தமிழ்ப் பல்கலைக் கழகம்**

தஞ்சைத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தை நினைக்கும் போது, அதன் தோற்ற நாள் என் கண்முன் நிழலிடு கின்றது. அதன் முதல் ஆட்சிக்குழுவில் நான் உறுப்பின னாக இருந்தேன். அக்காலத்தில் இத்துறையினை வளர்க்க மேற்கொண்ட முயற்சிகள் அளவில. புதிய வளாகத்திலும் நூறு ஏக்கருக்குமேல் மூலிகைப் பண்ணையினை அமைக்க ஏற்பாடு செய்தோம். (பழைய வளாகத்திலும் நல்ல மூலிகைப் பண்ணை இருந்தது) இன்று ஔவையின் அரவணைப்பில் அவை நன்கு செழித்து நாட்டுக்கு வளந் தந்து கொண்டிருக்கும் என நம்புகிறேன். அதன் வளர்ச்சி சிறக்க என வாழ்த்துகின்றேன்.

பேசவேண்டிய பொருள் பற்றிக் கேட்டபோது வேங்கடேசனே தலைப்பினைத் தந்தார். 'மூலிகை வளமே நாட்டு வளம்' என்ற தலைப்பே அது. மூலிகை மணி தொடக்க நாளில் அதன் குறிக்கோள் அமைந்த தெளிபொருள் தொடர் வேண்டுமெனக் கேட்க, நானே இத்தொடரினைத் தந்ததாகத் திரு. வேங்கடேசன் என் னிடம் அடிக்கடி சொல்லுவார். எப்படியானாலும் இன்று அதே தலைப்பில் பேச உங்கள் முன் நிற்கின்றேன்.

பேச நினைக்குங்கால் கண்ணப்பர் காட்சி தருகின்றார். அன்றைய இளமையும் எழிலும் தோய்ந்த இன்முகம் காட்சி தருகின்றது. அவரைப் போற்றிய அன்பர் பலர்;

அறிஞர் பலர்; அருளாளர் பலர்; ஆக்க நெறியாளர் பலர், காஞ்சிப் பெரியவர் இவருக்கு 'மூலிகைச் சக்கரவர்த்தி' என்று பட்டம் சூட்டியுள்ளார். திருமுருக கிருபானந்த வாரியார் 'மூலிகை மன்னர்' எனப் பாராட்டியுள்ளார். அத்தகைய பெருமைக்கு உரியவர்— 'எல்லாரும் இன்புற்று இருக்கும் 'நல்வாழ்விற்கு' வழிகோலியவர் — அமரர் மூலிகை மணி கண்ணப்பர் அடிவணங்கி என் கடமையைத் தொடங்குகின்றேன்.

## மரம் செடி கொடிகள்

மரம், செடி, கொடி, மூலிகை வகைகள் உடல் நோய்களை மட்டும் தீர்க்கின்றன என எண்ணலாகாது. பலர் அப்படித்தான் நினைக்கின்றனர். ஆனால் அவை உயிர் நலத்தினை—உயிர் வாழவேண்டிய பண்பாட்டு நெறியினை—சான்றாண்மையினை நமக்குக் கற்றுத் தந்து,செல்லும் தேயத்துக்கும் உறுதுணையாக நிற்கின்றன என்பதை உணர வேண்டும்.

ஆறறிவு பெற்றவனாகிய மனிதன் இன்று 'மனிதனாக' வாழவில்லை— நிலை கெடுகிறான்— தடுமாறுகிறான்— மற்றவரைக் கெடுக்க — அழிக்க நினைக்கிறான்— பேசுகிறான்— செயல்படுகிறான்— நன்றி மறக்கின்றான்— நல்லன மறக்கிறான். அறம் விட்டு மறம் கொண்டு மனித வாழ்வினையே பாழாக்குகின்றான். அத்தகைய கொடிய நிலைகளை நீக்க நல்லவர்கள்—சான்றோர்—உலகம் வாழ நினைக்கின்றவர்கள்—அறம் தழைக்க ஆசைப்படுகின்றவர்கள், இச்செடி கொடிகளைத் துணைக்கழைத்துத்தான் நம்மைத் தெருட்டித் தெளிய வைக்கின்றனர்.

'நன்றி ஒருவற்குச் செய்தக்கால் அந்நன்றி
என்று தருங்கொல் எனவேண்டா— நின்று

தளரா வளர்தெங்கு தாளுண்ட நீரைத்
தலையாலே தான்தருத லால்'

என்று நன்றி மறவாமைக்குத் தென்னைவழியும்,

'சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாம்அவரை
ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர்—மாந்தர்
குறைக்குந் தனையுங் குளிர்நிழலைத் தந்து'
மறைக்குமாம் கண்டீர் மரம்'

என்று, இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யும் பண்பினை மரங்கள் வழியும் ஔவையார் நமக்கு அறிவூட்டுகிறார். மனிதன் தருக்கின்றி வளைந்து மற்றவர் வாழ்த்தான் வாழின் சிறப்பான் என்பதையும், இன்றேல் அடிபட்டு அழிவான் என்பதையும்.

வருத்தவளை வேயரசர் மாமுடியின் மெலாம்
வருத்த வளையாத மூங்கில்— தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாந்திரிந்து
தாழுமவர் தம்மடிக்கீழ்த் தான்
என்ற வெண்பாவால் விளக்குகிறார்.
'பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கண் படின்'

என்று வள்ளுவர் இக்குறளின் மூலமும் வேறு பலவற்றின் மூலமும் மரம், செடி முதலியவை காட்டி மனிதனை மனிதனாக வாழ வைக்க முயல்கின்றனர்.

திருத்தக்க தேவர் முற்றிய அறிவுடையார் செயல் பணிவுடைய நிலை என்பதையும் அற்பர் செல்வம் பெறின் தலைநிமிர்ந்து தருக்குடையராய்ச் சிறிதுகாலமே திரிந்து அழிவர் என்பதையும் நெற்பயிரின் மூலம் காட்டி நம்மைத் திருத்தி வாழவைத்துச் செல்கதிக்கு ஆளாக்குகின்றார்.

'சொல்லரும் சூற்பசும் பாம்பின் தோற்றம்போல்
மெல்லவே கருவிருந்து ஈன்று மேலலார்
செல்வமே போல்தலை நிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே'

என்பது அவர் வாக்கு. இவ்வாறே பலப்பல காட்டலாம்.

இதுவன்றி, இப்பயிர், பச்சை வளர அடிப்படையான நீர், ஆறு பற்றியும், அவை தோன்றும்—மூலிகை வளரும் மலை பற்றியும் புலவர்கள் காட்டி நம்மை வழிநடத்தும் நிலையும் எண்ணத்தக்கது, ஆசிரியர்தம் உயர்நிலையைத் தக்க காரணங்கள் காட்டி, பவணந்தியார் மலைக்கும் மலருக்கும் பூமிக்கும் ஒப்பிட்டு உயர்த்துகின்றார். கம்பர் சான்றாண்மைக்கே கோதாவரி ஓட்டத்தை ஒப்பிடு கின்றார்— அவர்தம் கவிக்கே ஒப்பிடுகின்றார்.

புவியினுக் கணியா யான்ற பொருடந்து புலத்திற்
றாகி
அவியகத் துறைக டாங்கி யைந்திணை நெறிய ளாவிச்
சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமுந்
தழுவிச் சான்றோர்
கவியெனக் கிடந்த கோதா வரியினை வீரர் கண்டார்!

என்பது கம்பர் வாக்கு. இவ்வாறு இம்மை உடல் நல உயிர் நலவாழ்விற்கும் செம்மை நலத்துக்கும் மட்டுமன்றி, மறுமைக்கும்,என்றும் உலகுக்கும் உயிர்க்கும் உதவும் இந்த இயற்கை ஈந்த செல்வங்களாகிய-மூலிகைகள்-செடிகள்-கொடிகள்-மரங்கள்-பிறவற்றை ஓம்பி வளர்த்து நாமும் வாழ முற்படுவோமாக! இனி தொட்ட பொருளைக் காண்போம்.

**நாடு**

'நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரும் நாடு'

என்று 'நாடு' என்ற பெயருக்கு — தகுதி வாய்ந்த ஒரு மாநிலத்துக்கு—இலக்கணம் வகுக்கிறார் வள்ளுவர். ஆம்! எதற்கெடுத்தாலும் பிற நாட்டார் கையை எதிர்நோக்கி நிற்கும் ஒரு நாடு அப்பெயருக்குத் தகுதி அற்றதாகும். இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த பாரதி, அத்தகைய நல்ல நாட்டினையே கனவுகண்டான். ஒருசிறு வளர்ச்சிக்கும்—ஆக்கப் பணிக்கும்கூடப் பிறநாடுகளைக் கண்டு, கேட்டு, கையேந்தி நிற்கும் நாடானது, அவன் கனவு கண்ட பாரத நாடு அன்று. இன்றும்—உரிமை பெற்று அரை நூற்றாண்டை அணுகும் நிலையில் உள்ள நாம், அவன் பாடல்களைப் பாடுவதோடு, அவன் பாடல் களைத் தேசிய உடைமையாக்கி விட்டதோடு அமைந்து அவர் கனவை நனவாக்கி, நாட்டினை நாடாக்கும் செயலில் முனைந்து செயலாற்ற மறந்து விட்டோம். அதனாலேயே நாட்டில் பல குழப்பங்கள்— மாறாட்டங் கள்— போராட்டங்கள்—கொலை, களவு போன்ற கொடு மைகள் நடைபெறுகின்றன. இத்தகைய அவல நிலையைப் போக்க நாம் ஒவ்வொருவரும் பாடுபட வேண்டும். ஆம்! அவன் கூறியபடி நாம் எல்லோரும் இந்நாட்டு மன்னரல் லவா!

நாடு பற்றிக் கூறிய வள்ளுவர் எல்லாம் இயைந்து பிறர் கையை நோக்காத நாட்டில் இன்னின்ன இருக்கக் கூடாது எனவும் காட்டுகின்றார். அவற்றுள் ஒன்றே பிணி. ஆம்! நாட்டில் நோய் அல்லது பிணி இருக்கக் கூடாது. ஒரு நாளைக்கு ஒரு மருந்தகம் கட்டிவிட்டோம், ஓர்

ஊருக்கும் மருந்தகம் இல்லை என்ற குறை இன்று இல்லை என்று கூறுவது—பெருமை கொள்வது—நாடாகாது. உள்ள மருந்தகத்தில், நாட்டில் பிணி இல்லையாதலால்—நோய் நலிவுறுத்தவில்லை; ஒருவர் கூட வரவில்லை—பலநாட்களாக—ஆண்டு முழுவதும் வரவில்லை என்று சொல்லுகின்ற நாடே நாடெனக் கூறத் தகுதி உடையது.

'உறுபசியும் ஓவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு' (734) என்பர் வள்ளுவர்.

பசி, பிணி, பகை இம்மூன்றும் எந்த நாட்டில் உள்ளனவோ அந்த நாடு நாடாகாது என்பது அன்று மட்டுமன்றி இன்றும் தெளிவாகக் காணும் காட்சியாகும். இதில், வள்ளுவர் மருந்து கொடுத்து நோய் நீக்க எண்ணற்ற மருந்தகங்கள் உடையதே நாடு என்று கூறவில்லை. கொடு நோய்—தீரா நோய்— எந்த நாட்டில் எட்டிக் கூடப்பார்க்கவில்லையோ அதையே நாடு என்கின்றார் அவர். இக்கருத்தையே பின் வந்த இளங்கோவடிகள், சீத்தலைச் சாத்தனார் போன்ற புலவர்கள் வலியுறுத்தியுள்ளனர்.

'பசியும் பிணியும் பகையும் நீங்கி
வசியும் வளனும் சுரக்கென'

வாழ்த்தி வள்ளுவமுதுமகன்

இந்திர விழாவினைப் பூம்புகாரில் அறிமுகம் செய்தான் என்று கூறுவர். வளம் பெருக்கி விட்டோம், செல்வம் கொழிக்கச் செய்து விட்டோம் என்று கூறுவதெல்லாம் இரண்டாந்தரமாகும். ஆனால் முதலில் செய்ய வேண்டுவது பசி, பிணி, பகை இவற்றை நாட்டிலிருந்து ஓட்டு

வதேயாகும். இந்த நிலையில் அன்று தமிழர் கண்ட முறையே மூலிகை முறையாகும். நோய்வந்து மருந்து உண்பதைக் காட்டிலும் அதுவாராமல் காப்பது அல்லவா அறிவுடைமை,

## வருமுன் காத்தல்

'வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்' (435)

என்று வள்ளுவர் கூறியது வாழ்வுக்கு அடிப்படையான—முதலான — உடல் நலத்துக்கு முற்றும் பொருந்திய ஒன்றல்லவா! ஆம்! நோய் வராமல் காப்பவன் எவனோ அவனே குறைவற்ற செல்வம் பெற்றவன். இதையே ஔவையார் 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்கிறார். வள்ளலார் முருகப்பெருமானிடம் 'நோயற்ற வாழ்வு நான் வாழ வேண்டும்' என வேண்டுகிறார். யாரும் 'நோய் வந்து விட்டது; மருந்தகம் போக வேண்டும்' என்று வேண்டுவதில்லை. நோய் வந்து—சிலவற்றிற்கு இலட்சக்கணக்கிலும் பல மருந்தகங்களில் செலவிட்டுப் பயனற்றுப் பாழ்பட்டு நிற்கும் இன்றைய பாரதமக்களுக்கு வள்ளுவர், பாரதி, இளங்கோவடிகள், ஔவையார், இராமலிங்கர் போன்றோர் கூறியவை புரியாதனவாகும். ஆம்! புரியின் நாடு நாடாகும்—அன்றேல் யார் அறிவார்?

'இத்தகைய நோய் வராத நல்வாழ்வுக்கு வழிகாட்டுவதே மூலிகைவளம். அதனாலேதான் அதன் வளமே நாட்டு வளம் என நான் கூறுகிறேன்.

திருவள்ளுவர் பின் 'மருந்து' எனவே ஓர் அதிகாரத்தில் பத்துப்பாடல்களை எழுதியுள்ளார். ஆனால், அதிலும் மருந்துண்ணாத நோயற்ற வாழ்வு பற்றியே முதல் நான்கு குறட்பாக்களை அமைக்கின்றார்.

'மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று' (941)

என்ற முதல் குறட்பாவிலேயே நோய்க்குக் காரணம் கூறி, அவற்றை அறிந்து தடுக்கும் நெறியில் மக்களை ஆற்றுப் படுத்துகின்றார். உரையாசிரியர்கள் 'உணவும் செயல் களும்' என்றும் 'உணவு, உறக்கம், இணை விழைச்சு' என்றும் உணவை முதலாக்கொண்டு அவை அளவுடன் இருக்க வேண்டும் என்றும் இல்லையானால் நோய் விளையும் என்றும் காட்டுவர் 'வளி முதலா எண்ணிய மூன்று' என்பதற்கு வாதப்பகுதி, பித்தப்பகுதி, கபப்பகுதி என்பர். இவற்றின் அளவு மிகுதலே நோய்க்குக் காரணம் எனக்காட்டி, இவை நிலையில் இருப்பதற்கே, முன்னர் எதிலும் மிகாநெறியை விளக்குகின்றார். வருமுன் காக்கும் நிலையில் வள்ளுவர் நோய்க்குக் காரணத்தை முதற்கூறினார். அடுத்து,

மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி யுணின்' (942)

என்ற குறட்பாவை அமைத்து அந்த அளவோடு உண்ணும் உணவும் நன்கு செரித்து, நீங்கிய பின்பே, அதன் திறன் போற்றி, மறுபடி உணவு கொள்ளவேண்டும் என்கிறார். ஒரு நாளைக்கு இரு பேருணவும் இருமுறை சிற்றுணவும் இடையிடை காப்பியும் பிறவும் உண்ணும் இன்றைய (அ)நாகரிக உலகுக்கு இது ஒரு வேளை ஏலாததாக இருக்கலாம். அதனாலேயே மருந்தகங்களில் இடமில்லா நிலை உண்டாகிறது. இங்கே வள்ளுவர் 'அற்றது போற்றி' என்கின்றார். போற்றி என்பது உயர் நிலையில் பயன்படும் சொல். கடவுளைப் போற்று கிறோம்; நல்லனவற்றைப் போற்றிப் பாதுகாக்கிறோம் என்று மிக உயர்ந்து வழங்கும் சொல்லை வள்ளுவர் இங்கே பயன்படுத்துகிறார் என்றால், அருந்தியது அற்ற நிலை

எவ்வாறு முக்கியமாகப் போற்றப்படவேண்டும் எனத் தெரிகிறது. எனவே நலவாழ்வுக்கே இக்குறள் வழிகாட்டி யாக அமைகின்றது. அடுத்த இரு குறட்பாக்களும்கூட இந்த வகையிலேயே அமைகின்றன.

'அற்றால் அளவறிந்து உண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு' (943) என்றும்

அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து (944) என்றும்

அவ்வாறு சீரணமாய ' பின்பும் அளவறிந்து உண்டான் நெடிது வாழ்வான் என்றும், அவ்வாறு அறிந்து, பசிவந்த பின் இயற்கைக்கு மாறல்லாதனவற்றை அளவே உண்ண வேண்டும் என்றும் காட்டியிருக்கிறார். அத்தகைய 'மாறு பாடில்லாத உண்டி மறுத்துண்ணின் ஊறுபாடில்லை உயிர்க்கு' என்று அடுத்த குறளிலும் வற்புறுத்துகின்றார். அங்கே உடம்பு பெற்றான் என்றும் இங்கே 'உயிர்க்கு' என்றும் கூறி, உடம்போடு உயிர்பொருந்தி, நெடிதுவாழ இதுவே வழி என வற்புறுத்தி யாவரும் நலம் பெற்று நல்வாழ்வு வாழ வழிகாட்டுகின்றார். பின் ஐந்து குறட் பாக்களிலே இவ்வாறு இல்லாதவன் பெறும் நோய் பற்றி யும் அப்படி நோய் பெற்றவன் தக்க வைத்தியரை நாட வேண்டிய நிலைபற்றியும், அவ்வைத்தியன் வந்த நோயா ளிக்கு எப்படி—எந்த வகையில், 'நோய் நாடி, நோய் முதல் நாடி, அதுதணிக்கும் வாய்நாடி 'வாய்ப்பச்செய்ய' வேண்டிய வகை பற்றியும் காட்டி, நோய் நீக்கம் பெற வழி வகுக்கின்றார். எனவே வள்ளுவரும் பிறரும் வையத்து மக்கள் நோய் பெறாது வாழும் நல்வாழ்வையே 'நோயற்ற வாழ்வையே' வற்புறுத்துவர். அந்த நோயற்ற வாழ்வுக்கு வழிகாட்டுவதே இன்றைய 'மூலிகை வளமே நாட்டு வளம்' என்ற தலைப்பு ஆகும்.

இந்தத் தலைப்பினை அன்பர், டாக்டர் வேங்கடேசன் அவர்கள் தம் 'மூலிகை மணி' இதழின் கொள்கையாகக்

கொண்டு அதை நம்பி வருகிறார். **'Prevention is better than Cure'** என்பது ஆங்கிலப் பழமொழி. வள்ளுவர் 'வருமுன்னர் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்' என்பார். எனவே வாழ்வின் எல்லாத்துறைகளிலும் முன் எச்சரிக்கையோடு இருந்து, வருமுன்னர்க் காத்துக் கொள்ளுதலே உயிர் வாழ்க்கைக்கு உரிய செயலாகும். 'வருமுன் காப்போன், வருங்கால் காப்போன், வந்தபின் காப்போன், என்று இந்த நிலையினை மூன்று மீன்களைக் கொண்டு நாட்டில் ஒரு கதை வழங்குவர். இரு மீன்பிடிப்பாளர், ஒரு குளக்கரையில் முன்னாள் மாலை வந்து, 'நாளை இதில் மீன் பிடிப்போம்' என்று கூறிச் செல்ல, வருமுன் காப்போன் அவர்கள் வருமுன் சிறுகால்வாய் வழியே தப்பி வேறு குளத்துக்குச் சென்றதென்றும், வருங்கால் காப்போன் அவர்கள் வருவதைக்கண்டு, அவசர அவசரமாக சிறு கால்வாய் வழி விரைந்து சென்றதால் இடித்தும் மடுத்தும் உடலில் காயங்கள் பெற்றுத் தப்பித்ததென்றும், வந்தபின் காப்போன் அவர்கள் வழியிலிருந்து தப்பிச்செல்ல முயன்ற போது கொல்லப்பட்டதென்றும் கூறுவர். எனவே, எதற்கும் வருமுன் காத்தலே சிறந்தது. அதிலும் எல்லாவற்றிற்கும் முக்கியமான உடம்பை வளர்ப்பதற்கு, தக்க உபாயங்களைக் கண்டறிந்து, வருமுன் காத்தலே வாழ்வாகும். திருமூலர்,

'உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே' என்பர்.

ஆம்! அத்தகைய உபாயங்களுள்-ஒன்று—சிறந்தது மூலிகைகளாலே—உணவுப்பண்டங்களாலே—காய், கீரை முதலியவற்றாலே நம் உடலை ஓம்புதலே நமக்கு வேண்டப்படுவது. இத்தகைய இயற்கை முறைகளைப் பண்டைத் தமிழர்கள் நன்கு அறிந்து, போற்றி உலகுக்கு உணர்த்தினர். இதையே சித்தவைத்தியம் என்றும் கூறுவர். வருவதறியும் சித்தர்கள் உடலுக்கும், உயிருக்கும் வரும்

நோய்களை முன்னறிந்து, கண்டு, நோயின்றி வாழ நம்மை ஆற்றுப்படுத்தியுள்ளனர்.

**உணவு—தொல்காப்பியர்—சங்ககால நிலை**

தொல்காப்பியர் காலத்திலும் சங்க காலத்திலும் பின் சமய வளர்ச்சிக் காலத்திலும் இத்தகைய நல்வாழ்வைக் காண முடிகின்றது. மிகப்பழங்கால முதற்கொண்டே தமிழர் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தனர். நிலத்தை நான்காகப் பிரித்து, அதில் வாழும் மக்கள் நிலைக்கு ஏற்பக் கடவுளர், உணவுவகை போன்றவற்றை அமைத்து சிறக்கப் பணியாற்றி தீதிலா வாழ்வு வாழ்ந்தனர். 'தெய்வம் உணவே' எனவே கடவுளுக்கு அடுத்து உணவினையே அவர்கள் குறியாகக் கொண்டனர். எனவே, உண்கின்ற உணவு வாழும் நி த்துக்கும் மக்கள் உடல்நிலைக்கும் பிற சூழல்களுக்கும் ஏற்ப அமையின் நோய் வராது என்பதே அவர் தம் குறிக்கோள்—அது உண்மையுங்கூட. தொல்காப்பியர் காலத்தே நால்வகை நிலத்து மக்கள் நலம் காக்கும் உணவுகளை உண்டு வந்ததோடு, நல்ல பழக்க வழக்கங்களையும் கொண்டு நிலைத்து, நோயின்றி, நலமாக வாழ்ந்தனர் எனக் காணமுடிகின்றது. எனவே நோய் வந்தபின் மருந்தை நாடுவதிலும் வருமுன் காக்கும் வகையே நம் நாட்டுப் பழைய முறை எனத் தெளிதல் வேண்டும்.

சங்க காலத்திலேயும் அத்தகைய இயற்கை வாழ்வே இயல்பாக அமைந்திருந்தது. நானில மரபும் தெய்வமும் உணவும் போற்றப்பெற்றன. அவர்கள் உணவில் 'தேன்' முக்கிய' இடம் பெற்றதென்பதை இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன. மரம், செடி, கொடிகள் மதிப்புடன் போற்றப்பெற்றன. பாரி முல்லைக்குத் தேர் கொடுத்த வரலாறு நாடறிந்த ஒன்று. நால்வகை நிலத்து மக்களும் எவ்வெவ்வாறு வாழ்ந்து சிறந்தனர் என்பதைச் சிலப்பதிகாரம் நன்கு விளக்குகின்றது. அவை

பற்றியெல்லாம் விளக்கின் எல்லையற்று விரியும். மஞ்சளும் இஞ்சியும், பாலும் இளநீரும், மிளகும் நெல்லிக்கனியும் பிறவும் அக்காலத்தில் மக்கள் வாழ்வில் சிறக்க இடம் பெற்றுள்ள நிலையினை நாம் காண்கின்றோம். ஔவைக்கு நெல்லிக்கனி ஈந்து அதிகன் அழியாப் புகழ் பெற்றான்.

'சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந் தனையே' என்று ஔவை

நெல்லிக்கனியால் சாதல் நீங்கப்பெற்றதாகக் கூறுகின்றார். அவர் நெடுங்காலம் வாழ்ந்தமைக்குக் காரணம் அந்த நெல்லிக்கனிதான்:

**காலமும் இயற்கையும்**

உணவு மட்டுமன்றி உறையுள் வகையிலும் அவ்வாறே மக்கள் வாழ்ந்துள்ளனர். கோடையிலே பரந்த வெளியிலே—மணற்பரப்பிலே—ஆற்றங்கரையிலே —கடற்கரையிலே விழா முகத்தாலும் வேறு வகையிலும் தங்கி வாழ்ந்தனர். மாரிக்காலத்தே இல்லுள் இருந்து இன்பம் துய்த்தனர். 'தையும் மாசியும் வையகத் துறங்கு' என்று ஔவையார் கூறியபடி கொடிய பனிக்காலத்தில் வைக்கோலால் அமைந்த குடில்களில் வாழ்ந்தனர். சிலர் 'தையும் மாசியும் வையகத் துறங்கு' என்றால் மற்ற மாதங்களில் 'வானகத்து உறங்குவதா' எனப் பொருளறியாது பேசுவர். 'வை+அகம்' என்றால் வைக்கோலால் அமைந்த வீடு அல்லது குடில் என்பது பொருள். வைக்கோல் பனியினை உள்ளே விடாது—ஓடுகள் கூடப் பனியினை உள்விடும். ஆனால் வைக்கோல் விடாது. கிராமங்களில் வயல்களில் அறுவடைக் காலமாகிய அந்தத் தை, மாசியில் காவன் மக்கள் அத்தகைய வைக்கோல் அமைந்த பந்தல்களில்— சிறுகுடிகளில் தங்குவதை இன்றும் காண்

கின்றோம். பனி அவர்களை ஒன்றும் செய்யாது. 'பனி கொடுமை வாய்ந்தது—மக்கள் இதை நன்கு உணர்வர். 'பனிக்காலம் நல்லது' என்பது ஒரு தொடர்—'ஐயோ அது கொடிய காலம் அல்லவா?' என்று கேட்டால் ஆம்! என்று கூறி, அத்தொடரை, 'பனிக்கு+ஆலம்+நல்லது' எனப் பிரித்து, பனிக்காலத்தைக் காட்டிலும் விடம் நல்லது எனப் பொருள் காட்டுவர். எனவே விடத்தினும் கொடியது பனியாகும். அதற்கு மாறாகவே 'வையகக்' குடில்கள் அமைகின்றன. நெல்லிக்கனியும் அக்காலத்தில் பழுத்துஉதவுவதே. பனிக்கு மாற்று நெல்லிக்கனியாகும். வைகுண்ட ஏகாதசி—சிவராத்திரி போன்ற விரத முடிவில் கிராமங்களில் இந்த நெல்லியினையே பயன்படுத்துவர். காலம் அறிந்து கடவுள் அளித்த வரப்பிரசாதம் அது. இன்னும் அது போற்றப்பெறுகின்றது. 'சியவனப் பிரா சனம்' என்ற பெயரால்—ஒரு முனிவர் பெயரால் அது போற்றப் பெறுகின்றது; லேகியமாக மக்கள் நலம் காக்கப் பயன்படுகிறது. அப்பெயர் அதற்கு எப்படி வந்தது?

ஒரு குளத்தின் கரையில் நிறைய நெல்லி மரங்கள் இருந்தன. அவற்றுள் பழுக்கும் நெல்லிக்கனிகள் அக் குளத்தில் விழுந்து, நீரோடு நீராக அமைந்து நலம் தந்து நின்றன. 'சியவனர்' என்ற முதிய முனிவர் அக்குளக்கரை யில் சில நாள் தங்கினார் போலும். அதன் நீரை அடிக் கடி பருகியிருப்பர். சில நாளில் அவர் முதுமை நீங்கி இளமை பெற்றுத் திகழ்வதைக் கண்டார்-திகைத்தார்-காரணத்தை ஆராய்ந்தார். அக்குளத்து நீரே காரணம் என அறிந்தார். அதற்குக் காரணம் சுற்றியுள்ள நெல்லி மரங்கள் அளித்த கனிகளே என உணந்தார். நெல்லிக் கனியை வாழ்த்தினார். அவ்வாறு முதுமை மாறி இளமை எய்திய அந்த முனிவர் பெயராலேயே நெல்லிக்காய் லேகியம், 'சியவனப் பிரசாதம்' என வழங்குகின்றது. ஔவையாரைப்போல அவரும் நெடுங்காலம் வாழ்ந்திருந் திருப்பார்.

**வேம்பும் மஞ்சளும்**

நெல்லிக்கனி மட்டுமன்றி, இயற்கை வழியே இறைவன் பிற உணவுப்பொருள்களையும் காலந்தோறும் படைக்கின்றார். வேனில் தொடங்குமுன் வேம்பு பூத்துக்குலுங்குகின்றது. அப்பூவை அப்போதே பயன்படுத்துவதோடு உலர்த்தி வைத்து ஆண்டின் பிறபகுதிகளிலும் பயன்படுத்துவர். வேம்பு இலை-பூ-காய்-கனி அனைத்துமே கோடையிலே வரும் வெப்பு நோய்களைத் தடுக்கும் ஆற்றல் வாய்ந்தன. அப்படியே அக்காலத்தில் உண்டாகும் பனைநுங்கும் கோடை வெம்மையைத் தணிப்பது பனை அச்சித்திரை வைகாசியிலேதான் பயன் தரும்-ஆம்-மக்கள் நலம் கருதி இப்படியே எலுமிச்சை, அவரை போன்றவையும் காலந்தோறும் விளைந்து மக்கள் நல்வாழ்வுக்காகவே பயன்படுகின்றன. வேப்பிலையை அம்மை வார்க்கும்போது குடிக்கும் நீரிலும் படுக்கும் பாயலிலும் பிறவற்றிலும் பயன்படுத்தும் முறை இன்றும் உள்ளதே! அந்த நோயினை 'அம்மை' என்றும் 'மாரி' என்றும் கூறி, வேப்பிலையினை பயன்படுத்துவர் அன்றோ! அந்த மாரி அம்மைக்குக் கோயில் அமைக்கும் போதும் வேப்பமரத்தின் கீழன்றோ அமைக்க ஏற்பாடு செய்துள்ளனர். 'வேம்பின் இலை உடுத்து—கானத்து எருமைக் கருந்தலை மேல் நின்றாயால்' என்று துர்க்கை பாராட்டப் படுகிறாள்ன்றோ. வீடுகளின் அருகே —சுற்றி வேம்பு இருப்பின் நோயணுகாது என்பது உண்மை. நான் என் வீட்டின் பக்கங்களில் வேம்பினை வளர்த்தே வாழ்ந்து வருகின்றேன். பள்ளி, கல்லூரிகளிலும் வேம்பு நிறைய உண்டு.

நெல்லி, வேம்பு போன்று மற்றொரு விளைபொருள் மஞ்சளாகும் 'மஞ்சளும் இஞ்சியும்' விளையும் நிலங்களைப் பற்றி இளங்கோவடிகள் மருத நிலத்தை—காவிரி எல்லையினை விளக்கும்போது நன்கு காட்டுவர். இன்றும் தமிழ் நாட்டில் மஞ்சள் விளைகின்றது. பொங்கல் மஞ்சள்

செடி இன்றி நடைபெறாது. உள்ளத்துக்கும் உடலுக்கும் உற்ற பொருள்களுக்கும் மஞ்சள் பலவகையில் உதவுகின்றது. மஞ்சளைக்கறி மஞ்சள் என்றும் கப்புமஞ்சள் என்றும் இருவகையாகக் காண்பர். 'கறி மஞ்சள்'' பொடி ஆக்கப் பெற்று உணவுடன் கலந்து உண்ணப் பயன்படுகின்றது. உடலுக்குள் உண்டாகும் பூச்சிகளை அழித்து, உடலுக்கு நேரும் பல வியாதிகளை அது நீக்குகின்றது. அப்படியே பெண்கள் கப்புமஞ்சளைப் பூசிக்கொள்வதால் உடல் மாசு நீங்கி, முகமும் அகமும் நலம் பெற்று அமைத்து, மலர்ந்து சிறக்க வாழ்கின்றனர். நம் நாட்டில் வாயிற்படிகளுக்கும் மஞ்சள் பூசும் மரபு உண்டு. தமிழர் கலை நலம் கண்டவர்கள். வாயிற்படிகளை அழகுறப் பல்வேறு கலை நயங்கள் பொருந்த அமைப்பார்கள். இக்காலத்தைப் போன்று வெறும் கட்டைகளாக அக்காலத்து வாயிற்படிகள் அமையவில்லை. அவை கலைத்தூண்களாகவே அமைந்தன. அக்கலை நயத்தில் சிறுமுழைகள்-உள்ளீடுகள் பல இருக்கும். அவற்றுள் பல பூச்சிகள் தங்கிக் குடியிருக்கவும் வாய்ப்பு உண்டு. அவற்றைக் கையால் களைய முடியாது. இந்த மஞ்சள் பூச்சினால் அவை அழிந்து கலை நலம் சிறக்கும். வாயிற்படி அழகாகவும் அமையும். இவ்வாறு மக்கள் அகவாழ்விற்கும் புறவாழ்விற்கும் மருந்தாய்— வாழ்வின் ஒளி விளக்கமாய் அமைவதோடு, அவர் தம் வாழ்வின் அணிகலமாக—மங்களகரமாக—தாலிக்கயிறாக அமைகின்றது, அந்த மஞ்சள் அணிந்த கயிறு உடலில் இருந்தால் உடலுக்கு வரும் பலநோய்கள் அணுகா. இன்று அந்த நிலை நகர மக்களைப் பொறுத்த வரை மாறி வருகின்றது. அதனால் மருந்தகங்கள் வளர்கின்றன. இவ்வாறு இயற்கையோடு பொருந்திய— இயற்கை தந்த காய், கனி கிழங்குகளைக் கொண்டு மனிதன் வாழ்வானால், தேரையர் கூறியபடி நமனார்க்கு அங்கே இடமில்லை என அடித்துக் கூறலாம்.

**தெய்வ இருப்பைகள்**

சிலம்பிலும் பிற காப்பியங்களிலும் தழையும் பூவும் இலையும் செடியும் மரமும் பிற இயற்கை நிலைகளும் தெய்வம் தங்கும் இடங்களாகவும் அத்தெய்வங்கள் அணியும் மாலை, மலர்களாகவும் குறிக்கப்பெறுகின்றன. அத்தெய்வங்களை வணங்குபவர்கள், அத்தழை, மலர் முதலியவற்றின் காற்றால் ஈர்க்கப்பெற்று உடல் நோயும் உள நோயும்—ஏன்?— உயிர் நோயும் நீக்கப்பெறுவர் என அறிதல் வேண்டும் வேட்டுவ வரியில் துர்க்கை இருந்த நிலையினையும் சூழலையும் பலவாறு காட்டுவர் இளங்கோவடிகள்.

'நாக நாறு நரந்தை நிரந்தன
ஆவும் ஆரமும் ஓங்கின எங்கணும்
சேவும் மாவும் செறிந்தன கண்ணுதல்
பாகம் ஆளுடை யாள்பலி முன்றிலே'

—என்று அவள்

திருக்கோயிலில் சுரபுன்னை, நரந்தை, சந்தனம், ஆச்சா அழிஞ்சல் போன்ற மரங்கள் நிரைந்திருந்தன என்கிறார். இவற்றின் வேரும் பட்டையும் பூவும் பிறவும் நோய் தீர்க்க வல்லன. மேலும், அங்கே இருந்த நல்ல சூழலை,

'செம்பொன் வேங்கை சொரிந்தன சேயிதழ்
கொம்பர் நல்இல வங்கள் குவிந்தன
பொங்கர் வெண்பொரி சிந்தின புன்கிளந்
திங்கள் வாழ்சடை யாள்திரு முன்றிலே.

மரவம் பாதிரி புன்னை மணங்கமழ்
குரவங் கோங்கம் மலர்ந்தன கொம்பர்மேல்
அரவ வண்டினம் ஆர்த்துடன் யாழ்செயும்
திருவ மாற்கிளை யாள்திரு முன்றிலே—

என அவர் காட்டுவர். தெய்வத் திருக்கோயில்களெல்லாம் இவ்வாறு இயற்கையோடு இயைய, அங்கே சென்று வழிபடும் மக்கள் தம் நோய் நீங்கி நலமுற்று வளம்பெறுவர் என்று கூறாமல் கூறுகின்றனர்.

பிற்காலப் பெருங்கோயில்களெல்லாம் இந்த நல்ல மருந்தாகும் மரங்கள் அடியில் இருந்த இறைவனுக்கெனவே எழுப்பப்பெற்றன அம்மரங்கள், **'மருந்தாகித் தப்பா மரத்தற்றால்'** என்று வள்ளுவர் உலகறிந்த உண்மையினை உவமையால் கூறியபடி, தம்மை—தம்கீழ்த் தங்கும் இறைவனை வணங்குவார்க்கு, வாழ்வும் வளமும் அளித்துச் சிறப்பித்தன. கோயில்களில் சிதம்பரம் தில்லை வனமாகவும், அறுபத்து நான்கு திருவிளையாடல்களுக்கு இடமாகிய மதுரை கடம்பவனமாகவும் இருந்தனவே. திருவொற்றியூரில் 'மூவாத திருமகிழும்', மயிலையில் புன்னையும்,காஞ்சியில் மாவும், குற்றாலத்தில் குறும்பலாவும் இன்றும் தலவிருட்சங்களாக உள்ளமை யாவரும் அறிந்ததே. இவ்வாறே தமிழ்நாட்டுக் கோயில்களெல்லாம் மரநிழலில் அமைந்திருக்க, அவற்றையே தேவார முதலிகளும் மணிவாசகர் போன்றோரும் பாடிப்போற்றினர். பின்னர் சோழர்காலத்தே—பல்லவர் காலத்தே— அவற்றைச் சுற்றிப் பெருங்கோயில்கள் எழுந்தன— எனினும் —தலவிருட்சங்களை அவர்கள் போற்றி இன்றளவும் பாதுகாக்கும் வகையிலேயே அமைத்துள்ளனர். மாணிக்கவாசகருக்கு இறைவன்-எல்லா இடங்களையும் விட்டுக் குருந்த மரத்தின் கீழ்தான் அருள் செய்தான். நால்வருக்கு அறமுரைத்த ஆண்டவன் அதைக் கல்லால மரத்தின் கீழே தான் செய்தான். புத்தருக்கு ஞானோதயம் உண்டானது அரசமரத்தின் அடியில்தான்—அவர் நிர்வாணமாகி—பரத்தின் பெருந்தன்மை எய்தியதும் அதே மரத்தின் கீழ்தான். அத்தகைய அரசினையும் வேம்பினையும் இணைத்து,

அதன்கீழ் நாகதேவதையை அமைத்து, இன்றும் வழிபட்டுப் பயனடைவர் பல்லாயிரவர் உளரன்றோ?

**போர்க் களங்களில்**

வழிபாட்டுத் தலங்கள் • மட்டுமன்றி போர்க்களங் களிலும் பூக்களையே சூடினார்கள் என்பதைத் தொல்காப் பியமும் பின் வந்த இலக்கண இலக்கியங்களும் நமக்கு நன்கு உணர்த்துகின்றன. வெட்சியும் கரந்தையும், தும்பை யும் காஞ்சியும், நொச்சியும் உழிஞையும், வாகையும் சூடி அக்காலத்தவர் போர் விளைத்தும் வென்றும் வாழ்ந்த வாழ்வினைத் தொல்காப்பியப் புறத்திணை இயல், புறப் பொருள் வெண்பாமாலை, புறநானூறு போன்ற இலக்கண இலக்கியங்கள் நன்கு எடுத்துக்காட்டுகின்றன வன்றோ!

'நெடுநல் வாடை' எனப் பத்துப்பாட்டுள் வரும் நக்கீரர்தம் பாடல் அகப்பாடலா அன்றிப் புறப்பாடலா என்ற ஐயத்தை எழுப்புவதே 'வேம்பு' என்ற தழைதான். 'வேம்புதலை யாத்த நோன்காழ் எஃகம், முன்னோர் முறைகாட்ட' (176—177) என்ற அடிகளில் வேம்பு குறிப் பிடப் பெறுகின்றது. போர்மேற் சென்ற தலைவர் (பாண்டியர்) குறித்த காலத்தில் வராத காரணத்தால் தலைவிக்கு— பாண்டிமாதேவிக்கு —வருத்தம் உண்டாக, 'இன்னே வருவர் தலைவர்', என்று தேற்றும் முகத்தால் இப்பாடல் அமைகின்றது. இதில் 'வேம்பு தலையாத்த நோன்காழ் எஃக'மொடு போர்க்களத்தே— காவலர் இரவிடைச் சுற்றிவரும் நிலையினைச் சுட்டி, அத்தகைய போர்க்களத்தில் வெற்றி கண்ட தலைவன் (பாண்டியன்) இன்னே திரும்பி வருவான் என நக்கீரர் அழகாக அப்பா ட்டலைப் பாடி 'வாடையை' நல்வாடை யாக்குகிறார். இதில் 'வேம்புதலை யாத்த' என்பதால் இந்தத் தலைவன் பாண்டியனே ஆவான் என்றும், தலைவர் பெயர் கூறப்

படாதனவெல்லாம் அகப்பாடல்களால் ஆனமையின், இங்கே பாண்டியனைச் ' சுட்டியபடியால் இது புறப் பாடலே எனச் சிலர் முடிவு கட்டுவர்.

ஆயினும் வேம்பு மருந்தாக, வேம்பின் தழை மருந் தமை உடன் சுற்றாக — ஆடையாக, அதன்காற்று நோய் நீக்குவதாக, போர்க்களத்தில் உண்டாகும் புண்களையெல் லாம் நீக்குவதாக அது அமைகின்றது என்றும் அதனால் காவலர் தம் வேலிலும் வாளிலும் அம்பிலும் கொம்பிலும் இந்த வேம்பின் தழையை எப்போதும் சுற்றி வைத்துக் கொண்டே இரவு பகலாகப் போர்க்களத்தைச் சுற்றி வருவார் என்றும், எனவே, இது பொது நிகழ்ச்சியாக எல்லாப்போர்க்களங்களிலும் நடைபெற்ற நிகழ்ச்சியாத லின், பாண்டியன் மாலையாகிய வேம்பினைக் குறிக்காது என்றும், எனவே இது அகப்பாடலே எனவும் அறுதியிடு வர் சிலர். இதை நோக்கின் வேம்பு போர்க்களப் புண் களுக்குத் தூய மருந்தாய் அமைந்த நிலை நன்கு தெளிவுறும்.

பாண்டியன் மட்டுமன்றி வேந்தர் ஒவ்வொருவருமே தத்தமக்குத் தனித்தனியாகப் பூவும் மரமும் கொள்வர். வேம்பு பாண்டியனுக்கும், ஆத்தி சோழனுக்கும், கடம்பு சேரனுக்கும் அமைந்ததாக எல்லா இலக்கியங்களும் நமக்கு உணர்த்துகின்றனவே. எனவே, மலர்கள் வெறும் மணத் துக்காக அன்றி மருந்துக்காகவும் மகிழ்ச்சிக்காகவும் வீரத்துக்காகவும் உள்ளன என அறிதல் வேண்டும். அப்படியே மரங்களும். அதனாலேயே பழங்கால அரசர் கள் காவல் மரங்களைத் தத்தமக்கு உடைமையாகக் கொண்டனர். மாற்றான் காவல் மரத்தை வெட்டினாலே வெற்றி பெற்றதாகக் காட்டும் வரலாறுகள் சங்க இலக் கியத்தில் உள்ளனவே. எனவே மருந்தாகித்தப்பா மரமும் செடியும் கொடியும் பூவும் கிழங்கும் காயும் கனியும்

மனிதனை — மனிதனாக — நோயற்றவனாக வாழ வைத்தன என்பது தேற்றம்.

**வீட்டிலும் வாழ்விலும்**

இவ்வாறு வழிபாடு செய்யும் தெய்வநிலையங்களிலும் போர்க்களங்களிலும் மருந்தென அமைந்து மரங்களும் தழைகளும் கிளைகளும்கொடிகளும் இருப்பதோடு,மக்கள் தங்கள் வீட்டிலும் வாழ்விலும் கூட நோய்த்தடுக்கும் நிலையில் இவற்றைப் பயன்படுத்தி வந்துள்ளனர். நாள் தோறும் இன்று நாட்டில் கொள்ளப்படும் தம்பலம் என்னும் வெற்றிலைப்பாக்கு அன்றே இருந்ததென்பதனைக் கலித்தொகை, 'தையால் தம்பலம் தின்றியோ' (61—31) எனக் காட்டுகின்றது. புகையிலை இன்றி, வெற்றிலைப் பாக்கு உணவுக்குப்பின் கொள்ளுதல் உடல் நலத்துக்கு ஏற்ற ஒன்றெனை இன்றைய மருத்துவரும் கொள்ளுகின்றன ரன்றோ! மண நாட்களிலும் பிற சிறப்புக்களிலும் விருந் துண்டபின் அந்த மீதூண் நன்கு கழிய இது பயன்படு மல்லவா! தலைக்கு எண்ணெய் பூசுதலும் மலர் அணிதலும் அழகுக்கு மட்டுமன்று. இன்றைய உலகில் எத்தனையோ விளம்பரங்கள் வர, அவற்றால் மயக்குண்டு கண்டதைப் பூசி—வெளுப்பைக் கருப்பாக்க நினைத்துப் பல பூசி—தம் நலத்தைக்கெடுத்துக்கொள்ளும் அவலநிலை அக்காலத்து இல்லை. மகளிரும் மைந்தரும், இயற்கையில் வடித் தெடுத்த எண்ணெய், பூ, தழை இவற்றையே பூசியும் புனைந்தும் அழகுபடுத்தியும் தம் நலம் காத்து வந்தனர். காதில் தளிர் அணியும் சிறப்பினையும் பிறவற் றையும் பரிபாடல்—

'சாய் குழை **பிண்டித் தளிர்** காதில் தையினாள்;
பாய் குழை நீலம் பகலாகத் தையினாள்
குவளைக் குழைக்காதின் கோலச் செவியின்
இவள் செரீஇ நான்கு விழி படைத்தாள்' (11.95—98)

எனக்காட்டுகின்றது. கோவலர் பகன்றைக் கண்ணியைத் தலைமாலையாக அணிவதை ஐங்குறுநூறு.

> **'பகன்றைக் கண்ணிப் பல்லான் கோவலர்**
> கரும்பு குணிலா மாங்கனி யுதிர்க்கும்
> யாண ரூர்! நின் மனையோள்
> யாரையும் புலக்கு மெம்மைமற் றெவனோ'
> எனக் காட்டுகிறது. (87,/3)

திருமுருகாற்றுப்படை,

> 'சுரும்பு உணத்தொடுத்த பெருந் தண் மாந்தழை
> திருந்து காழ் அல்குல் திளைப்ப உடீஇ' (203-204)

என மகளிர் இடையில் தழை அணிவதை நமக்குக் காட்டு கிறது. தலைக்கு எண்ணெய், சாந்து முதலியவை பூசுவது பற்றியும் சங்க இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்றன.

> 'வெண்ணெய் நீவிய, சுரிவளர் நறுங்காழ்த்
> தண்ணறுந் தகரம் கமழ மண்ணி' (குறி—107—108)

என்று பத்துப்பாட்டில் குறிஞ்சியும்,

> 'தகரம் நீவிய துவராக் கூந்தல்
> வதுவை மகளிர்' (பதிற்று89—16—17)

எனப் பதிற்றுப்பத்தும் நமக்குக் காட்டுகின்றன. கண்ட கண்ட உடையைக் கண்ட காலத்து கண்டபடி அணியும் இக்கால மகளிர் உணரும் வகையில் காலத்துக்கு ஏற்ற உடை அணிவதையும் பட்டினப்பாலை நமக்கு உணர்த்து கின்றது. தமிழ் நாட்டு வெம்மைக்கு ஏற்ற கைத்தறி ஆடைகளை, உடலில் காற்றுப் புகுந்து நலம் பயக்கும் வகையிலும் அதே வேளையில் மறைக்க வேண்டியவற்றை மறைக்கும் வகையிலும் நம் நாட்டு மகளிர் அணிதலே

நோயற்ற வாழ்வுக்கு ஏற்றதாகும். எந்தெந்தப் பொருளையோ கொண்டு இடையிடை சிறு புரைகள் இல்லாத தகடென அமைந்தவற்றை உடலில் இறுக அமையும் வகையிலும் அதே வேளையில் அக உறுப்புகளை வெளிக் காட்டும் வகையிலும் இன்று உடையணியும் பலருக்கு இந் நோயற்ற வாழ்வு இல்லை. மருந்து அவர்கள் முதல் உணவாக அமையும். தமிழ்நாட்டில் குளிர்காலத்துக்கு ஏற்ற கம்பளி அல்லது பட்டு உடையாக அமைய, வெய்யிற் காலத்து நூலால் ஆகிய கைத்தறி ஆடைகளே ஏற்புடைத்து. கோடைக்காலத்தில் மகளிர் 'பட்டு நீக்கித் துகில் உடுத்து' (பட்டின—106) வாழ்ந்தனர் என உருத்திரங் கண்ணனார் தம் பட்டினப்பாலையில் காட்டுவர். இவ்வாறு அணிவதிலும் உடை உடுப்பதிலும் கூடப் பழங்கால மக்கள் நோய் அணுகா வகையில் வருமுன் காப்போராய், உண்ட உணவு செரித்தபின் உண்பவராய் வாழ்ந்து நோயிலராக வாழ்ந்தனர். நான் மேலே காட்டியபடி விழா அறைவோன் இந்த உண்மையைத்தான் 'பசியும் பிணியும் பகையும்' நீங்கி எனக்கூறி விழா நாட்களில் முரசறைகின்றான். அவ்வாறு உண்ணும் உணவு பற்றியும் அது அளிக்கும் விதம் பற்றியும் பத்துப்பாட்டில் பாணாற்றுப் படைகள் பலவகையில் விளக்குகின்றன. அவற்றுள் ஒன்றைக்கண்டு அமையலாம்.

இன்று அரிசி உணவு கொள்ளுகின்ற நாம் நன்றாகத் தீட்டிய அரிசியினையே உண்கின்றோம். உமிநீங்கித் தவிடு போகாத—முளை அழியாத அரிசியை உண்பதே நலத்துக்கு ஏற்றதென நல்லவர்,— மருத்துவர் கூறுவர். கைக் குத்தல் அரிசியே சிறந்தது எனவும் அதையே உண்ண வேண்டும் எனவும் அண்ணல் காந்தி அடிகளாரும் பிறரும் கூறி வந்தனர். சில ஆண்டுகளுக்கு முன்கூடக் கைக்குத்தல் அரிசிக்குச் சிறப்பு இருந்தது. தமிழ்நாட்டின் தென்பகுதியில் சில உணவுச்சாலைகளில் 'கைக்குத்தல் அரிசிச் சாப்

பாடு' என்ற விளம்பரப்பலகை இட்டிருந்ததை நான் கண்டிருக்கிறேன். ஆனால் காந்தியின் கொள்கைகள் எல்லாவற்றையும் காற்றில் பறக்க விட்டது போன்று இந்தக் கொள்கையினையும் இன்று நாம் கைவிட்டோம். ஆம்! இவற்றையெல்லாம் விட்டு விட்டு. நோய்வாய்ப்பட்டு, 'எனக்கு மாதம் ஆறாயிரம் ஐயாயிரம் வயித்தியச் செலவுக்கு ஆகின்றது' எனப் பெருமையாகப் பேசிக்கொள்ளும் காலத்தில், நாம் வாழ்கின்றோம். தடுக்கி விழுந்தால் தண்டளிர் கீரைகளில் மேல் விழும் நிலைமாறி தடுக்கி விழுந்தால் மருந்தக வாசல் எனும்படி தெருவுக்குத்தெரு தனியார் மருந்தகங்கள் பல்கிப் பெருகும் நாள் இது. எனினும் நான் முதலிலே கூறியபடி மருந்தகம் பல உள்ளன என்று கூறுவது நாடாகாது; சுடுகாடாக அமையும். 'உள்ள மருந்தகத்துக்கு ஒரு நோயாளிகூட வரவில்லையே' எனக் காணும் நாடே நாடாகும். இங்கு அருஞ்சுரத்தின் வெம்மை தணியப் பலாக்காய் தின்றதை நமக்கு ஐங்குறு நூறு நிலைநாட்டுவதைக் காணலாம்.

'அத்தப் பலவின் வெயிறின் சிறுகாய்
அருஞ்சுரஞ் செல்வோர் அருந்தினர் (351) என்கிறது.

நான் மேலே கூறிய முளை நீங்கப் பெறாத அரிசிச் சோற்றினை அளித்த பெருமையினை,

'முகில் தகை முரவை போகிய
முரியா அரிசி விரல் என நிமிர்ந்த
நிரல் அமை புழுக்கல்
பரல் வறைக் கருனை, காடியின் மிதப்ப
அயின்ற காலை, பயின்று இனிது இருந்து,
(பொரு—112—116)

எனப் பொருநர் ஆற்றுப்படை நமக்கு நன்கு எடுத்துக்காட்டுகின்றது 'முல்லை மொட்டுப் போன்ற வரியற்ற நெடு

முரியாத அரிசி' என நச்சினார்க்கினியர் இதற்கு உரை எழுதுவர். இதில்' புழுக்கல், என்பதனைப் புழுங்கல் அரிசி, எனக் கொள்வர். உடல் நலத்துக்குப் புழுங்கல் அரிசிச் சோறே ஏற்றது என்பது பழங்காலத்தவர் கொள்கை. புழுங்கல் அரிசிச்சோற்றில் இரவில் நீர் ஊற்றி வைத்து விட்டு, மறுநாள் காலையில் 'நீராகாரம்' எனவே அதைக் கிராம மக்கள் உண்டதை நான் இளமைக் காலத்தில் கண்டிருக்கிறேன். அவர்கள் நல்ல உடற்கட்டு உடையவர் களாய், உலையா உழைப்பும் ஊக்கமும் உடையவர்களாய் மருந்து என்பது இன்னதென அறியாதவர்களாய் வாழ்ந்து வந்தனர் என்பதையும் கண்டிருக்கிறேன். நான் மேலே காட்டியபடி சில உணவுச் சாலைகளில் 'புழுங்கல் அரிசி உணவு' என்றும் 'மண்பானைச் சமையல்' என்றும் விளம் பரப் பலகைகள் தொங்குவதையும் கண்டிருக்கிறேன். இன்று அவையெல்லாம் கனவாக ஆயிரக்கணக்கான மருத்துவ நிலையங்கள் வளர்வதையும் அவற்றில் கூட்டம் பெருகுவதையும் காண்கின்றேன். காலத்தேவன் கணக் கீட்டுக் கோலம் போலும் இது!

## மருந்து கொடுக்கும் வகை

இனி, சங்க இலக்கியம் மருந்து கொடுக்கும் வகையி னையும் நமக்குக் காட்டுகிறது.

'நோய்நாடி நோய்முதல் நாடி அது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்' (8) என்றும்
'உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்(று)
அப்பால் நாற்கூற்றே மருந்து (10) என்றும் வள்ளுவர்

நோய் வாரா வழியினையெல்லாம் முன்னே கூறி, ஒரு வேளை இன்று நாம் வாழ்வது போல அவர்சொல்லை ஏட்டிலும், உந்து வண்டியிலும், அலுவலகத்திலும் எழுதி வைத்து விட்டு, 'பார் பார்' என்று காட்டி, தம் வாழ்வில்

மறப்பார் உளர் எனக்கருதி கடைசி மூன்று குறட்பாக் களில் அவ்வாறு தடுக்க வகையறியாத் தன்மையாளருக்கு, மருந்து கொடுக்கும் வகையினையும் அதனைத் உண்ணும் வகையினையும் அதனை தேர்ந்து தெளியும் வகையினை யும் கூறுவது போன்று எடுத்துக் காட்டுகின்றார்! சங்க காலத்தில் நோய் நீக்கம் பெற்ற நல்வாழ்வுக்கு இடையில் ஒரு வேளை நோய் பெறின் அதை நீக்க மருத்துவன் என்ன செய்ய வேண்டும் என்பதையும் பல பாடல்கள் காட்டுகின்றன. அவற்றுள் ஒன்றை மட்டும் இங்கே கண்டு அமைவோம்.

தலைவனோடு களவுப்புணர்ச்சியில் தன்னை மறந்து தலைவனோடு இன்புற்ற தலைவி, பின் பிரிந்தவன் வரவில்லை எனக் கவல்கின்றாள். அவ்வருத்தத்தால் உடல் வாட, மற்றார் மறையை அறிந்து கொள்ளும் நிலை உண்டாகுமோ என அஞ்சுகிறாள் தோழி; அவளைப் பல வழியில் தேற்றியிருப்பாள். எனினும் அவள் ஆற்றாமை மீதூறுகின்றது. அவள் நோயறிந்து, காதல் பெருக்கறிந்து தலைவன் வந்து விட்டான். அப்போது அவனைப்புகழ் கின்றாள் தோழி. நோய்பெற்றவன், அவன் கேட்டதை எல்லாம் கொடுத்து உடம்பைக் கெடுத்து விடாது, மருந்து ஆய்ந்து கொடுத்த மருத்துவன் போல்—உரிய வேளையில் வந்து நிற்கின்றான் என உணர்த்துகின்றாள். அவனை மருத்துவன் என்று கூறவில்லை. 'அறவோன்' என்கின்றாள். ஆம்! அவள் இயற்கைப் புணர்ச்சி முடிந்த உடனேயே அவனைப் பிரியாதிருக்க நினைக்கின்றாள். பின் இடந் தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என முறை முறையாக நிகழினும் அவனோடு பிரியாது உடன் உறை வையே அவள் விரும்புகிறாள்' என்றும், மருத்துவன் வேட்டது கொடாது, காலம் பார்த்து உரிய வேளையில் மருந்து தருவது போல, வந்து கலந்து பின் மணந்து கொள்ளும் நிலையினையும் பாடுகிறாள். ஆம்! புலவர்

நற்றங்கொற்றனார் குறிஞ்சித் திணையில் (நற்—136) அழகாகப்பாடுகிறார். அவர் பாடலுக்கு நான் கொள்ளும் விளக்கம் இதுவேயாகும்.

'திருந்து கோல்' எல்வளை! வேண்டியான் அழவும்,
அரும்பிணி உறுநர்க்கு, வேட்டவை கொடாஅது,
மருந்து ஆய்ந்து கொடுத்த அறவோன் போல,
என்னை!— வாழிய! பலவே!—பன்னிய
மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய
தலைப்பிரிபு உண்மை அறிவான் போல,
நீப்ப நீங்காது, வரின்வரை அமைந்து
தோள் பழி மறைக்கும் உதவிப்
போக்குஇல் பொலந்தொடி செறீஇயோனே.

(நற்—136) என்கின்றார்.

இவ்வாறு வருமுன் காக்கும் வகையும் அதற்கேற்ற உணவு, உடை பழக்க வழக்கங்களும், நோய் வந்தால் மேற்கொள்ளும் முறைகளும் பலவாகச் சங்க இலக்கியங்களில் பேசப் பெறுகின்றன. நாம் இந்த அளவோடு அமைந்து பிற்காலத்துக்கு வருவோம்.

சங்ககாலத்தும் அதை ஒட்டியும் வாழ்ந்த மக்கள் இயற்கை வாழ்வும் இயற்கை மருந்தும் கொண்டே தம்மை நலம் பெறச் செய்து கொண்டனர். என்பதற்கு எத்தனையோ சான்றுகளைக் காட்டலாம். மிளகு, திப்பிலி, சுக்கு, ஏலம் போன்ற இயற்கையில் விளைவன வெல்லாம் உடல் நோய் போக்குவன போன்றே உயிர் நோய்க்கும் மூன்று, நான்கு ஐந்து வகைப்பட்ட நீதிகளை உள்ளடக்கியும் இந்த மருந்து முறைகளை உட்கருதியுமே 'திரிகடுகம்', 'ஏலாதி' 'சிறுபஞ்சமூலம்' என்ற பதினென் கீழ்க்கணக்கு வரிசையில் மூன்று நூல்கள் தோன்றின.

உயிரும் உடலும் நலம் பெறவும் நெடிது இணைந்து நின்று நல்வாழ்வு பெற்று வாழவும் இவை வழிகாட்டிகளாக அமைந்தன. இன்று இந்த நூல்களைப் படிப்பார்-படித்தவழி ஒழுகுவார் அருகி விட்டனர். அதனாலேயே நாட்டில் குழப்பங்களும் கொடுமைகளும் அதிகமாகி விட்டன. அப்படியே இம்மருந்துகளை மறந்தமையினாலேயே மருந்தகங்கள் பல்கிப்பெருகினும் இடமில்லா வகையில் நோயாளிகள் திண்டாடுகின்றனர். இக்கொடுமைகள் நீங்க வேண்டுமானால் இந்நூல்கள் வாழ்விடை வர வேண்டும். இம்மருந்துகளாகிய இயற்கைப் பொருள்கள் உணவிடை புக வேண்டும். இடை வந்த— நம் நாட்டுப் பொருள் அல்லாத மிளகாய் இங்கே ஆட்சி செலுத்து கிறது. தமிழ் நாட்டு நிலையே அதுதான் போலும். தமிழ் நாட்டுக் கோயில்களில் தமிழ் இல்லை— பள்ளி கல்லூரிகளில் தமிழில் பாடப்பயிற்சியில்லை. உடுக்கும் உடையில் தமிழ் மரபு இல்லை. தமிழ் மரபு வேண்டும் என வற்புறுத் தினால் தொல்லை,மஞ்சள் கயிறு இல்லா நிலையில் தோல் வியாதிப் பெருக்கமும், மண் பாண்டசச்சமையல் இல்லாமையால் ஊன், உறக்கமில்லா நோய்த் தொல்லைகளும். இவ்வாறு தமிழன் வாழ்விலே எல்லாம் பிறர்தம் பழக்க வழக்கங்களாக அமைகின்றன. உணவு, உடை, பிற அனைத்திலும் மிகுந்து விட்ட நிலை மாறினாலன்றி தமிழனுக்கு உய்வு இல்லை. இயற்கை வள மூலிகை பற்றியே முதலில் நாம் செயல்பட வேண்டும்.

## இருண்ட காலத்தும் இடைக் காலத்தும்

'சங்க காலத்தை அடுத்த இருண்ட காலத்தும் சமய மறுமலர்ச்சிக் காலத்தும் பிற்காலச் சோழர் காலத்தும் மரம், செடி, கொடிகளும் மூலிகை வகைகளும் நன்கு பயன் படுத்தப் பெற்றுள்ளன. ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடிய திருத்தலங்களெல்லாம் மருந்தாகித் தப்பா மரங் களின் கீழ் இருந்து, பிற்காலச் சோழர் காலத்தே பெருங்

கோயில்களாக மாறின என்பதை முன்னரே காட்டியுள்ளேன். இறைவனையே மருந்தாகவும் மருந்தகப் பலனே அவனாகவும் அடியார்கள் கண்டனர். தொண்டை நாட்டுத் திருக்கச்சூரில் இறைவன் விருந்திட்டதோடன்றி, சுந்தரருக்கு மருந்திட்டும் உதவினான் என்பர். 'மருந்திட்டீசர்' என்ற இறைவன் கோயிலும் உள்ளதாகக் கூறுவர். திருக்கச்சூர் ஆலக்கோயில் பெருங்கோயிலாகக் கீழே அமைந்திருக்க, மருந்தாக அமைந்திருந்த மருந்திட்டீசர் கோயில் பின் சிறுகுன்றின்மேல் உள்ளதாகும். அப்படியே சோழநாட்டு வைத்தீஸ்வரன் கோயிலும் மருந்தாகவும் மந்திரமாகவும் அமைகின்றது. புள்ளிருக்கும் வேளூர் என்று போற்றப்படும் அந்தலத் தெய்வம் 'வைத்திய நாதன்' என்றே பெயர் பெறுவர்.

'புரிந்தபுகழ் புள்ளிருக்கு வேளூர் வைத்தியனார்
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதரோ அம்மானை
பரிந்துவினை தீர்க்கவல்ல பண்டிதரே ஆமாயின்
மருந்துவிலை கைக்கூறி வாங்காரோ அம்மானை
வாயிலே மண்போட்டு வாங்குவர்காண் அம்மானை'

என்ற அம்மானைப்பாடல் அவர் வினைதீரத் தக்க மருந்திட்டு கூலி பெறும் நிலையினைக் காட்டுகின்றது.'வாயிலே மண்போட்டு வாங்குவர்' என்பதற்குப் பலர் பலவகையில் பொருள் கொள்வர். ஆயினும் அவ்வூர்மண் மருந்தாக அமைகின்றமையின் அதையே மருந்தாகப்போட்டு வாழ்வார் எனக் கொள்ளல் பொருந்தும். இன்றும் அத்தலத்துச் செல்பவர் அவ்வூர் மண்ணைப் பொன்னெனப் பொதிந்து தத்தம் ஊர்களுக்கு எடுத்துச்சென்று நோய்வரின் உண்டு நலம் பெறும் நிலையினைப் பலரும் அறிவர்.

### திருநீறும் திருமண்ணும்

அப்படியே திருநீறும், திருமண்ணாகிய வைணவச் சின்னப் பொருளும் மருந்தாக அமைகின்றன. சமணனாக

இருந்த பாண்டியனைச் சைவனாக்கியதோடு, நீங்காத அவன் கூனினையும் நீறு கொண்டே சம்பந்தர் நீக்கினார் எனப் பெரியபுராணம் காட்டுகிறது.

'மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர்வாய் உமைபங்கன் திருவாலவாயான்
திருநீறே'

என்ற சம்பந்தர் தம் திருநீற்றுப்பதிகமே இதன் வழி தோன்றியதல்லவா!

திருநீறு என்றால் ஏதேதோ கட்டியாக இன்று கடைகளில் விற்பது என்று எண்ணிக் கொள்ள வேண்டாம். மூலிகைகளைப் பதம் பண்ணுவது போன்றே, நீறும் பதம் பண்ணப்பெறுவதேயாகும். புல்தின்னும் கன்று ஈன்ற பசுவின் சாணத்தை உருட்டி வைத்து அதைச் சூரிய வெளியில் அன்றி, நிழலிலேயே உலர்த்திப் பின் சம்பா வைக் கோல் அல்லது தாள் அல்லது கருக்காய் கொண்டு வேக வைத்து, ஒரு சிறு கருப்பும் இலாவகையில் கண்டு எடுத்து, நன்றாகத் தூளாக்கி, வெள்ளைத் துணியில் சலித்து வைத்துக் கொள்வதாகும். நல்ல பசுவின் சாணத்துக்கு மருந்துச்சக்தி இருப்பதை யாரும் அறிவர். விசேட நாட்களில் பஞ்சகௌவியம் என்னும் ஆவிடத்து ஐந்தினை உண்ணும் மரபு இன்று நம்மிடம் உண்டல்லவா! பசுவின் சாணம், மூத்திரம், பால், தயிர், நெய் இவை பல தேவாரத்திலும் பிற இடங்களிலும் ஆவிடத்து ஐந்து எனப் பேசப்பெறுகின்றன. உடலில் உள்ள பல நோய்களை இந்த ஆனிடத்து ஐந்து நீக்கும் திறம் பெற்றதாகும்.

சாணத்தால் ஆகிய திருநீறும் திருமண்ணும் உடலில் மூட்டுக்களில் உள்ள வலியை நீக்கி நலம் செய்வன.

அதனாலே எலும்புகள் சேரும் பதினாறு இடங்களில் இவற்றைத் தீட்டுகின்றனர். நெற்றி, மார்பு, கண்டம், இருபுஜங்கள், இருகை முட்டிகள், இரு மணிக்கட்டுகள், இருவிலா எலும்புகள், இருகால் முட்டிகள், முதுகு, வயிறு ஆகிய பதினாறு இடங்களிலும் இவற்றை அணிபவர் இன்றும் உள்ளனர். அவை தூயனவாக— அமைய வேண்டிய வகையில் அமையப் பெற்றனவாக இருப்பின், அவற்றை இடுகின்றவர்களுக்கு எந்தவிதமான மூட்டுவலியும், பிற நரம்பு, எலும்பு பற்றிய நோய்களும் வாரா என்பது திண்ணம்.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் இறைவனைப் பாடும்போது அங்கே சூழ்ந்துள்ள மரம், செடி, கொடி சோலை முதலியவற்றையே கண்டு களிக்கின்றனர்.

'தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடம்' (குலசேகரர்)
'முருகமர் சோலைசூழ் திருமுல்லை வாயிலாய்
(சுந்தரர்)
'கானார்ந்த பொழிற்சோலை காவைப்பெற்றாய்'
(அப்பர்)
'வரை சேரும் முகில்முழவ மயில்கள் பலநடமாட
வண்டு பாட
விரைசேர் பொன் இதழிதர மென் காந்தள்
கையேற்கும் மிழலையாமே (சம்பந்தர்)

என்ற இவை ஒரு சில எடுத்துக்காட்டுக்கள். பன்னிரு திருமுறை, நாலாயிரப்பிரபந்தம் இரண்டிலும் உள்ள இயற்கை வர்ணனைகளைப்பற்றி ஒரு ஆய்வு நூலே எழுதலாம்.

## துளசி— வில்வம்— அருகு

மேலும் சிவன் திருமால் இருவருக்கும் உகந்ததான பச்சிலைகளை உலகறியும், 'பச்சிலை இடினும் பத்தர்க் கிரங்கி, மெச்சிவபதவீட ருள்பவன்' என்று பட்டினத் தார் குறிக்கின்றார். ஆம்! சிவனுக்கு வில்வமும் திருமாலுக்குத் துளசியும் ஏற்புடைத்தன்றோ! இந்த இரண்டும் எத்தனை எத்தனை நோய்களைத் தீர்க்கும் மருந்தாக அமைகின்றன. வீட்டுவாயிலில் மாடம் கட்டி, துளசியினை நட்டு, அதைத் துளசி மாடம் என்றே நகரங்களிலும் இன்றும் பலர் வைத்து வழிபடுவதன் பொருள் என்ன? திருக்கோயிலில் தீர்த்தமும் துளசியும் தருவதன் கருத்தென்ன? காலையில் எழுந்து மூழ்கி, உடல் தூய்மையும் உள்ளத் தூய்மையும் உடையவராய்த் துளசி மாடத்தைச் சுற்றிவரின் இரு வகைப் பிணிகளும் நீங்கும் வகையில் 'அதன் மாசற்ற மருந்தாகும்' காற்று வழிகாட்டுமன்றோ, அப்படியே வில்வ மரத்தை வீடுதோறும் வளர்த்து அதன் காற்றை உண்டு நோயற்று வாழ்ந்தவர் பலர். அவை இரண்டும் பலவகையில் மருந்துக்குப் பயன்படும் வகையினை இன்று பலர் மறந்தாரேனும் அவற்றைப் போற்றும் வழக்கத்தை மறந்தார் இல்லை.

'வெள்ளெருக்கும் கரும்பாம்பும் பொன்மத்தும் மிலைச்சி எமது
உள்ளிருக்கும் பெருமான் நின்திருமார்பில் உற அழுத்தும்
கள்ளிருக்கும் குழல் உமையாள் முலைச்சுவட்டைக் கடுஒடுங்கும்
முள்எயிற்று கறை அரவம் முழைஎன்று நுழையுமால்'

எனத் தில்லைநாதனைக் குமரகுருபரர் பரவிப்பாடுகின் றார். இதில் முதல் அடியில் வெள்எருக்கும், கரும்பாம்பும் பொன்மத்தும் குறிக்கப்பெறுகின்றன. இவை மூன்றும் மருந்துகளாயினவே. எருக்கம் பாலும் தண்டும், வேரும் இலையும் எத்தனையோ வகையில் பயன்படுவதைச் சித்த மருத்துவத்தைத் தேர்ந்து அறிந்தவர் நன்கு உணர்வர். இறைவன் வட திருமுல்லைவாயிலில் எருக்கின் நிழலிலே இருந்தார் எனக்காட்டுவர். அதன் தலவிருட்சமும் எருக் கேயாகும். பழைய எருக்கின் தண்டின் அடியினை அக் கோயிலிலே இன்றும் பத்திரமாகப் பாதுகாத்து வருகின் றனர். அவ்வாறே கரும்பாம்புமாம். பாம்பின் விடம் கொடியதாயினும் அது எத்தனையோ வியாதிகளை நீக்குவதை உலகறியும். இன்றைய மேலை நாட்டு முறை யில் மருத்துவம் செய்யும் 'டாக்டர்'கள் கூட இந்த நாக விடத்தால் பலமருந்துகள் தயார் செய்கிறனர் எனக் காண்கின்றோம். மேலும் அப்பாம்பு 'நல்ல பாம்பு' என அழைக்கப்பெறுகின்றது. உண்மையில் யாராவது தனக் குத் தீங்கிழைத்தாலன்றி—குறுக்கே வந்தால் அன்றி, அது அவர்களை வருத்தாது—வாட்டாது. மேலும் அதன் விடம் மந்திரத்துக்குக் கட்டுப்பட்டு இறங்கி உயிர்காக்கும் வகையில் செயலாற்றுகின்றது. எனவேதான் கரும்பாம் பைச் சிவன் அணிந்து கொண்டிருப்பதும் திருமால் அதையே பாயலாகக் கொண்டிருப்பதுமாகும். இந்த உண்மை உணர்ந்தேதான் நம் நாட்டவர் நாகபூசை யினைப் பலவகையில் செய்கின்றனர். இலங்கையைச் சார்ந்த 'மணிபல்லவம்' நாகத்தீவு என்ற பெயரிலேயே இன்றும் விளங்கி, அங்கே நாக கன்னிகையே முக்கிய வழி படு தெய்வமாக விளங்கி நிற்க, தமிழகப் பூசாரியே அதற்குத் தொண்டு செய்து வருவதைப் பலர் அறியார்.

மூன்றாவதான பொன்மத்து, ஊமத்தம் என்ற பெய ரால் வழங்கப்பெறுகின்றது. இந்த ஊமத்தம் பூவும் தண்டும் வேரும் கிராமங்களில் பலவகைகளில் மருந்தாகப்

பயன்படுவதை இன்றும் காணலாம். எனவே இவை அணிந்த இறைவனை வணங்கினால், நம் நோய் நீங்க, அவன் 'வைத்தியநாதனாக' இருந்து அருளுவான் என்பது திண்ணம்.

சிவபெருமானுக்கு வில்வம், எருக்கு, ஊமத்தம் அன்றி 'கொன்றை' மலரும் ஏற்புடைத்தாய ஒரு மலராகும்.

'பூங்கொன்றைக் கண்ணியான்
பொன்மன்றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்'என்று குமரகுருபரரே

தம் சிதம்பர செய்யுள் கோவையில் கூறியிருக்கின்றார். இதைத்தான் சம்பந்தர், 'விரைசேர் பொன் இதழிதர' என்று திருவிழிமிழலைப் பதிகத்தில் (மேகராகக்குறிஞ்சி) பாடியுள்ளார். இதன் மலர்கள் பொன்னிறமாக இருக்கும். அது பல நோய்களுக்குப் பயன்படும் என்பது உறுதி. இன்றைய சித்த மருத்துவர்களுக்கே இதன் முழுப்பயனும் தெரியுமோ என நான் ஐயுறுகின்றேன். மூலிகை வகுப்பு 'Vegitable section' என்ற பிரிவில் 'MATERIA MEDICA' என்ற நூலில் திருவாளர் க. ச. முருகேச முதலியார் அவர்கள் எழுதியதை டாக்டர் க. கா. குப்புசாமி முதலி யார் அவர்கள் (இந்திய மருத்துவக் கல்லூரியில் சித்த மருத்துவப் பேராசிரியர்) இது பற்றி நன்கு விளக்குகிறார். இதன் இரண்டாம் பதிப்பு 1951இல் வெளியாகியுள்ளது. (தற்போது இது கிடைக்குமா என்பது எனக்குத் தெரிய வில்லை) அந்நூலில் '**கொன்றை**' என்ற தலைப்பில் சாக் கொன்றை, சிறுகொன்றை, செங்கொன்றை, கருங் கொன்றை, முட்கொன்றை, மயிர்க்கொன்றை (செம் மயிர்க்கொன்றை) என்ற, பல பகுப்புகள் உள்ளதாகக் காட்டி, ஒவ்வொன்றையும் விளக்கி, அவற்றால் நாம் பெறும் பயன்களையெல்லாம் விண்டு விண்டு விளக்கிக் காட்டியுள்ளார்கள் (பக் 298—305).

'மலக்கிருமி போக்கும் மதுநீர்க் குடலாந்
தலத்துநோ யுங்குலைந்து சாயும்—நிலத்துக்குள்
என்றைக்கும் வாடாத இன்பமலர்க் கொம்பே!
கொன்றைப் பசுமலரைக் கொள்'

(அகத்தியர் குணவாகடம்)

என்ற வெண்பாவின் வழியும் வேறுபல வெண்பாக்களாலும் இக்கொன்றையின் சிறப்பை விளக்குகிறார்கள். இதன் விதை, வேர், பட்டை, இலை, பூ அனைத்தும் மருந்தாகப் பயன்படும் விதத்தை நன்கு எடுத்துக்காட்டுகின்றார்கள். இத்தகைய கொன்றையே இறைவன் தலை யிலையாக விளங்குகின்றது என்கின்றார் குமரகுருபரர். இதன் சிறப்பையும் இதனைக் கடக்க அஞ்சும் நிலையும் பற்றிப் பாரதம் நமக்குக் காட்டுகின்றது.

பாரத யுத்தத்திலேயே சிறந்தவன் அபிமன்யூ; அர்ச்சுனன் மைந்தன். அவன் போர்க்களத்தில் புகுந்தபோது கௌரவர் சேனை தாக்குப்பிடிக்காமல் தளர்ந்து பின் வாங்கியது. தோல்வி அன்றே உறுதியாக்கப்பெற்றது போல் துரியோதனனுக்குத் தோன்றிற்று. அபிமன்யூ சிறந்த வீரன். அவன் இறந்தபோது,

'ஈரிரண்டு பேரொழிய மற்றுள்ளார் அழுதிரங்கி என்பட்டாரே' என்று சொல்லி வில்லிப்புத்தூரார் தாமும் அழுகிறார். துரியோதனன், துச்சாதனன், சகுனி, கண்ணன் ஆகிய நால்வரைத்தவிர, மற்ற இருபக்கத்து மக்கள் அனைவரும் அழுது வருந்தினர் என்கின்றார். அத்தகைய வீரன் எவ்வாறு கொல்லப்பட்டான்! கொன்றை மாலையே அவன் குறுக்கே நின்றது.

'தொக்கலர் கொன்றை யான்தன்
தொடையலால் வளைத்த வாறும்' என்று

வில்லியார் கூறுவார்- அவனுக்கு எதிராக இறைவனுடைய கொன்றை மாலையை வீசினார்கள். அது இறைவன் மாலை யாதலானும் கொன்றையின் சிறப்புக் கருதியும் அஞ்சி அதனை மிதியாது மதித்து, அவன் அதைக் கடந்து கௌரவர் சேனைமேல் செல்ல முடியவில்லை. தயங்கி நின்றான், பலியானான். ஆம்! வீர அபிமன்யூ அக்கொன்றை மாலைக்கு அளித்த ஏற்றத்தை நாம் அளித்தால், நம்மை அது காக்கும். இவ்வாறு கொன்றையினைப் பற்றிப் பலப்பல புலவர்கள் பலப்பலவாகப் பாராட்டுகின்றனர். எனவே இறைவனுக்கு உகந்த பச்சிலைகள் எவருக்கும் உகந்தன எனக் கொண்டு எல்லாப் பச்சிலைகளையும் நம் நோய் நீக்கத்துக்குப் பயன்படுத்த வேண்டும். 'நெல் இருக்க உமிகுற்றுவார்' போல, 'விளக்கிருக்க மின்மினித் தீக்காய்ந்தவாறு போல' இன்றைய மனிதன், எதை எதையோ நாடி எல்லாவற்றையும் இழக்கின்றான். நின்று நீடு நினைந்தால் நம் மூலிகை நம்மைக் காக்கும்.

இறைவனைப்பற்றித் திருத்தசாங்கம் பாடிய மாணிக்கவாசகர் தாளி, அருகு இரண்டையும் அவனுக்கு மாலையாகக் கூறுகின்றார். கிளியை நோக்கி அவர்,

'ஆயமொழிக் கிள்ளாய்! அள்ளூரும் அன்பான்
மேயபெருந் துறையாக மெய்த்தாரென்—தீயவினை
நாளும்அணு காவண்ணம் நாயேனை ஆட்கொண்ட
**தாளி அறுகாம்** உவந்த தார்' (தசா. 9)

எனப் பாடுகின்றார். ஆம், கொன்றை, அறுகு, வில்வம் போன்றவற்றுடன் **தாளியும்** இறைவனுக்கு உகந்தது. அவன் 'யோகியாய் இருந்து எவர்க்கும் யோகத்தை அளிப்பதோடு, போகியாய் இருந்து போகத்தையும் தருவன்' 'ஆதலால், இப்போகத்துக்கு வழிகாட்டும் இத் தாளியினையும் அணிந்திருக்கின்றான். தாளியைப்பற்றி குணவாகடம் கூறுவதைக் காணுங்கள்.

'நாளி முருங்கைத்தழை தூதுணம் பசலை
வாளிலறு கீரையும்நெய் வார்த்துண்ணின்-ஆளியென
விஞ்சுவர் போகத்தில் வீம்புரைத்த பெண்களெலாம்
கெஞ்சுவர் பின்வாங்கிக் கேள்' (குணவாகடம்)

எனவே இறைவன் இம்மை மறுமை வாழ்வுகளை நமக்குச செம்மையாக்கித் தர, இத்தகைய மாலைகளை அணிகின்றான். அருகம்புல்லின் சிறப்பினை அனைவரும் நன்கு அறிவர்.

இவ்வாறே சில தலங்களில் உள்ள தீர்த்தங்களும் —மூலிகைகள் அபிடேகப்பொருள்கள் போன்றவை கலந்துள்ளமையின், அவை நோயினை மட்டுமின்றி கன்ம நோயினையும், பைத்தியம் போன்றவற்றையும் போக்கும் என அகத்தியர் பரிபூரண நானூறு பகர்கின்றது (216-217). தமிழ் நாட்டில் உள்ள நாங்குனேரி, வானமாமலை, திருவிரிஞ்சிபுரம், திருவிடைமருதூர் போன்ற தலங்களில் உள்ள தீர்த்தங்கள் இத்தகைய சிறப்பினைப் பெற்றவையாகும்.

**இறைவன் தங்கும் இடங்கள்—தாமரை**

இங்கே மற்றொன்றையும் நினைவுகூர்தல் வேண்டும். இறைவர்தம் ப்ச்சிலைகளாகிய வில்வம், கொன்றை, எருக்கு, துளசி போன்றவை மட்டுமின்றி, இறைவன் இறைவியர் தங்கும் இடங்களையும் எண்ணிப்பார்க்க வேண்டும். பிரமன், இலக்குமி, சரஸ்வதி ஆகியோர் அனைவரும் தாமரை மலரில் தங்கி இருப்பதை யாவரும் அறிவர். எத்தனையோ உயரிடங்கள்—பீடங்கள்—தங்க மாளிகைகள் பல இருக்க, நீரில் வாழும் தாமரையினைத் தங்கள் தங்குமிடமாக அவர்கள் கொள்ளக் காரணம் என்ன? படைத்தற்கடவுளாகிய பிரமனும் கல்விக்கரசியா

கிய சரஸ்வதியும் திருமாலின் துணைவியாகவும் செல்வத் துக்கு அதிபதியுமாகிய இலக்குமியும் தாமரையை ஏன் தேர்ந்தெடுத்தனர்? முன் காட்டிய பெருமரங்கள், எருக் கஞ்செடி போன்றவற்றின் அடியில் இறைவன் தங்கிய நிலைதான் இதுவும். தாமரை வெறும் அழகுக்காக மட்டும் அமைவதன்று நீரில் நின்று நீரளவேயா வளர்ந்து மலர்ந்து நிற்கின்ற தாமரை, மனநோய்க்கும் உடல் நோக்கும் பலவகையில் உதவுகின்றதைச் சித்தரும் நன்கு அறிவர்,

'பருத்தநற் றாமரைப்பூ பல்வாந்தி நோயைத்
துரத்திவிடும் இன்னும் சொல்லவோ— கரத்தில்
எடுத்தணைக்கக் கண்குளிரும் ஏகும் சுரமும்
எடுத்தவி தாகமும்போம் என்'

(அகத்தியர் குணவாகடம்)

என்று மூலிகை பொருட்பண்பு பற்றிய நூலில் (பக்.377) மேற்கோளாகக் காட்டப்பெறுகின்றது. மலர் பிறவற் றைப் போல் நோய் நீக்குவதன்றி அதை எடுத்தணைத் தால் கண்குளிரும் என்கின்றார். மார்பில் அணைத்தால் கண்குளிரும் என்றால் உள்ளம் குளிர்ந்து உடல் நலம் பல்கப்பெற்று, அதே வேளை தெய்வநெறி போற்றும் உணர்வும் பிறக்குமல்லவா! எனவே தெய்வங்கள் அமர்ந் தும் கையில் ஏந்தியும் உள்ள தாமரை உடலுக்கும் உயிருக் கும் உற்ற மருந்தாக அமைகின்றது என எண்ணல் வேண் டும். இவ்வாறு 'படைத்தான் படைத்த படைப்பெல்லாம் மனுவுக்காக, மனுவைப் படைத்தான் தன்னை வணங்க' என்று விவிலிய நூலுடையார் கூறுவது போன்று உலகில் காணும் மரம், செடி, கொடி புல், பூண்டு, காய், கனி, மலர் பிற அனைத்தையும் நம் நலனுக்காகவே இறைவன் படைத்தான் என எண்ணி அவனை வணங்கி வழிபடுவோ மாக.

பார்வதி, சீதேவி, பூதேவி இம்மூவரும் தாமரையொடு தொடர்பு கொண்டுள்ள நிலையினை,

'விரும்பும் நின்செங்கை தாங்கலால் இரண்டாம்
வேற்றுமை விரித்துரை செய்யாது
அரும்பு தாமரை தாங்குவார் எனலான்
மூன்றாவதும் படுசொலும் விரிக்கும்
பெரும்புவி மலர்ப்பூ மாதெனும் பெயர்கள்
பெரும்வினைத் தொகைகுணத் தொகைப்பேர்
கரும்புபைங் கமுகில் பொலிதிரு வானைக்கா
அகிலாண்ட நாயகியே' என

அகிலாண்டேஸ்வரி மாலையில் அதன் ஆசிரியர் இலக்கிய நயம் தோன்ற—இலக்கணநெறி விளங்க எழுதியுள்ளார்.

சீதேவி, பூதேவி இருவரும் அகிலாண்டநாயகியின் இரு கைகளையும் தாங்குகின்றனர். அந்நாயகியின் கைகள் தாமரை மலர் போன்று உள்ளன எனவே தாமரையைத் தாங்குவர் என இரண்டாம் வேற்றுமைப் பொருளில் அவர்கள் சிறக்க வேண்டும். ஆனால் தாமரையால் தாங்கப்பெற்றவர் என்று மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகையால் உலகத்தவர் அவர்களை அழைக்கின்றனர் எனச் சாதுரியமாகப் பாடுகின்றார். பின் புவிமாது, மலர்மாது என்ற இருபெயர்களையும் 'புவியாகிய மாது' எனப் பண்புடைத் தொகையாகவும், மலர்மாது, மலர்ந்தமாது—மலர்கின்ற மாது—மலரும்மாது என்ற காலங்கடந்த பெயரெச்சமாம் வினைத் தொகையாகவும் காட்டுகின்றார். இப்பாடல் இவ்விடத்தில் இப்பொழிவுக்கு-இங்கே ஏற்றதன்றாயினும் தாமரையை நினைக்கும்போது—அதற்குரியவரை நினைக்கும்போது அதில் தங்கியும் தம் சிறப்பினைப்பெற்றும் உள்ள அம்மூவரும் என்முன் நிற்கின்றனர். அத்துடன்

இத்துணை இலக்கிய இலக்கண நயம்படப் பாடும் புலவரும் கண்முன் காட்சி தருகின்றார். எனவே இதை இங்கே எடுத்துக்காட்டினேன். தவறாயின் மன்னியுங்கள். இனி நம் பொருள் பற்றி மேலே செல்லலாம்.

**மூலிகை நிறைந்த மலைகள்**

இம் மூலிகைகள் நிறைந்த மலைகளையே நம்மவர் தெய்வங்களாகப் போற்றி வந்தனர். இவற்றுள் முக்கிய மானவை திருக்கழுகுன்றமும் திருவண்ணாமலையுமாம். கழுக்குன்றிலே பலப்பல மூலிகைகள் படர்ந்திருக்கும். அங்கே சென்று சங்கு தீர்த்தத்தில் விடியற்காலையில் மூழ்கி, உதயத்துக்குமுன் கழுக்குன்றினை வலம் வந்தால் எல்லாப்பிணியும் அகலும் என்பது உண்மை. இன்றும் பலர் அவ்வாறு செய்கின்றனர். சென்னையில் சிறந்த மருத்துவராக வாழ்ந்து மறைந்த டாக்டர். குருசாமி முதலியார் அவர்கள் (அவர்கள் பெயரிலேயே வடசென்னையில் ஓர் உயர்நிலைப்பள்ளி உள்ளது) தம்மிடம் வரும் நோயாளிகளை கழுக்குன்றத்துக்கே ஆற்றுப்படுத்துவர். தம்மிடம் நோய் காட்டி மருந்துண்ண வருபவர்களை, அவரவர்தம் நோய் நிலைக்கு ஏற்ப, ஒரு திங்கள், நாற்பது நாள், இருதிங்கள், முத்திங்கள் எனக் காலவரையறை செய்து, அவர்கள் அக்கால எல்லைவரையில் திருக்கழுக் குன்றம் சென்று விடியலில் எழுந்து சங்குதீர்த்தத்தில் மூழ்கி, சூரியன் புறப்படுமுன் மலையை வலம் வரவேண்டும். அவ்வாறு வந்தபின், தான் மருந்து தருவதாக அவர் கூறுவர். ஆனால் பலர் அவ்வாறு சென்று வந்து, அவரை வணங்கி, தம் நோய் நீங்கப் பெற்றதாகக் கூறி வாழ்த்திச் செல்வர். அங்குள்ள மலையின் மூலிகைகளும் சங்கு தீர்த்தத்தில் உள்ள நோய் தீர்க்கும் மருந்து அமிசமும் அவர்களை நோய் நீங்கப் பெறச் செய்கின்றன. இவ்வாறே திருவண்ணாமலையினை வலம் வந்து நோய் நீங்கப் பெற்

றவர் பலராம். காஞ்சி கச்சபேசர் குளத்தில் தொடர்ந்து மூழ்கி, உடல்புறத்தில் தோல் பற்றி வரும் பல நோய்கள் நீங்கப் பெற்றவரும் உளர்.

இவ்வாறு மலைகளும் குன்றுகளும் குற்றால அருவி போன்ற அருவிகளும் இந்த மூலிகை வளர்த்தினாலேயே தெய்வ நலம் பெற்றுச் சிறக்கின்றன எனக்கொள்ளல் வேண்டும். இதனாலே இத்தகைய மரம் செடி கொடிகளை அழிக்கலாகாது என்பர். அறவோர் 'தாம் வளர்த்ததோர் நச்சு மாமரம் ஆயினும் கொலார்' என்று மணிவாசகர் கூறுவர். இன்று இந்த நிலைமாறி காடழித்தலே கருத்தாகக் கொண்டு மக்கள் செயல் படுகின்றனர். அரசும் கவலைப்படுவதில்லை. அதனால் நோய்களும் மருந்தகங்களும் பல்கிப் பெருகுகின்றன, மனிதன் இவற்றையெல்லாம் எண்ணிப்பார்ப்பின் வழியுண்டு. எங்கே எண்ணப் போகிறான்?

சென்னையில் வாழ்ந்த தோல் பற்றிய வியாதி தீர்ப்பதில் வல்லவர், மறைந்த டாக்டர். தம்பையா அவர்களும் தோல் பற்றிய எந்த நோய்க்கும் ஆங்கில மருந்தினை நாட வேண்டாம் என்பர். அவர் சித்த மருத்துவத்தோடு ஆயுர் வேதத்தினையும் கலந்து நம்நாட்டு முறைப்படி வழிவகுத்து மருந்தினைத் தருவார். எந்த ஆங்கில மருத்துவராலும் முயன்று முடியாத ஒரு குழந்தைக்கு உண்டான புண்கள் பற்றி அவரிடம் சென்றபோது, அவர் தந்த மருந்து தெய்வ அருளாக அமைந்தது. குழந்தை உடலெல்லாம் பெரும்புண் - பெருநாற்றம்— ஒரு வேளை உயிரும் நீங்கி விடுமோ என்ற அச்சம், அந்த நிலையிலே அவர் அக்குழந்தையைக் கண்டார் (1944 இல்). உடனே நால்வகை மருந்தினை எழுதிக்கொடுத்தார். 'துருசு. மனோசிலை, கரட்டுத் தாளகம், நெல்லிக்காய் கந்தகம்' என்ற நான்கினையும் எடுத்துத் தூளாக்கித் தேங்காய் எண்ணெய் இட்டுக் காய்ச்சி, அதைப் புண்ணின் மேல்

தடவினால் உடன் குணம் காணலாம் என்றார். அவ்வாறே தடவப் பெற்றபின், இறக்க இருந்த குழந்தை பிழைத்து, இன்று ஐம்பதுக்கு மேலாகி நன்கு வளர்ந் துள்ளது. எனவே நல்ல தெளிந்த— அறிந்த ஆங்கில நெறி அறிந்த மருத்துவர்களெல்லாம்கூட, இந்தத் தமிழ்நாட்டுச் சித்த வைத்திய முறையினை—இந்திய ஆயுர்வேத முறையினைக் கொள்ளுகின்றனர் என்பது கண்கூடு.

**நாட்டு வைத்தியச் சிறப்பு**

பாளையங்கோட்டை சித்த வைத்தியக்கல்லூரியின் முதல்வராயிருந்து ஓய்வுபெற்ற டாக்டர் தியாகராயர்— இன்றும் வாழ்கின்றார். அந்த நல்லவர் இந்த முறையினையே கையாளுகிறார். ஒரு முறை டாக்டர், ரா.பி. சேதுப்பிள்ளை (என் ஆசிரியர்)அவருக்கு இருந்த நோய்க்கு எந்த ஆங்கில வைத்தியரும் வழி காட்டாது, ஏதேதோ செய்து கைவிட்டனர். நான் அப்போது காஞ்சிபுரத்தில் இருந்தேன். அங்கே நாராயண சேவாச்சிரமம் அமைத்து நல்ல அடிகளார் மருத்துவத் தொண்டும் செய்து வந்தார். அவரிடம் காட்டலாம் என்றேன், வந்தார்; விரைந்து குணம் பெற்றார். அதை உணர்ந்து போற்றும் வகையில் ஆண்டுதோறும் நடைபெறும் குருபூசையில் அவர்கள் வந்து சொற்பொழிவாற்றிச் சென்றார்கள். அவருடைய நண்பர் ஒரு பெரிய மருத்துவர் (பெயர் நினைவில்லை), பிராட்வே டாக்கீஸ் பக்கததிலே இருந்தவர் என நினைக்கிறேன். இவை 1940க்கு முன் நிகழ்ந்தவை. பலருக்கும் சிறக்க வைத்தியம் செய்த அவருக்கு, அவர் வாயை ஒட்டி வந்த புண்ணைப் போக்க மருந்து காணமுடியவில்லை. பலவகையில் முயன்று தோற்றார். பின் சேதுப்பிள்ளை அவர்கள் தாம் பெற்ற அனுபவத்தைச்சொல்லி, அவரிடம் கடிதம் தந்து காஞ்சியில் என் வீட்டிற்கு அனுப்பினார். நானும் உடன் அவர்களை நாராயண சேவாச்சிரமம் அழைத்துச்சென்று, அடிகளாரிடம் சேதுப்பிள்ளை அவர்

கள் அனுப்பியவர் என்று கூறினேன். அவரும் தம் உயர் நிலை பற்றி எல்லாம் விளக்கி, ஊருக்கெல்லாம் வைத்தியம் செய்யும் தனக்கு, தன் நோய்க்கு மருந்து தெரியவில்லை என்பதனை வருத்தத்தோடு எடுத்துரைத்தார். 'நோய் நாடி, நோய் முதல்நாடி அது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச் செயல்' புரியும் அடிகளார் அந்த நோய்க்கு மூலநிலை கண்டு, முற்றும் ஆய்ந்து தொடர்ந்து மருந்து கொடுத்து மூன்று மாதங்களில் முற்றும் குணமாகச் செய்தார். அப்பெருமருத்துவருக்கு எல்லையற்ற மகிழ்ச்சி. ஆண்டுதோறும் குருபூசைக்குச் சொற்பொழிவு ஆற்ற சேதுப்பிள்ளை வரும்போது, அவரும் அவர் காரிலேயே பிள்ளை அவர்களை அழைத்துக் கொண்டு வந்தும் விழாவிற் கலந்தும் மகிழ்ந்து செல்வார். இவ்வாறு எத்தனை எத்தனையோ சித்த வைத்திய — நாட்டு வைத்திய முறைக்கு எடுத்துக்காட்டலாம். இவையே போதும் என்ற அளவில் நின்று மேலே செல்கின்றேன்.

**சித்தர் வாழ்ந்த தெய்வத் தலங்கள்**

மூலிகை மூலம் செயல்படும் மருத்துவ் முறையைச் 'சித்த வைத்தியம்' என்பர். இந்த மூலிகைகளையெல்லாம் பதினெண் சித்தர்கள் கண்டு தெளிந்தார்கள் என்ற காரணத்தால் சித்தர்கள் 3000, 5000 ஆண்டுகள் வாழ்ந்தனர் என்பது மரபு வழிக்காட்டும் வரலாறு. திருமூலர் ஆண்டொன்றுக்கு ஒரு பாட்டுப்பாடி மூவாயிரமாகிய தம் திருமந்திரத்தை எழுதினார் என்பர். அப்படியே கமல முனி, காலகண்டர் போன்ற பிற சித்தர்களும் ஐயாயிரம் ஆண்டுகள் வரையில் வாழ்ந்தார்கள் என்பர். அவர்கள் பல பாடல்களிலே இச் சித்த மருத்துவத்தை வடித்து வழங்கியுள்ளனர் என்பர். எனினும் டாக்டர் வேங்கடேசன் அவர்கள் தம் ஆய்வுக்கட்டுரையில் சித்தர்கள் காலம் கி.பி. 8 முதல் 18ஆம் நூற்றாண்டு வரை என அறுதியிட்டும்

காட்டுவர். அதுவே ஏற்புடைத்தாகும். சங்க இலக்கியத்திலோ, தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்களிலோ இச்சித்தர்கள் பற்றிய பேச்சே இல்லை. திருமூலரை மூன்றாம் நூற்றாண்டில் காட்டும் ஓர் ஆய்வு ஏற்றுக் கொள்ளத்தக்கதாகும். மேலும் சித்தர்கள் முத்தி அடைந்த இடங்களே இன்று பெரும் வழிபாட்டுத் தலங்களாக விளங்குகின்றன என்பர். பழநி, தில்லை, வேங்கடம் போன்றவை அவ்வாறு விளக்கமுற்று வளர்ந்தனவே என்பர். 'சித்தத்தைச் சிவன்பால் நிறுத்தி'

'உணர்ச்சி அச்சாக உசா வண்டியாகப்
புணர்ச்சிப் புலன்ஐந்தும் பூட்டி— உணர்ந்தனை
ஊர்கின்ற பாகன் உணர்வுடைய னாகுமேல்
பேர்கின்ற தாகும் விறப்பு'

என்றபடி, ஒரே முகமாக இறைவனை எண்ணி வாழ்ந்தவர்கள் இச்சித்தர்கள் எனலாம். 'எது வரினும் வருக! அல்லது எது போயினும் போக' என்ற உணர்வோடு, 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' என்று, எல்லாவற்றையும் அவன்மேல் இட்டு, அமைதியாக—ஒருமை உணர்வோடு வாழ்ந்த சித்தர்கள் பாடிய பாடல்கள் பல. அவற்றுள் சில இருபொருள் பயப்பனவாய் இம்மை, மறுமை இரண்டினையும் விளக்குவனவாக அமையும். அகத்தியர், திருமூலர் தொடங்கி எல்லாச் சித்தர்களும் இந்த சித்த மருத்துவ நிலைபற்றிக் கூறினர் என்பர். இந்த மூலிகைகளை உண்டதாலேயே அவர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வாழ்ந்தனர் என்பர். இவர்களைப் பற்றியெல்லாம் பல சித்த மருத்துவர்களும் தமிழ் அறிஞர்களும் பலவாக எழுதியுள்ளமையின் நான் அதிகமாக இங்கே கூறப் போவதில்லை. இன்றைய சொற்பொழிவுக்குக் காரணரான டாக்டர். க. வேங்கடேசன் அவர்களே 'தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம்,

என்ற தலைப்பில் கட்டுரை எழுதி டாக்டர் பட்டம் பல் கலைக்கழகத்தாரால் வழங்கப்பெற்றுள்ளார். மற்றொரு பேராசிரியர் 'திருமூலரைப்' பற்றி ஆய்வு செய்து பட்டம் பெற்றுள்ளார்.

பல்வேறு சமய உண்மைகளையும் வாழ்வியல் நெறிகளையும் தம் மூவாயிரம் பாடல்களில் விளக்கிய திருமூலர் இம்மூலிகைகளைப் பற்றியும் மக்கள்பெறும் நோய்கள் பற்றியும், அவை தீர்க்க உதவும் மூலிகைகள் வழிமுறைகள் பற்றியும் பல பாடல்களில் விளக்கியுள்ளார்.

'யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை' என்பதை மற்றொரு சித்தராகப் போற்றப்பெறும் பட்டினத்தடிகள் 'பச்சிலை இடினும் பத்தர்க் கிரங்கி, மெச்சிச் சிவபத வீடருள்பவன்' என்கின்றார். மேலிருந்து—சிலந்தியாக இருந்து வில்வத்தழையை இறைவன்மேல் இட்டமையால் சோழமன்னனாகப் பிறந்து 'எண்தோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்தோனாய்' மூன்றாம் நூற்றாண்டில் கோச்செங்கணான் என்ற மன்னன் விளங்கினான். எனவே வேறும் பச்சிலையே வீட்டுநிலை அளிப்பதென்றால்—அரச வாழ்வு தருவதென்றால் நாட்டு வாழ்வில் அதன் பயன் சொல்லவும் வேண்டுமோ! அளவுக்கற்ற வகையில் பொய்மாயப் பெருங்கடல் புகுந்து நின்ற பலர் இன்று பொன்னாலும் வெள்ளியாலும், தேரும், கிரீடமும் பிறவும் செய்தும் உண்டியல் இலட்சக்கணக்கில் பிறர் காணா வகையில் கொட்டியும் வழிபடும் போலிச் சமயிகள், போல் அல்லாது, உண்மை அன்பர்கள் இடும் பச்சிலையி னையும் ஏற்று பரமன் அருள் செய்வான் என்பதே சித்தர் கள் கண்ட முடிவு, இந்த உண்மையினைக் கண்ணன் அர்ச்சுனனுக்கு, தனக்கிட்ட ஒரு சிறுமலர், கைலையில் இறைவன் காலடியில் இருப்பதைக்காட்டி உண்மை அன்பை வெளியிட்டதாக ஒரு வரலாற்றுக் கதையும் உண்டு.

நோய்கள் இவ்வாறு பச்சிலை இட்டுப் பரமனைப் பரவுவாரைப் பற்றாது என்பதைத் திருமூலர் பல இடங்களில் காட்டியுள்ளார்.

'இருமலும் சோகையும் ஈளையும். வெப்பும்
தருமம் செய்யாதவர் தம்பால தாகும்
உருப்இடி நாகம் உரோணி கழலை
தருமம் செய்வார் பக்கம் தாழகில்லாவே' என்பது

அவற்றுள் ஒன்று. 'திருமந்திரத்தில் ஒரு மந்திரம் அறிந்தால் சாகாது வாழலாம்' என்ற பழமொழி நாட்டில் வழங்குவ தொன்றாகும்.

பிற்காலத்தில் வாழ்ந்த பாம்பாட்டிச்சித்தர், கொங்கணிச்சித்தர் போன்றோர் பாடிய நாட்டுப்புறப்பாடல்களை ஒத்த பாடல்களில் பல இருபொருள் கொண்டனவாய், இப்பச்சிலைகளால் விளையும் பயனை உள்ளடக்கியவாய் அமைந்துள்ளன. திருமூலர் திருமந்திரத்திலும் இவ்வாறு பலசொற்கள் நுனித்து ஆய்வார்க்கு விளங்கும் வகையில் அமைந்துள்ளன. இத்தகைய சித்தமருத்துவ நெறிகளை,இன்றைய ஆங்கில மருத்துவ உலகம் தெளிவாக —வெளிப்படச் சொல்லுவது போன்று, அன்று சொல்லாமையே அதன் சிறப்பு மங்கக் காரணமாயிற்று. 'மற்றவர்க்குச் சொன்னால் பலிக்காது' என்று' கதை கட்டி, கற்றவர் அதையும் தம்மோடு மயானத்துக்கு அழைத்துச் சென்றுவிட்டனர். நான் இளைஞனாயிருந்த போது, என்னுடைய பாட்டியார் காமாட்சி அம்மாள் எலிக்கடிக்கு ஒரு மூலிகையைக் கண்டு வைத்திருந்தார்கள். பலரும் அவரிடம் வந்து பயன்பெற்றுச் செல்வார்கள். அவர் 'எலிக்கடி' என்று வந்தவர் சொன்னவுடன் புறக்கடையில் சென்று ஏதோ பச்சிலையைக் கொண்டு வந்து உருத்தெரியாது கசக்கி அதை உண்ணச் செய்வார்கள். எலிக்கடி விடமும் நீங்கும். அது என்னவென்று நான்

பலமுறை கேட்டும் 'சொன்னால் பலிக்காது' என்று சொல்லித் தன்னுடனேயே கொண்டு சென்று விட்டார்கள். இத்தனைக்கும் அவர்கள் என் அன்னையைக் காட்டிலும் என்பால் அன்புடையவர்கள்; நான் வருந்தக் காண மாட்டாதவர்கள். அப்படிப்பட்டவர்களே ஒரு சாதாரணப் பச்சிலையினைச் சொல்லாமல் மறைத்து, மறைந்து விட்டார்கள் எனின் இவ்வாறு எத்தனை மூலிகைகள் மறைக்கப் பெற்றனவோ என எண்ண வேண்டியுள்ளது.

## 20. தமிழ்ப்பல்கலைக்கழகத்தே—மூலிகைப்பண்ணை

நான் இந்தச் சிறப்புச் சொற்பொழிவை எனக்களித்துச் சிறப்பினைச் செய்த தமிழ்ப் பல்கலைக்கழகத்தே முதல் அமைக்கப் பெற்ற ஆட்சிக் குழுவில் உறுப்பினனாக இருந்தேன். உடன் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் அன்றைய இயக்குநர் திரு. சுப்பிரமணியமும் இருந்தார். ஒரு கூட்டத்துக்கு நானும் அவரும் சென்றோம். அப்போது அலுவலகம் நகரின் பழைய அரச அரண்மனையை ஒட்டி இருந்தது—நான்கு அறைகள் அங்கே விருந்தினர்களுக்கென ஒதுக்கப்பெற்றிருந்தன. விடியல் நான்கு மணிக்கு இரெயில் இறங்கிச்சென்று அவரும் நானும் தனித்தனி அறையில் அமர்ந்திருந்தோம். காலைக் கடன்களையெல்லாம் முடித்து, சிற்றுண்டி கொள்ளப் புறப்படுகையில், அவர்தம் காலில் அரிப்பு ஏற்படுகிற தென்றும் சிறு வீக்கமும் உள்ளதென்றும் கூறி, நடக்க முடியுமோ என அஞ்சினார். அங்குச் சுற்றிலும் பல செடி கொடிகள் இருந்தமையின் அவற்றுள் ஏதேனும் வண்டு அல்லது பூச்சி கடித்திருக்கும் என்றார்; அன்றி அறையிலேயே ஏதேனும் பூச்சி, புழு தீண்டி இருக்கலாம் என்றார். நான் அவரை உட்கார வைத்து விட்டு, பக்கத்தில் சென்று பத்து இலைகளைக் கொண்டு வந்து கசக்கி இருமுறை அந்த அரிப்பு உண்டான இடத்தில் தேய்த்தேன். இடை

விட்டு அரைமணிக்குப் பிறகு மறுபடியும் தேய்த்தேன். வீக்கம் நீங்கிற்று; அரிப்பும் இல்லை. எழுந்து சிற்றுண்டி உண்ணச் சென்றோம். வழியில் அது என்ன மந்திர இலை— இவ்வளவு எளிதாக இந்த வலியைப் போக்கிற்றே என்று கேட்டார். நான் மூடி மறைக்கவில்லை. 'அது வேறொன்றுமில்லை. 'குப்பைமேனிக்' கீரைதான் என்று சொன்னேன். அவர் வியந்தார். இத்துணைச் சிறந்த மூலிகையை மக்கள் மதிக்கவில்லையே என வருந்தினார். இதனால்தான் என்றும் நான் மேலே காட்டிய 'நெல்லிருக்க உமிகுற்றும்' மக்களை 'விளக்கிருக்க மின்மினிக்காயும்' மக்களை நினைந்து பார்க்க வேண்டும் என்றேன். அன்றைய பல்கலைக்கழகக் கூட்டத்தில்தான் நானும் அவரும் வற்புறுத்த, மூலிகைப்பண்ணை அமைக்க முடிவு எடுக்கலாயிற்று. புது இடத்தில் பல ஏக்கர் அதற்கு ஒதுக்கினோம். இன்று அது வளர்ந்து பலருக்கும் பயன் விளைத்து வரும் என எண்ணுகிறேன். அன்று தொடங்கியபோது அதைக் காத்து ஓம்ப—அது பற்றி விளக்க— —அதன் பயனை யாவருக்கும் அளிக்க ஒரு சித்த மருத்துவர்— சட்டப்படி தகுதி பெற்ற ஒரு மருத்துவர் எங்களுக்குக் கிடைக்கவில்லை. வேறு துறையில் வல்ல ஒரு மருத்துவரையே அத்துறைக்குத் தலைவராக்கினோம். இன்று ஔவையார் என்ன செய்திருக்கிறாரோ! நான் அறியேன். இக்குப்பைமேனியைப் பற்றி மூலிகை வகுப்பு (Materia Medica) நன்கு விளக்குகிறது. (பக்—270-272) வடமொழியில் இதை 'மார்ஜால மோகினி' என்பர், ஆங்கிலத்தில் 'Acalypha Indicaecats Struggle' என்பர் போலும். இதன் பயனை மூன்று பக்கங்களில் நன்கு விளக்கியுள்ளனர் (மூலிகை வகுப்பு)

'தந்தமூ லம்பிணிதீத் தந்திடுபுண் சாவவிடம்
உந்துகுன்மம் வாதம் உதிரம்— வந்திழை

சூலஞ்சு வாசம் தொடர்பீத சங்கபம்போம்
ஞாலங்கொள் **மேனி** அதனால்'
(தேரையர் குணவாகடம்)'

என்று வெண்பாவ்கையில் இதன் சிறப்பை நன்கு விளக்கு கின்றார். 'இலையையும் உப்பையும் சேர்த்து அரைத்துச் சொறி, சிரங்குகளுக்குத் தேய்த்துவர, குணமாகும்'. இலைச்சாற்றை எண்ணெயுடன் சேர்த்துக் காய்ச்சிக் வலிக்குத்தேய்த்து வரலாம். இலையை அரைத்து புண், நஞ்சுக்கடி இவைகளுக்குப் போடலாம் இலையுடன் உப்பு சேர்த்துச் சாறுபிழிந்து, தினந்தினம் காலையில் இரு மூக்குகளிலும் நசியமிட்டு, குளிர்ந்த நீரில் மூழ்கி வர வெறி நோய் நீங்கும்.

'இலையை அரைத்து.மேகப்புண்களுக்குக் கட்டலாம்' என்றும் இன்னும் பலவகையிலும் எங்கும் எளிதில் கிடைக் கும் குப்பைமேனி இலையின் குணத்தை — நோய் நீக்கும் திறத்தைப் பலபடக்காட்டியுள்ளனர். புண் என்றால்—கடி என்றால் நூற்றுக்கணக்காகச் செலவிட்டு ஊசியிட்டுக் கொண்டும், உள் மருந்து பலவேண்டியும் பலவற்றைப் பூசியும் வாழும் நாகரிக மக்களுக்கு 'குப்பைமேனி'—அவர் கள் வீட்டு வாயிலில் காணும் குப்பைமேனி வீணானது எனத் தோன்றலாம். அது அவர்கள் செய்த பாவம்— வினை. யாரும் குப்பைமேனியினையும் அது போன்ற மூலிகைகளையும் பயன்படுத்தி வாழின் நலமுண்டு.

இவ்வாறு இன்னும் எத்தனை மூலிகைகளைப் பற்றி யும் அவை பற்றிக் காட்டிய சித்தர்களைப் பற்றியும், பிறர் பாடல்கள் பற்றியும் எண்ணற்றவை காணலாம். வருமுன் காக்கவும் வந்தபின் காக்கவும் வழிகாட்டும் பிற்கால இலக்கியங்களில் இரண்டொன்று கண்டு மேலே செல்லலாம்.

**தேரையர் பாடல்களும் பிறவும்**

தேரையர் போன்ற மருத்துவத்துறை வல்லவர்கள் பாடிய பாடல்களில் இயமனே அருகில் வர அஞ்சும் நிலை

காணப்படுகின்றது. சாதாரண நீதிகளைப் புகட்டும்— வாழ்வைப் பலவகையில் கூறிட்டுக்காட்டும் சதகங்கள் கூட நல்வாழ்வுக்கு வழிகாட்டும் பாக்களைத் தந்துள்ளன.

மாதத் திரண்டுவிசை மாதரைப் புல்குவது
மறுவறு விரோசனந்தான்
வருடத் திரண்டுவிசை தைலம் தலைக்கிடுதல்
வாரத்தில் இரண்டு விசையாம்

மூதறிவினோடு தனது வயதினுக்கு இளைய ஒரு
மொய்குழலுடன் சையோகம்
முற்றுதயிர் காய்ச்சுபால் நீர்மோர் உருக்குநெய்
முதிரா வழுக்கை இளநீர்

சாதத்தில் அளவா னாலும் புசித்தபின்
தாகம் தனக்கு வாங்கல்
தயையாக உண்டாயின் உலாவ விவைமேலவர்
சரீரசுகம் ஆம்என்பர்காண்

மாதவ குமாரி சாரங்கத் துதித்தகுற
வள்ளிக் குகந்த சரசா
மயிலேறி விளையாடு குகனே புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே (குமரேசர் சதகம் 19)

என்று நோய் வாராமல் காக்கும் வழிகளைத் தொடர்ந்து காட்டிக்கொண்டே செல்கின்றது. தைலம் தலைக்கிடுதலையும், பின் பல நம்பிக்கை அடிப்படையில் உண்டான கொள்கை வழி வாரத்தில் இன்னின்ன நாளில் தைலம் தலைக்கிட்டால் இன்னபயன் எனவும் சதகம் பாடியுள்ளது.

'வரும் ஆதிவாரம் தலைக்கெண்ணெய் ஆகாது
வடிவமிடும் அழகுபோகும்
வளர்திங் களுக்கதிக பொருள்சேரும்; அங்கார
வாரம்தனக்கு இடர்வரும்

திருமேவு புதனுக்கு மிடுபுத்தி வந்திடும்
செம்பொனுக்கு உயர் அறிவுபோம்
தேடிய பொருட்சேதமாம் வெள்ளி; சனி எண்ணெய்
செல்வமுண்டு ஆயுள் உண்டாம்'
(அரப்பளீசுர சதகம் 50)

என்று மூழ்கும் நாளுக்குப் பயன்கூறி, ஒரு வேளை அந்த நாட்களில் மூழ்க வேண்டி நேர்ந்தால்— அது அத்துணைச் சிறப்பின்றாயினும், அவசியம் உண்டானால் அதற்குப் பரிகார வழிகளும் சொல்லி அப்பாடல் முடிகின்றது. எண்ணெயில் செம்மண் இட்டுத் தைலம் தலைக்கிடுதல் போன்று பரிகாரங்கள் உள்ளன. இவ்வாறு பிற்காலத்திய பாடல்கள் பல மக்கள் நல்வாழ்வை மனத்தில் கொண்டே நல்லவர்களால் பாடப் பெற்றுள்ளன. தேரையர். நோயணுகா வழிக்குப் பல பாடல்கள் பாடுகின்றார். இவர் காலம் சற்றேறக்குறைய 400 அல்லது 500ஆண்டுகளுக்கு முற்பட்டிருக்கலாம். இவர் தெலுங்கில் மருந்து முதலியவற்றைப்பற்றி அழகாகப்பாடிய வேமனரை குறிப்பிடுவதால், இவர் வேமனருக்குப் பிற்பட்டவர் என்பது தெளிவு. வேமனார் காலம் 1380க்கும் 1505க்கும் இடைப்பட்டது எனலாம். தேரையர் தமிழ், தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம் போன்ற பல மொழிகளை அறிந்தவர். அவர் மருந்து, மற்றவைகளைப் பாடிய பல பாடல்கள் 'வேமன பத்யம்' எனவே வழங்க வெளியிடப்பெற்றுள்ளது. அப்பாடல்கள் அனைத்துள் பல நூறுகள் தமிழிலும் மொழி பெயர்க்கப் பெற்றுள்ளன. அக்காலத்தவரான நம் தேரையர் நல்வாழ்வு, வாழ—நமனார் வராதிருக்க வழி காட்டிப் பல பாடல்கள் எழுதுகின்றார். அவற்றுள் ஒரு சில காண்போம்.

தேரையர் காலம் இன்றைக்கு நானூறு ஆண்டுகளுக்கு முற்பட்டதென்று கண்டோம். வேமனரைப் பற்றி இவர் கூறி இருத்தலால் இவர் அக்காலத்துக்குப் பிற்பட்டவர் என அறிந்தோம். மற்றொரு சான்று

உள்ளது. இவர் உருளைக் கிழங்கு பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இவ் உருளைக்கிழங்கு நம் நாட்டிற்கு (மிளகாயைப் போல்) பதினான்காம் நூற்றாண்டில் இறக்குமதி செய்யப்பெற்றது. எனவே இவர்காலம் அந் நூற்றாண்டிற்குப்பிற்பட்டதென்பர். இவர் சிறந்த சைவர் என்பது இவர்தம் பாடல்கள் வழி நன்கு அறியலாம். இவர் பிறந்த ஊர் எது எனத் தெரியாவிடினும் இவர் தொண்டை நாட்டைச்சேர்ந்தவர் என அறிய இடமுண்டு. இவருடைய ஆசிரியர் பெயர் தரும சௌமியர் என்றும் அவரும் தொண்டை நாட்டவர் என்றும் கூறுவர். இவர் தம் நூல்களுக்கு, யமக அந்தாதி போன்ற அனைத்துக்கும் தெளிவான நல்ல உரைகள் எழுதப்பெற்றுள்ளன. அவ்வுரைகள் இல்லையாயின் இப்பாடல்களின் பொருளை இன்று யாராலும் அறிந்து கொள்ள இயலாது. ஆயினும் அந்த 'உரைகளை எழுதிய ஆசிரியர் பெயரோ ஊரோ நாடோ எவை எனத்தெரியா. இப்படி 'ஊர் வேண்டாது பேர் வேண்டாது' தம்மை மறந்து, நாடு நலம் பெற்று வாழ அவர்கள் எல்லோரும் செய்த தொண்டினை—சித்த மருத்துவம் பற்றிய சிறப்பினை நாம் எண்ணிக்கூடப் பார்ப்பதில்லையே. இவர்களைப் பற்றி—தேரையர் நூல்கள் பற்றியும், உரையாசிரியர்கள் பற்றியும், தேரையர் யமக அந்தாதியினை வெளியிட்ட டாக்டர் தியாகராசன் அவர்கள் (பாளையங் கோட்டைக் கல்லூரியின் முதல்வராயிருந்தவர்) தம் முன்னுரையில் விளக்கமாக எழுதியுள்ளனர். இந்நூல் 10-10-1991இல் வெளியிடப் பெற்றுள்ளது. இது போன்ற இன்னும் பல ஓலைச்சுவடிகளாகவே உள்ளன. அவை என்று வெளி வருமோ-அச்சிட்டும் கிடைக்கப் பெறாத நூல்கள் மறுபடி எப்போது அச் சேறுமோ என்று உளம் வருந்தி டாக்டர் தியாகராசன் கவலைப்பட்டு வருந்துகிறார். நாடு பதில் சொல்லுமா? அரசாங்கம் ஆவன செய்யுமா?

**தேரையர் பாடல்களின் சிறப்பு**

நான் என் இளமையில் வாலாஜாபாத் இந்து மத பாடசாலையில் படித்துக்கொண்டிருந்த ஞான்று (1925—28) அதில் பல பிரிவுகள் இருந்தன. 'மணிவாசகர் சபை' 'என்ற தெய்வச்சபையும், 'வீமன் விளையாட்டுப் படை' என் விளையாட்டரங்கமும் 'திருவள்ளுவர் தொழிற் சாலை' எனப் பாய் முடையும் துணி நெய்யும் பகுதிகளும் இருந்தன. அது போன்றே 'தேரையர் மருத்துவச் சாலை' எனவும் ஒன்று இருந்தது. வள்ளுவர், வீமன், மணிவாசகர் போன்று இதுவும் ஒரு பெயர் என்ற அளவிலும், அவர் மருத்துவ வல்லவராக இருந்தமையினாலே அம் மருந்தகத் துக்கு அப்பெயர் இட்டனர் எனவும் அந்த அளவிலேயே அன்று நான் அறிந்து நின்றேன். ஆனால் பின்பு பல ஆண்டுகள் கழித்துத் தேரையர் பாடிய பாடல்களையும் வேமனர்தம் தமிழாக்கப் பாடல்களையும் பார்த்த போது இத்தகைய வித்தகர் காட்டும் வழிகளில் நம் மக்கள் வாழ்ந்தால் நோய் நாட்டை விட்டே ஓடிவிடும் அல்லவா என நினைத்தேன். தேரையர் 'மருத்துவ பாரதம்' என்றே ஒரு நூல் பாடியுள்ளார். இசையோடு, தாளம் பொருந்த-சிந்து வகைப்பட பலவகையில் இவர் பாடல்கள் அமைந் துள்ளன. அதில் பாண்டவர் ஐவரையும் மருந்துகளாகவும் துரியோதனாதியர்களை நோய்களாகவும் கண்ணனை மருத்துவனாகவும் காட்டி, அப்பாரதக்கதை சிறிதும் பிறழாவகையில் அதை அப்படியே சிலேடைப் பொருளில் மருத்துவ நெறிக்கு உரியதாக்கிக் காட்டுகின்றார். இந்நூல் இப்போது கிடைக்கின்றதா என்பது தெரியவில்லை. அவர் பாடிய வேறு சில பாடல்களை இங்கே காட்டி அமைகின்றேன்.

'பாலுண்போம் எண்ணைபெறில் வெந்நீரில் குளிப்போம்
பகல்புணரோம் பகல்துயிலோம் பயோதரமும் மூத்த
வேலஞ்சேர் குழலியொரு இளவெயிலும் விரும்போம்
இரண்டடக்கோம் ஒன்றைவிடோம் இடதுகையில்
படுப்போம்

மூலம்சேர் கறிநுகரோம் மூத்ததயிர் உண்ணோம்
முதல்நாளில் சமைத்தகறி அமுதெனினும் அருந்தோம்
ஞாலம்தான் வந்திடினும் பசித்தொழிய அருந்தோம்
**நமனார்க்கு இங்குஏது அலை நாமிருக்கும் இடத்தே'**

உண்பதிரு பொழுதொழிய மூன்று பொழுதுண்ணோம்
உறங்குவது இராவொழியப் பகல்உறக்கம் கொள்வோம்
மண்பரவு கிழங்குகளில் கருணை அன்றிப் புசியோம்
வாழை இளம்பிஞ்சொழியக் கனிஅருந்தல் செய்யோம்
பெண்கள்தமைத் திங்களுக்கோர் காலமன்றி மருவோம்
பெருந்தாகம் எடுத்திடினும் பெயர்த்துநீர் அருந்தோம்
நண்புபெற உண்டபின்பு குறுநடையும் கொள்வோம்
நமனார்க்கு இங்குஏது அலை நாமிருக்கும் இடத்தே

ஆறுதிங்கட் கொருதடவை வமன மருந்து அயிர்வோம்
அடர்நான்கு மதிக்கப்பால் பேதியுரை நுகர்வோம்
தேறுமதி யொன்றரைக்கோர் தரநசியம் பெறுவோம்
திங்களரைக் கிரண்டுதரம் சலை விறுப்புறுவோம்
வீறுசதுர் நாட்கொருகால் நெய்முழுக்கைத் தவிரோம்
விழிகளுக்கஞ் சனமூன்று நாட்கொருகா லிடுவோம்
நாறுகந்தம் புட்பமிவை நடுநிசியில் நுகரோம்
நமனார்க்கு இங்குஏதுஅலை நாமிருக்கும் இடத்தே'

என்றும் இன்றும் பலவகையிலும் நோயணுகா விதியினைத் தேரையர் கூறியதோடு, நோய் நீக்கத்திற்கும் பல வழிமுறைகளை வகுக்கின்றார். இப்பாடல்களெல்லாம் நான் இந்துமத பாடசாலையில் படித்தபோது தேரையர் மருத்துவசாலை முகப்பில் எழுதி இருந்ததை மனப்பாடம் செய்தேன். அவற்றை இங்கே தருகின்றேன். ஒருவேளை பிழைகள் இருப்பின் திருத்தி ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்.

அந்நூல்களில் இரட்டுறமொழியும் பல பாடல்கள் உள்ளன. 'சாம்பிராணி பூ அளைய சாம்பிராணி பூஅஃதே' என்ற தொடரில் முதலில் சாம்+ பிராணி+ பூ அளைய— எனப்பிரித்தும் மரணத்துடன் போராடுகின்ற உயிரானது பூவுலகில் வந்து சேர எனப்பொருள் கொண்டு, பின்னதற்கு அது சாம்பிராணியின் **சாம்பலைப்போல் கெடும்** என்று பொருள் கொள்ளலாம். அப்படியே,

'நெல்லிக்காய் விளையும் நாட்டு நெல்லிக்காய் தைலம் கேள்' என்பதில் முதல் தொடர் நெல்+இக்காய்+ விளையும் நாட்டில் எனப்பிரித்து, நெல் கரும்பைப்போல் விளையும் நாட்டினின்றும் நெல்லிக்காய் தைலம் கொள்ளலாம் என்று உரை காண்பர். இவ்வாறு பலபாடல்கள் சித்த மருத்துவத்தில் உள்ளன. மருத்துவ பாரதத்தில் எல்லாப் பாடல்களுமே இவ்வாறு இரட்டுற அமைந்து பாரதக்கதையாகவும் அதே வேளை உடல்நலம் பேணும் மூலிகைக் கதையாகவும் அமைவதைக் காணமுடியும். இன்னும் எத்தனையோ நூல்கள் தமிழில் சித்த மருத்துவம் பற்றி வெளிவந்துள்ளன, டாக்டர் வேங்கடேசன் அவர்கள் சித்த மருத்துவம் பற்றிய அவர் நூலில் பின்னிணைப்பாக இம்மருத்துவம் பற்றிய நூல்களைப் பட்டியலிட்டே தருகின்றார் (563—577). பதினான்கு பக்கங்களில் 400க்கு மேற்பட்ட புத்தகங்களை, பெயர், ஆசிரியர் பாடல் எண்ணிக்கை இவைகளைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றுள் அச்சிட்ட நூல்களுள் பலவும் இன்று கிடைப்பதரிதாகின்றன. தமிழ்நலம்— தமிழ்மரபு— தமிழ் நாகரிகம்— தமிழ்ப் பண்பாடு இவற்றைக் காப்பதாகக் கூறிக் கொள்ளும் தமிழக அரசாங்கம் அதற்கென வாரியம் போன்ற அமைப்பையும் இட்டு, அதற்குச் சிலரைப் பொறுப்புடையராக்கி நிற்கும் அரசாங்கம் இத்தகைய தமிழர் நல்வாழ்வைப் போற்றும் பழம் பெரு நூல்களை அச்சிட்டு நாட்டுக்கு வழங்கினால் நற்பயன் விளையும். சித்தமருத்துவத்தில் வல்லவரைக் கொண்டு சிலவற்றிற்கு

உரையும் எழுத வேண்டும். அரசாங்கமும் தமிழ்ப் பல் கலைக்கழகமும் இத்தகைய அரிய பணியினை விரைந்து செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறு ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகத் தமிழ் நாட்டில் தழைத்த இச் சித்தமருத்துவம் இடைக்காலத்தில் கேட்பாரற்றுக் கிடந்தது. இன்று உயர்நிலைப் பட்டம் பெறும் நெறிவரையில் ஓரளவு உயர்வு பெற்றுள்ளது. இதற்குக் காரணமானவர்களையெல்லாம் இங்கே நினைவுகூர்தல் தக்கதும் ஏற்றதுமாகும் என எண்ணு கிறேன்.

**நாட்டு மருந்துக்கு நல்லுயிர் தந்தவர்**

சென்னை ராஜதானியாக, ஒரிசாவின் கஞ்சம் தொடங்கி மேற்கே நான்கு மாவட்டங்கள் உட்பட தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஒரியா ஆகிய மொழி பேசுவோரைக் கொண்ட பெருமாநிலமாக விளங்கிய அந்தக் காலத்தில்— ஆங்கிலேயர் ஆட்சியில் சித்த மருத்து வமோ, ஆயுர்வேத மருத்துவமோ, யுனானியோ பேசப்பெற வில்லை. என்றாலும் தமிழ் நாட்டில் மட்டும் நாற்பதா யிரத்துக்கும் மேற்பட்ட சித்த வைத்தியர்கள் இருந்தனர். அப்படியே மாநிலப் பிறபகுதிகளிலும் இருந்திருப்பர். ஆங்கில அரசு இந்த மருத்துவ நெறிகளைப் பற்றி யெல்லாம் கவலைப்பட்டதாகவே தெரியவில்லை. நம் நாட்டின் சில தலை சிறந்த பெரிய 'டாக்டர்'கள் கூட இவை பற்றி எண்ணவில்லை. ஆயினும் 'ஜஸ்டிஸ்' கட்சி என்ற நீதிக்கட்சி அமைப்பில், பனகல் அரசர் பொறுப்பில் அரசாங்கம் இருந்த போது, இது பற்றிய எண்ணம் அவருக்கும் அவரைச் சேர்ந்தோர்க்கும் உண்டாயிற்று. ஆந்திர எல்லையில் நல்ல பண்பாட்டுக் குட்பட்ட சிறந்த குடும்பத்தில் பிறந்த அவருக்கு இந்திய மருத்துவங்களை வாழவைக்க வேண்டும் என்ற எண்ணம் உண்டாயிற்று.

அன்றைய ஆங்கில அரசுக்கு அது விருப்பமின்றேனும், பனகல் அரசர் செயலுக்கு இசைவு தந்தது. அவர். 1.7.1924இல் கான்பகதூர் முகமது உஸ்மான் சாயபு அவர்கள் தலைமையில் ஒரு குழு அமைத்தார்; அது 'உஸ்மான் கமிட்டி' என்றே வழங்கப்பெற்றது. அதில் அன்னிபெசண்டு அம்மையாருக்கு உதவியாளராகவும் உற்றவராகவும் இருந்த சிறந்த மருத்துவர் கேப்டன் சீனிவாசமூர்த்தி (கன்னடவர்) செயலராக இருக்க, வேறு சிலரும் உடன் அமைய இந்தியா முழுவதையும் சுற்றி, இந்திய மருத்துவங்களாகிய, சித்த, ஆயுர்வேத, யுனானி முறைகளைப் பற்றி ஆராய்ந்தனர். கும்பகோணம் சிகா மணிப்பண்டிதர் வி. பொன்னுசாமிப்பிள்ளை, பண்டிதர் R.M.K. வேலுசாமிப் பிள்ளை ஆகியோர் சித்தமருத்துவம் பற்றிய விளக்கம் தந்தனர் போலும். பின் முதன் முதல் எழும்பூரில் இன்றைய காவல்துறை ஆணையர் அலுவலகம் உள்ள இடத்தின் பக்கத்தில் 'தம்புவிலா' என்ற இடத்தில் 'இந்திய மருத்துவப் பள்ளி' (Indian Medical School) எனத் தொடங்கப்பெற்றது. பண்டித வீரராகவப் பெருமாள்பிள்ளை, S.E.V. தாஸ் போன்றார் முயற்சியில் அப்பள்ளி தொடங்கப் பெற்றதென்பர். அதில் சித்த மருத்துவத்துக்காக திரு. C.S. முருகேச முதலியார் அவர்களும், ஆயுர் வேதத்துக்கு திரு. சங்குண்ணி மேனன் அவர்களும் (சமஸ்கிருதம், தெலுங்கில் வல்லவர்) தெலுங்குத் துறைக்கு திரு. மாதவமேனனும் நியமிக்கப் பெற்றனர். கேப்டன் சீனிவாசமூர்த்தியே அனைத்துக்கும் தலைவராக இருந்தனர். இவ்வாறு 1924ல் சித்த மருத்துவப் பள்ளி ஆங்கிலேயர் காலத்தில் பனகல் அரசர் முயற்சியால் தொடங்கப்பெற்றது. (அங்கு ஆங்கில மருந்துகளும் சேர்த்துத் தந்தனர் என்பர்.)

பின் பனகல் அரசர் தாம் சூனாம்பேடு ஜமிந்தாரிடம் வாங்கித் தன் வாழ்மனையாகப் பயன்படுத்தி வந்த பூந்தமல்லி நெடுஞ்சாலையில் கீழ்ப்பாக்கத்தில் அமைந்த

பரந்த இடத்தினை மிகக் குறைந்த மதிப்பீட்டில் அரசாங் கத்துக்குத் தந்து, அதில் இந்திய மருத்துவப் பள்ளியை 1926ல் மாற்றி அமைத்தார். அதன் பிறகு பெயரளவில், பள்ளி 'கல்லூரி' எனப் பெயர் பெற்றது. அங்கு 'டிப்ளோமா' (Diploma) பட்டம் பெற வாய்ப்பும் உண்டாக்கப்பெற்றது. அது வளரவளர, மாணவர் தொகை பெருகிற்று. மாணவர்கள் அதைப் பட்டப்படிப்பாக மாற்றக் கிளர்ச்சி செய்தனர். முதலில் மருந்தகமாக மட்டும் இருந்து, பின் பள்ளியாகி, பின் 'டிப்ளோமா' பட்டம் வழங்கு கல்லூரியாகியும், பட்டம் தரும் நிலை வரவில்லையாதலால், மாணவர்கள் பெரும் கிளர்ச்சி செய்தனர். சென்னைப் பல்கலைக்கழகம் முதலில் மறுத்த போதிலும், பின் மாணவர் கிளர்ச்சிக்கு வளைந்து கொடுத்தது. 1958-இல் பட்டங்கள் (Degree) வழங்கும் கல்லூரியாக மாற்றிற்று. இதற்கு மாணவர் மட்டுமன்றி நாட்டிலிருந்த நாற்பதாயிரம் பரம்பரை வைத்தியர்களும் கிளர்ச்சி செய்தனர். முடிவு நல்லதாக அமைய, இந்திய நாட்டுச் சித்த, ஆயுர்வேத மருத்துவர் களும் பிறரைப்போன்று பட்டம் பெற வாய்ப்பு உண்டா யிற்று.

**கல்லூரிகள் வளர்ச்சி**

இத்தகைய நிலைக்கு இந்திய நாட்டு மருத்துவர் குழுவும் (Central Council of Indian Medicine) தக்க உதவி செய்தது. சித்த, ஆயுர்வேத, யுனானி மூன்று பட்டப் படிப்புக்கும் தக்கவர்களைக் கொண்டு அக்குழு பாடத் திட்டங்களை வகுத்துச் செயலாற்ற வழிவகுத்தது. பின், அது கல்லூரி நிலைபெற்றபின் சித்த மருத்துவக் கல்லூரிக்குச் சென்னையைக் காட்டிலும் மூலிகைகள் அதிகம் உள்ள மலைப்பகுதிகளே ஏற்றதாகுமென அரசு முடிவு செய்தது. இராஜாஜி ஆட்சியில் காமராஜரும் உடனிருக்க, அமைச்சர் சோதி வெங்கடாசலம் அவர்கள் முயற்சியில் குற்றாலத்தில் இடம்பெற முயன்றனர்

பழைய குற்றாலத்துக்கு அருகே பரந்த இடம் ஒன்று தேர்வு செய்யப்பெற்றது.. பின் ஏனோ அதுவும் விடப் பெற்றது. பாளையங்கோட்டையில் அச்சித்த மருத்துவக் கல்லூரி தொடங்க ஏற்படாயிற்று. சென்னையிலிருந்த பேராசிரியர்களெல்லாம் அங்கே சென்று, பட்ட பகுப்பு மாணவர்களுக்குப் பாடம் சொல்லித்தந்தனர். அங்கே கல்லூரி மட்டுமன்றி அதைச்சார்ந்த மருந்தகத்தும் நூறு படுக்கைகள் கொண்ட சித்த மருத்துவமனை ஒன்றும் அமைந்தது. ஓலைச்சுவடிகளை வெளிக்கொணர, அக்காலத்து அரசும், பேராசிரியர்களும் பெரிதும் முயன்றனர். ஒரு சில நூல்கள் வெளிவந்தன என எண்ணு கிறேன். பின் திராவிட கழகங்கள் ஆட்சிப்பொறுப் பினை ஏற்றபோது, அக்காலத்தில் நலத்துறை அமைச்ச ராக இருந்த பேராசிரியர் அன்பழகனும் பின் புரட்சித் தலைவர் எம்.ஜி. இராமச்சந்திரனும், சித்த வைத்தியக் கல்லூரி வளர ஆவன செய்தனர். அவர்கள் காலத்திலே தான் அண்ணாநகரில் இந்திய மருத்துவக்கல்லூரியும் மருந்தகமும் உண்டாயின. சித்த மருத்துவத்துக்கு மட்டும் 50 மாணவர் சேர்க்கப்பெறுகின்றனர் என அறிகிறேன். மருந்தகத்திலும் இருநூற்றுக்கு மேற்பட்ட படுக்கைகள் உண்டு. பின் பழநியிலிருந்த மருந்தகமும் இங்கே கொண்டு வந்து இணைக்கப்பெற்றது.

பின் மத்திய அரசும் இந்த இந்திய நாட்டு மருந்தகங் களும் கல்லூரியும் வளரப் பெரும் உதவி செய்தன என்பர். (Central Council of Indian Medicine) இந்திய அரசால் அமைக்கப்பெற்ற இந்திய நாட்டு மருந்தகக்குழுவும் இங்கே இருந்து இதன் வளர்ச்சியில் பங்கு கொண்டு செயலாற்றி வருகின்றது. 'Bachelor of Indian Medicine' என்ற 'இந்திய மருத்துவ அறிஞர்' பட்டம் வழங்கப் பெற்றுச் சில ஆண்டுகள் கழிந்தபின், அறுவைக்கெனவும் ஒரு பகுதி தேவையாயிற்று. பழங்காலத்தில் கிராமத்தில் இந்திய மருத்துவர்கள் பெரிய கட்டிகளையெல்லாம்

அறுத்து மூலிகை மருந்திட்டு, தேவையாயின் சுட்டுச் செம்மைப்படுத்தியுள்ளனர். தமிழில் 'வெந்த புண்ணுக்கு வினை இல்லை' என்ற ஒரு பழமொழி இன்றும் நாட்டில் வழக்கத்தில் உள்ளது. எனவே சித்த வைத்தியம் மேலும் மருந்து கொடுப்பதோடு நிற்காது, அறுவைச் சிகிச்சைக்கும் ஆவன செய்து ஆற்றும் திறன் உடையது என நிறுவ முயன்றனர் சிலர். அதன் பயனாக வெறும் மருந்தளிக்கும் மருந்தகம் மட்டும் இல்லாமல் அறுவைச் சிகிச்சை அளிக்கும் பாடங்களும் செயல்முறைகளும் சேர்க்கப்பெற்றன. பட்டத்தின் பெயர் முறையினையே மாற்றினார்கள். வெறும் **'B.I.M'** என இருந்த பட்டம் பின் **B.I. M. & S.** என மாறியது. **'S'** என்பது **'Sugery'** யைக் குறிப்பதாகும். இவ்வாறு நாளடைவில் இந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் சித்தமருத்துவமும் அதனோடு சேர்ந்த பிற இந்திய மருத்துவ முறைகளும் வளர்பிறை என வளர்ந்தன.

**இன்றைய நிலை**

தற்போது சித்த மருந்தகத்தில் வெறும் பட்டப்படிப்பு மட்டுமன்றி, மேனிலைப் பட்டம் பெறவும் **(P.G. Degree)** வாய்ப்பு உண்டாகியுள்ளது. மேலும் **'M. D.'** என்ற பட்டமும், பிற மருந்தகத்துறை மருத்துவர்களுக்கு வழங்குவது போன்று இவர்களுக்கும் வழங்கும் நிலை உண்டாகியுள்ளது. அதற்கேற்ற வகையில் பாடத்திட்டங்களும் பிற செயல்முறைகளும் தேவையான அளவுக்கு வளர்ச்சி பெற்றுள்ளன. அதற்கேற்ப அதன் தொடர்பான பல பாடங்களும் அங்கே புகுத்தப்பெற்றுத் திறம்பட நடத்தப்பெறுகின்றன. அதற்கென ஒரு தனி வாரியமே இப்போது அமைத்திருக்கிறார்கள் என எண்ணுகின்றேன். சித்தமருத்துவம் பற்றி எண்ணற்ற ஓலைச்சுவடிகளும் அங்கே உள்ளன. சிறந்த நூலகமும் உள்ளது. ஆய்வுக்கேற்ற அனைத்து வசதிகளும் உள்ளன என்பர்.

**செய்ய வேண்டுவன**

இவ்வாறு ஓரளவு நம்நாட்டு மருத்துவமுறை வளர்ச்சி நிலை இருப்பினும், பொதுமக்களும் அரசாங்கமும் இன்னும் இதில் அதிகக் கருத்திருத்த வேண்டும் என்பதே என் வேண்டுகோள். நான் செங்கற்பட்டு மாவட்ட மன்றத்தில் (Distrct Board) உறுப்பினராய் இருந்த போது (1938-44)அம்மாவட்டத்தில் பத்து சித்த மருத்துவச் சாலைகளை முக்கிய பேரூர் சிற்றூர்களில் அமைக்க ஏற்பாடு செய்தேன். அப்போது தலைவராக இருந்த துரைசாமி ரெட்டியார் அவர்களும் அன்றைய அரசாங் கமும் ஒத்துழைத்தது. அக்காலத்தில் உயர்தரக் கல்வி, (11ஆம் வகுப்புவரை), மருத்துவம், சாலைகள் போன்ற அனைத்தும் மாவட்ட மன்றத்திடமே இருந்தன. செங்கற் பட்டு மாவட்ட மன்றத்தில் நாற்பத்தெட்டு உறுப்பினர் இருந்தோம். ஒவ்வொருவருக்கும் 45 அல்லது 50 ஊர்களே எல்லையாக இருக்கும். எனவே அவர்கள் அவ்வூர்களுக்குச் சென்று, மக்களை நேரில் கண்டு குறை தீர்த்து நலம்புரிய வாய்ப்பு இருந்தது. ஜனநாயகம் என வாய்கிழியப் பேசும் இந்நாளில் அவை எல்லாம் கிடையா. அரசாங்கமே எல்லாவற்றையும் பார்த்துக்கொள்ளும் நிலையில்— அதிலும் தனி அலுவலர் மேற்பார்வையில் நாட்டாட்சி கள், பஞ்சாயத்து முறைகள் நடைபெறுகின்றன. ஒருவர் எப்படி அத்தனை ஊர்களையும்—மக்களையும் கண்டு குறை அறிந்து தீர்க்க முடியும்? அதற்கு முன் வட்டக்குழுக் கள் (Taluk Board) இருந்தன. அது விரிந்த நிலையில் மாவட்ட மன்றங்கள் (District Board) அமைந்தன. பின் பஞ்சாயத்து சட்டப்படி பஞ்சாயத்துச் சபைகள் ஊர் தோறும் அமைந்தன. ஊரில் செல்வமும் செல்வாக்கும் உள்ளவர்கள் கைகளில் அவை சிக்கி ஏழைகள் அல்லல் படும் நிலை உண்டாயிற்று. இன்று, பல ஆண்டுகளாக அந்நிலையும் இல்லாது, வெள்ளையன் ஆட்சி தொடங்கிய காலத்திருந்தமை போன்று அதிகாரிகளே எல்லாப்

பொறுப்புகளையும் கவனிக்க வேண்டியுள்ளது. பாவம்! அவர்களால் அத்தனை பொறுப்புகளையும் ஏற்க முடியுமா? எனவே ஊர்தோறும் நல்லாட்சி அமைத்து, அங்கேயே, தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் சித்த மருத்துவ நிலையங்களை அமைத்து, நல்ல மருத்துவரையும் மருந்து வகைகளையும் இருக்கச் செய்து அரசாங்கம் உடனடியாகச் செயல்பட வேண்டும்.

**முடிவுரை—நன்றி**

பொதுமக்களும் இதன் சிறப்பை உணர்ந்து போற்ற வேண்டும். சிறு தலைவலி, தும்மல் என்றாலும் டாக்டரிடம் சென்று நூறோ, ஐம்பதோ கொடுக்கும் 'நாகரிகத்தில்' வாழும் இன்றைய மக்களுக்கு இச் சித்தவைத்தியத்தின் பெருமை தெரியாதது அல்ல! என்றாலும் எங்கள் குடும்ப டாக்டர் இவர் என்று ஒருவரைக் காட்டிப் பெருமைப்பட்டுக் கொள்ளுவதும் எங்களுக்கு மாதம் ஆயிரம், இரண்டாயிரம் வைத்திய செலவு ஆகிறது என்று கூறிக் கொள்ளுவதும் தான் அவர்கள் 'நாகரிகமாக' உள்ளமையின் சித்த மருத்துவத்தை—எளிதாக நோய் நீக்கம் தருவதை— மதிக்க மறுக்கின்றனர். பேர்லியானாலும், விளம்பரத்தாலும் அதிக விலை உயர்வு காட்டுவதாலும் அவற்றைத்தேடி ஓடும் நாகரிகம் இன்றைய நாகரிகமல்லவா! பள்ளிகளில்—கல்லூரிகளில் கூட இலஞ்சம் வாங்காதிருந்தால் 'ஆ! அது மட்டமானது போலும்! அதனால் தான் பணம் கேட்கவில்லை' என்று பேசுபவர்கள் சென்னையில் உள்ளனர். அப்படியே பெரும்பணம் கொடுத்துக் கல்வி நிலையங்களில் தங்கள் பிள்ளைகளைச் சேர்ப்பவரும் பின் வருந்துபவரும் உளர். இந்த நிலைதான் சித்த மருத்துவத்துக்கும் நேர்ந்துள்ளது. போலி நாகரிகமும் புதுமைப்பெயர்களும் வெளிநாட்டுச் சாமான்களின் மோகமும் நம்மவரை ஆட்டிப்படைக்கும் இந்த அவலநிலை எல்லாத் துறைகளிலும் உள்ளன. எனவே

சித்த வைத்தியம் மட்டும் எப்படி விலக்காக முடியும்! ஆனால், இந்த அவலநிலை மாறினாலன்றி நாடு நலம் பெறாது— செம்மையுறாது — சிறப்பும் எய்தாது. இதை மக்கள் உணரவேண்டும். இவ்வாறு அராங்கமும் மக்களும் உணர்வார்களேயாயின் சித்த மருத்துவமும் பிற நாட்டுப் பழம்பெரும் வாழ்க்கை நெறிகளும் வள்ளுவர் காட்டிய வழிமுறைகளும் சிறக்க வழிபிறக்கும். 'சொல்லுதல் யார்க்கும் எளிது, அரியவாம் சொல்லிய வண்ணம்செயல்' என்ற வள்ளுவர் வாக்கை மதித்து, 'தமிழ்' 'தமிழர்' என்று மேடைகளில் வீண்கூச்சல் இடுவதை விட்டு, தமிழர்தம் பண்பாடு, கலை, நாகரிகம், உடை, உணவு நோய்வாராமுறை, வந்தால் தணிக்கும் சித்த வைத்திய முறை என்பன போன்றவற்றைச் செயல்படுத்திச் சிறக்க வழி காண வேண்டும், இச்சொற்பொழிவை அமைத்த தமிழ்ப் பல்கலைக் கழகமும் அதன் மூல காரணமான மூலிகைமணி. வேங்கடேசன் அவர்களும் மேற்கொள்ளும் பணி சிறப்பதாக! இவர்கள் வழியே நாட்டில் சித்தமருத்துவம் செழித்து மக்கள் நல்வாழ்வு வளர நாம்—மக்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து முயல வேண்டும். அரசும் தக்க வழிமுறைகளைக் கண்டு, தங்கள் வழியே இம்முறை சிறக்க ஆக்கப்பணிகளைப் புரிய வேண்டும். 'அனைவரும் ஒன்று சேர்ந்து செயல்படுவோம்! சேர வாரும் சகத்தீரே, என அனைவரையும் அழைத்து அமைகின்றேன். வணக்கம்

வாழ்க மூலிகை வளம்! வளர்க நாட்டின் நலம்!

# நாட்டுக் கல்வி நலமுற

உலகில் உயிர் தோன்றிய நாள் இன்று கணக்கில் காட்ட இயலா நிலையில் உள்ளது. ஓரறிவு உயிர் தொடங்கி, ஆறறிவு பெற்ற மனிதன் நிலை வரை எத்தனை எத்தனை கோடி ஆண்டுகள் கழிந்தனவோ! ஆய்வாளர்கள் இவற்றை அறுதியிட முயல்கிறார்கள். எனினும் முற்றிய முடிவினைப் பெற அவர்களால் முடிய வில்லை. இந்த நிலையில் ஆறறிவுபெற்ற மனிதன் 'மனித னாக' வாழத் தொடங்கிய நாளும் மிகச் சேய்மையதே யாகும் வகையில் மாறிவிட்டான். சிலவிடங்களில் பழைய மிருக நிலைக்கேயும் சென்று விடுகிறான். அவனை மனித னாக வாழ வைப்பன கல்வியும் அறிவுமேயாம்.

தொல்காப்பியர் இந்த அறிவு இல்லாத மனித உருவில் உள்ளவனுக்கு வேறு பெயரே கொடுக்கின்றார்.

'மக்கள் தாமே ஆறறிவுயிரே' என்று பகுத்தறிவை— நல்லதன் நலனும் தீயதன் தீமையும் உணர்ந்து செயலாற் றும் அறிவை—உடையவர்களை மக்கள் என்றே காட்டுகி றார். ஆனால் மனித உருவாகி அறிவில்லாதவனை விலங் கொடு சேர்க்கின்றார்.

'மாவும் மாக்களும் ஐயறி வினவே
பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே' என

அவர்களை விலங்கொடு சார்த்தி 'மாக்கள்' என்ற பெயர் கொண்டு அழைக்கின்றார். திருவள்ளுவரும்

'விலங்கொடு மக்க ளனையர் இலங்குநூல்
கற்றாரோ மேனை யவர்' என்று பிரித்து,

கல்லாத—அறிவில்லாத மனித உடம்பொடு உள்ளவனை விலங்கோடு சேர்த்துக் காட்டுகின்றார். எனவே பண்டு தொட்டு வந்த இந்த உண்மை 'மனிதன்' யார் எனக் காட்டுகின்றது. தமிழில் மட்டுமன்றி, பிறமொழிகளிலும் இந்தஉண்மையே வலியுறுத்தப் பெறுகின்றது. **'Rudyard Kiping'** என்பவர் மனிதப் பண்புகளைத் தொகுத்து இறைவன் காட்டுவதாக அறிவித்து, அவற்றை எல்லாம் உடையவனானால் பிறகு நீ மனிதனாவாய் என்று காட்டி, **'Then, you will be Called the Man, my Son'** என முடிக்கின்றார்,

எனவே, மனிதனுக்கு முதலாவதாக வேண்டப்படுவன கல்வியும் அதன் வழியே பெறும் அறிவும் ஆம். கல்வி வழியே அறிவு வளரும் என்பதனை வள்ளுவர்.

'தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு' எனக் காட்டுவர்.

எங்கோ ஒரு சிலர் இறையருளாலும் முற்பிறப்பில் கற்ற கல்வியின் நிலையாலும் அறிவுடையவர்களாக—நல்ல ஞானம் பெற்றவர்களாக இருக்கலாம். சமயத்தலைவர் சிலர் அந்த வரிசையில் வைத்து எண்ணத் தக்கவர்களே!

இனி, இக்கல்வியைப் பற்றியும் அறிவைப் பற்றியும் வள்ளுவரும் பிறரும் காட்டும் விளக்கங்களைக் காணலாம். மனிதனுக்குப் பிற அழகெல்லாம் அழகல்ல என்றும் கல்வி அழகே அழகு என்றும் நாலடியார் காட்டுகின்றது.

'குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்
கல்வி அழகே அழகு' என்பது அதன் கல்வி எனும்

அதிகாரத்தின் முதற்பாடலாகும் மேலும் அக்கல்வி எதனாலும் கெடாது என்றும் அழியாது என்றும் அறுதியிட்டுக் கூறுகின்றது.

'வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர்செறின் வவ்வார்;
எச்சம் என ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற' (விச்சை—வித்தை)

என்பது நாலடி. இவ்வாறே மற்றொருவர் 'அதன் சிறப்பினை,

வெள்ளத்தால் போகாது, வெந்தணலால் வேகாது, வேந்தராலும்
கொள்ளத்தான் முடியாது, கொடுத்தாலும் நிறையொழியக் குறைபடாது,
கள்ளர்க்கோமிக அரிது, காவலோ மிகஎளிது, கல்வி என்னும்
உள்ளத்தே பொருளிருக்க உலகெல்லாம் பொருள்தேடி உழல்வதேனோ!

என்கிறார். வள்ளுவரும்

'கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்றை யவை' என்று மனிதனுக்கு

வேண்டுவது கல்விச் செல்வமே எனக் காட்டுவர்.

உலகுக்கு அறநெறி உணர்த்திய வள்ளுவர் இக்கல்வியைப்பற்றி 'கல்வி. கல்லாமை, கேள்வி, அறிவுடைமை என நான்கு அதிகாரங்களால் விளக்குகிறார். இத்தகைய கல்வியினை நாட்டிற்கு நல்ல வகையில் அளிக்க வேண்டிய பொறுப்பு அரசுக்கு உடையது என்பதைக் காட்டவே, இந்த நான்கு அதிகாரங்களும் 'இறைமாட்சி' என்ற அரசுடைமை அதிகாரத்திற்கு அடுத்தபடியாக அமைக்கப் பெற்றுள்ளன. இறை மாட்சியிலும்.

தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவர்க்கு' என்கிறார். இதை

அரசன்மேல் ஏற்றிக் கூறினாலும், இதை நாட்டு மக்களுக்கு நல்கி நலம் காண வேண்டியவன் அரசனே என்பதும் அடங்கிக் கிடக்கிறது. எனவே நாட்டை ஆளும் நல்லரசுகள், அந்நாட்டு மக்கள் அனைவரும் கற்றவர் எனும் வகையில் கல்வியை வளர்ப்பதையே முதற் செயலாகக் கொள்ள வேண்டும்.

இக்கல்வி எத்தகையது—ஏன் கற்க வேண்டும்—இதனால் என்ன பயன்? என்பன போன்ற வினாக்களுக்கெல்லாம் வள்ளுவரும் பிறரும் தக்க பதில்கள் தந்துள்ளனர். இன்று நம் நாட்டில் வழங்கும் கல்விமுறை ஏற்றதா என்பதை எண்ணிப்பார்க்க அவை வழி செய்யும். உலகில் பிறந்தவர் யாவரும் கண் இலரேல் சிறக்க வாழ முடியாது. அந்தக் கண்கள் இரண்டும் முகத்தில் உள்ளன. எனினும் வள்ளுவரும் பிறரும் கல்வியினையே கண் என்பர்.

'கண்ணுடையர் என்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்' என்பது குறள்.

எனவே இப்புறக்கண் வெறும் பார்வைக்கென அமையினும் கல்வி எனும் அகக்கண்ணே மனிதனை, மனிதனாக வாழ வைக்க உதவுவதாகும். திருமூலர்

'முகத்தின் கண்கொண்டு காண்கின்ற' மூடர்கள்
அகத்தில் கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்' (2944)

என்பர். எனவே கல்வி, உலகிடை ஆறறிவுடையவனாக மனிதன் வாழ, அவர் கண்ணாக—கருத்தாக—எண்ணாக எழுத்தாக—எல்லாமாக விளங்குவது **கல்வி** என உணர்தல் வேண்டும்.

இக்கல்வி எப்படி மனிதனை மனிதனாக்குகின்றது? இதை ஏன் கண் என்றார்கள்? ஔவையும் 'எண்ணும் எழுத்தும் கண் எனத் தகும்' என ஏன் கூறினார்? ஆம்! அது அவனை வாழ்வுப் பாதையில் தடுக்கிவிழாமல் காப்

பாற்றுகிறது, சமுதாயத்தில் உயரச்செய்கிறது. தன்னைப் போல் பிறரையும் ஒத்து நோக்கி வாழச் செய்கிறது. வாழ்வின் தேவைகளை எல்லாம் தேடிக்கொள்ள உதவு கிறது. கற்றவன் தன்னை மட்டுமன்றித் தரணியில் வாழும் எல்லா உயிர்களையும் ஒத்து நோக்கி, 'தான்பெற்ற இன்பம் பெறும் இவ்வையகம்' என்ற உணர்வில் தலை நின்று எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பான்—நடப் பான்—வாழ்வான். வள்ளுவர்,

'தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்' என்பர். ஆம்! இந்த

நிலைதானே உலகுக்கு வேண்டப்படுவது. இந்த நல்ல உணர்வு இருப்பின் இன்று உலகில் நடைபெறும் எல்லாக் கொடுமைகளும் இல்லா தொழியுமே. மேலே கண்ட குறளில், 'கற்றார்' என்னாது, 'கற்றறிந்தார்' என்கின் றார். 'அறிவு' அதே நிலையில் மனிதனை ஆட்கொள்ளும் திறத்தால்

'அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்ய விடல்' (203)

'அறிவினான் ஆகுவ துண்டோ பிறிதின்நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை' (315)

என்பன வள்ளுவர் வாக்கு. எனவே அறிவுக்கு இலக்கணம் காட்டுவர். இக்குறளை அறத்துப்பாலின் 'தீவினை அச்சம் என்னும் அதிகாரத்தில் வைத்துள்ளார். அறம் கூற வந்த வள்ளுவர் தீய பாவச் செயல்களுக்கு அஞ்சும் அறத்தை ஒரு அதிகாரத்தால் விளக்கும் வகையில், இக்குறளை அந்த அதிகாரத்துள் அமைத்துள்ளார். கற்று அதனால் பெற்ற அறிவு, உலகத்தோடு ஒட்ட ஒழுகும் அறிவு, கேட்டு அறியும் அறிவு, உற்று உணரும் அறிவு போன்ற வகையில் பெறும் எல்லா அறிவிலும்—அவற்றின் செயல்பாடுகளை யெல்லாம் உள்ளடக்கிய நல்லறிவினை இங்கே இவ்வாறு

விளக்குகிறார். இங்கே வள்ளுவர் பின்விளக்க இருக்கும் கல்வியான் வரும் அறிவின் மிக்கு, இச்செயலால் வரும் அறிவே சிறந்தது என உணர்த்துகின்றார். ஆக, கல்வி, அதன்வழியே பெறும் அறிவும் 'வையம் வாழத் தான் வாழ வேண்டும்' என்பதையே வற்புறுத்துவன.

எனவே கல்வியும் அக்கல்வியால் பெறும் அறிவும் மனிதனை மனிதனாக— மற்றவரை பிற உயிர்களை— ஒத்து நோக்கி வாழ்பவனாகச் செய்கின்றன என்பது தெளிவு. பிறர் வாழத் தாம் வாழவும் பிறர் வாடத் தாம் வாடவும் மனிதன் பழகிவிடுவானானால் நாட்டில் போரும் பிணக்கும் கொள்ளையும் கொலையும் பிற கொடுமைகளும் உண்டாக வழியேது? இன்று நாட்டிலும் உலகினும் காணும் எண்ணற்ற கொடுமைகள் யாவும் ஒழியுமல்லவா? ஆம்! ஆனால் நாட்டில் இன்று அத்தகைய கல்வி உண்டா?

அண்ணல் காந்தி அடிகள் கல்வியின் குறிக்கோள் எத்தகையது என்பதை 'The goal of Education is to establish a non violant and no exploitaing social and econamic order' என விளக்குவர். இத்தகைய கல்வி அவர் மறைந்து பல ஆண்டுகள் கழித்தும் உரிமை பெற்று அரை நூற்றாண்டை எட்டும் நிலையிலும் நாம் பெற்றோமா? இல்லையே! இந்த அவல நிலையினை 1986இல் இந்திய அரசாங்கம் கல்விச் சீர்திருத்தத்துக்கென அமைத்த குழுவின் செயலர் திரு. இராமமூர்த்தி அவர்கள் அந்தக் குழுவின் ஆய்வேட்டின் முன்னுரையில் தெளிவாக விளக்கியுள்ளார். எனவே அதை அப்படியே ஆங்கிலத் திலேயே தருகிறேன்.

"One fundamental reason for failure has been that while we go on making radical protestations, our education to this day continues to be governed by the same assumptions, goals and values that governed it in the

days of the British Raj. The British believed in the 'downward filtration theory' under which education and culture would inevitably flow from the classes to the masses. They kept the common people away from education, and education away from life. But things have not much changed since they left. Even today the principal beneficiaries of our education, are the upper and middle classes. To them also we give a wrong education. Our formal system remains confined to textbooks four walls of a school or college. It is tied down to textbooks and examinations. Even then the books are unreadable and the examinations totally unreliable. The courses of study are so framed that the students are not equipped with any productive skills. Whatever education they receive cuts them off from their natural and social environment. They become aliens to their own community. They lose faith in life itself. What Jayaparakashji wrote in 1978 still holds ture. According to him 'it also converts them into a parasitic class which Perpectuates and even intensifies the poverty of the masses. The system has failed to promote individual growth. It also becomes more of a hindrance than a help to bring about an egalitarian transformation'. If this be true, can we say that we have basically departed from the Macaulay tradition? And, if this is what our education has done to us, one may well ask, is not to education better than bad education?

The othr important reason is that our education has been a routine sectoral activity left to the initiative and judgement of specialists at the desk, controlled

and guided by those far, removed from where people live and work. The whole system is so completely cntr-alised that little, if any, initiative is left to people even at state or district levels. Education co-related to life has to be linked to clearly defined social objectives and comprehensive strategies. But the whole approach of gevernment actvities is sectoral, so much so that the different policies of the government such as educational agricultural, industrial, forest, water, or even a policy for scheduled castes and tribes, do not refer to each other and are often even mutually contradictory, They are in fact, design to attain objective internal to their respectives sectors, and not to any fundamental social objectives. The result is that the only option left is expansion without proper thought to quality or relevance. So, our education has expanded without thought to quality or relevance.

One many admit that for this situation education alone is not responsible. During the last forty - three years we have pursued a model of economic development that has led to the creation of two Indias-one of the rich, the other of the poor. A new privileged class has come into being. It holds monopoly over political and economic power and sources of wealth. It controls culture and education. It is firmly established every where. It is this class whose interests our education is made to serve. The result is that as in economy so in education, two parallel systems have come into being-one for the rich, the other for the poor. No wonder, a divided education finds itself totally devitalised, and incapable of meeting the challenges of Independent India' s national life. To the rise

and growth of this class, holding sway over the whole range of national aflairs, can be traced most of the ills we are faced with the erosion of social and moral values, weakening of democracy, the partisan character of our development, corruption and a number of other elitist aberrations. It is responsible for the impove rishment of the nation's very soul. It is, therefore, time the nation, most of all education, took serious note of this phenomenon, and guarded against further damage to national life.

It is clear that the present system of education, in terms of education for the people, has outlived its utitity, whatever it ever had, But before we have a new pattern of education we must have a new model of development. In a country like ours, with vast areas of backwardness, economic, social, educational, develop ment, democracy, and education have, to go together. They have to be woven together in an integrated progr-ame of transofrmation and reconstruction. Peaceful transformation is an organic procees in which economy and education cannot work in isolation with each other. Take for example the right to work, Even if it is ensh-rined in the constitution, it is the economy alone that can create opportunities of employment, education can only empower people for work. This is the principal reason why, despite growing unemployment, vocation eduocation has not become popular. Economy failed to crate jobs, so vocational training became meaningless. If people have to be equipped for self employment there must be a national policy to decentr alise processes of production guarantee wages and incomes, safeguard the interests of the small producers

aganist the onslaught of centralised industry and metro politan economy' and ensurc growth with equity. Similarly if education has to make worthwhile contribution to national unity, it must be accompanied by a progr-amme of strengthen in local communities down to village or muhalla levels. It is at those levels that people have to learn to live and work together. Real stable unity can be achieved only through a prosess of co-operation and sharing. The lessons and values of co-existence are not learnt through exhorations. So also, strengtheing of Local communities is linked with the development of a common or neighbourhood school system. Life at the community level is inter-rele. Harijans, adivasis, or other backward communities must go along with such measures to end poverty as land-reforms, cheap housing, and village industrialisation sc shat in a plan of agro-industrial rural economy a dependable means of livelihood could be guaranteed to every family. A struggle against poverty is funda mentally. A struggle against ignorance and injustice. It includes a struggle against parochial passions, inequity, ill-health and illiteracy. For the poor devlopment, democracy, and education should mean emancipation.''

உரிமை பெற்றபின் இந்த ஒரு குழு மட்டுமன்றி, பல்வேறு குழுக்களை இந்திய அரசாங்கமும் நம் தமிழக அரசும் நியமித்தன. பாடமுறை மாறும் போதும் பிற நிலைகளிலும் அமைத்த குழுக்கள். பல. ஆனால் அவை காட்டிய முடிவுகளை மேற்கொள்ள வேண்டிய வகை நெறிகளை நாட்டு ஆட்சியர் மேற்கொள்ளவில்லை,

'கூட்டத்தில் கூடி நின்று கூடிப்பிதற்றல் இன்றி
நாட்டத்தில் கொள்ளாரடி—கிளியே
நாளில் மறப்பாரடி'

என்று பாரதி பாடிய பாட்டிற்கு இலக்கிய எடுத்துக் காட்டாக அன்றோ மக்களும் அரசுகளும் வாழ்கின்றன. தமிழ் நாட்டுக் கல்வியின் அவலத்தை — அறுபது ஆண்டுகளுக்கு மேலாக அதில் பட்டுழன்ற நான்— கல்வித் துறையிலேயே காலம் கழித்த நான் 1991இல் 'கல்வி எனும் கண்' என்ற நூலில் தெளிவுபட விளக்கியுள்ளேன். அந்நூலைச் சம்பந்தப்பட்ட அனைவருக்கும் அனுப்பினேன். ஆனால் ஏற்றுச் செயல்படுவார் இல்லையே!

இன்றைய கல்வி நிலை பற்றி இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் 1920-க்கு முன் பாரதி வெறுத்துக் காட்டிய அந்த அவலநிலை இன்றும் அகலவில்லையே,(வீதிதோறும் இரண்டொரு பள்ளி) வேண்டும் என அவன் கனவு கண்டான். ஆம்! இன்று வீதிதோறும் இரண்டொரு பள்ளிகள் கிராமங்களில் கூட இருக்கின்றன. ஆனால் அவன் விரும்பிய பள்ளிகள் இல்லை. எல்லாம் ஆங்கிலப் பள்ளிகள் அல்லவா! அந்த ஆங்கிலப் பள்ளிக்குப் பாரதியை அனுப்பிய அவன் தந்தையையும் அக்கல்வியையும் எண்ணி எண்ணி எப்படி நைகிறான்.

நெல்லையூர் சென்று அவ்வூணர் கலைத்திறன்
நேருமாறெனை எந்தை பணித்தனன்
புல்லை உண்கென வாளரிச் சேயினைப்
போக்கல் போலவும் ஊன்விலை வாணிகம்
நல்ல தென்றொரு பார்ப்பனப் பிள்ளையை
நாடுவிப்பது போலவும் எந்தை தான்
அல்லல் மிக்கதோர் மண்படு கல்வியை
ஆரியர்க்கிங்கு அருவருப் பாவதை'

படிக்க அனுப்பிய நிலையினையும் நம்மைப் பற்றி ஒன்றும் அறியா நிலையினையும் பிறவற்றையும் அடுக்கி அடுக்கி அடுத்தடுத்துக் காட்டுகிறானே!

'கணிதம் பன்னிரண்டாண்டு பயில்வர்பின்
கார்கொள் வானிலோர் மீன்நிலை தேர்ந்திலார்;
அணிசெய் காவியம் ஆயிரம் கற்கினும்
ஆழ்ந்தி ருக்கும் கவிஉளம் காண்கிலார்
வணிக மும்பொருள் நூலும் பிதற்றுவார்
வாழும் நாட்டில் பொருள்கெடல் கேட்டிலார்
துணியும் ஆயிரம் சாத்திரம கற்கிலும்
சொல்லுவார் எள்துணைப் பயன் கண்டிலார்'

என்றும்,

சேரன் தம்பி சிலம்பை இசைத்ததும்
தெய்வ வள்ளுவன் வான்மறை கண்டதும்
பாரில் நல்லிசைப் பாண்டிய சோழர்கள்
பார் அளித்ததும் தர்மம் வளர்த்ததும்
பேர ருள் சுடர் வாள் கொண் டசோகனார்
பிழை படாது புவித்தலங் காத்ததும்
வீரர் வாழ்த்த மிலேச்சர்தம் தீயகோல்
வீழ்த்திவென்ற சிவாஜியின் வெற்றியும்
அன்ன யாவும் அறிந்திலர் பாரதர்
ஆங்கிலம் பயில் பள்ளியுட் போகுநர்'

என்றும் உளம் நைந்து உருகிப் பாடுகிறான். அவன் ஒரு வேளை இப்போது தெருவுதோறும்ஆங்கில பள்ளிக்உள்ள நிலையில் இருந்தால் என்ன செய்வானோ,— பாடுவான்— வாடுவான்— அன்றி வீடுதேடி ஓடுவான். ஆம்! இந்த நிலை மாற வழி இல்லையா? இந்தப் பாழ்படு கல்வி இன்றும் வாழ்வதைத்தான் தன் முன்னுரையில் திரு. இராம மூர்த்தி காட்டியுள்ளார் என்பதை முன்னரே (ஆங்கிலத்தில்) குறித்துள்ளேன்.

உரிமை பெற்று அரை நூற்றாண்டு ஆயினும், ஆங்கிலேயர் நம்மை விட்டுப் போயினும், மக்கள்—சிறப்பாகத் தமிழர்கள் அவர்தம் மொழிக்கு அடிமையாகி விட்டனரே, வீடுகளில்கூட ஆங்கிலத்தில் பேசுவதைத் தானே நாம் பெருமையாகக் கொள்ளுகிறோம். ஐம்பது, அறுபது ஆண்டுகளுக்கு முன் திரு. வி.க. அவர்கள் இது பற்றிச் சொல்லியது நினைவிற்கு வருகின்றது. 'ஒரு வங்காளி மற்றொரு வங்காளியைக் கண்டால் வங்க மொழியில் பேசுகிறான். ஒரு குஜாரத்தி மற்றொரு குஜராத்தியைக் கண்டால் அவன் தாய் மொழியில் பேசுகிறான். ஆனால் ஒரு தமிழன் மற்றொரு தமிழனைக் கண்டால் தமிழிலா பேசுகிறான்' என்று ஆவலித்துக் குழைய எழுதியுள்ளார். தமிழ்மொழியினைக் கொலை செய்பவன் தமிழனே என்பதை,

'தமிழினைப் போல் இனிமை மொழி சுற்றுதற்கும் இல்லை இந்நாள்
தமிழரைப் போல் மொழிக் கொலையில் தலை சிறந்தோர் எவர் உளரே

என நைந்து நைந்துபாடுகிறார். ஆம்! கால்டு வெல், போப், வீரமாமுனிவர் போன்ற மேலை நாட்டு அறிஞர்கள் தமிழைப்போற்றி வளர்த்த நிலையில், தமிழ் நாட்டிற் பிறந்து வாழ்ந்தவர்கள் தமிழைக் குறை கூறுகின்றனர், 'தமிழ், இந்திய நாட்டுத் தென் கோடியில் விட்டுவேலை செய்கின்ற கீழ்ச்சாதி மக்களால் பேசும் மொழி' என ஒருவர் இலண்டனில் கூறினார் சென்னைப்பல்கலைக் கழகம் வெளியிட்டதமிழ்ப் பேரகராதியினை வெளியிட்ட தமிழர்-அதன் ஆசிரியர் தமிழர்-என்றால் விளிம்பிலாப் பாத்திரம் என்கின்றார். தமிழர் என்பதற்கு நேராக Refer'டம்ளர்' எனக்காட்டி அங்கே 'விளிம்பில்லாப் பாத்திரம்' என விளக்கம் தந்துள்ளார். இப்படித் தமிழ்

நாட்டுப் பல்கலைக்கழகமும் தமிழ் அறிஞர் (அரிஞர்) களும் கூறு நிலை வேறு எந்த நாட்டிலாயினும் — எந்த மொழியிலாயினும் முடியுமா!

இடைக்காலத்தில் வடமொழியொடு கொச்சைத் தமிழைக்கலந்து 'மணிப்பிரவாள' நடையில் பேசுவதை யும் எழுதுவதையும் தமிழர்பெருமையாகக் கொண்டனர். 'மணியும் பவளமும்' கலந்ததாகப் பெருமை கொண்ட னர். ஆனால் அதைக் காலத்தேவன் அழித்துவிட்டான். இப்போது அதே மணிப்பிரவாளம் ஆங்கிலம் அறியாத மக்களிடையே கூட, தமிழோடு கலந்து வழங்குகிறது. இதையும் காலத்தேவன் தமிழ் ஆற்றல் கொண்டு அழித்து விடுவான் என்பதில் ஐயமில்லை. என்றாலும் இன்றைய நிலையை எண்ணி வருந்தாமல் இருக்க முடியவில்லை.

குழந்தைகள் பள்ளி (Kinder garden) என்ற பெயரில் ஆங்காங்கே முளைத்துள்ளவற்றில், குழந்தைகளை ஆங்கி லத்தில் பேசத்தான் பழக்குகிறார்கள். அந்த வகுப்புகளில் தமிழ் எழுத்தினைக் கூடச் சொல்லிக் கொடுப்பதில்லை. (எங்கள் பள்ளியில் முதல் குழந்தை வகுப்பிலேயே L.K.G. தமிழ் ஆங்கிலம் இரண்டையும் கற்றுத் தருகிறோம். அது பலருக்கு வியப்பாக இருக்கிறது.) அந்தக் குழந்தை கள் படிக்கவும் எழுதவும் பயன்படுத்தப்பெறும் நூல்களும் அச்சிட்ட எழுத்து நூல்களும் (Copy works) பாவம்—அக் குழந்தைகள் தூக்கமுடியா அளவில் உள்ளதை நான் கண்டு கண்டு கவலைப்படுவதுண்டு. குழந்தை வகுப்பில் ஒரு பிள்ளைக்கு ரூபாய் இருநூறு அளவில் நூல்களும் குறிப்பேடுகளும் வாங்க வேண்டும் போலும். (நூல்களின் விலைகள்—தாள் விலைகள் ஏறியிருப்பினும் இப்பெருந் தொகை தேவையா என என்னை நானே கேட்டுக் கொள் வதுண்டு) தமிழக அரசு இக்குழந்தைகள் பள்ளிகளை ஒழுங்குபடுத்தி, ஒரு தனிப்பகுதியேயாக்கி தனி இயக்குநர் அமைத்து நடத்தப்போவதாகச் சொல்லிக் கொண்டு வருகிறது. அண்மையில் கூட, அது பற்றிக் கல்வி அமைச்

சர் எங்கோ ஒரு கூட்டத்தில் பேசியதாகச் செய்தித்தாள்கள் வெளியிட்டிருந்தன. ஆயினும் இதுவரையில் ஒரு ஏற்பாடும் காணோம். அவைகளைச் செம்மைப்படுத்தி, நன்கு பயிற்சி பெற்ற ஆசிரியர்களையே நியமிக்க வேண்டும் எனச் சட்டம் செய்து, மேற்பார்வையாளர்களையும் அமர்த்தி, தக்க— நல்ல இடங்களிலேயே இருக்க ஏற்பாடு செய்ய உடன் அரசு ஆவன காண வேண்டும்.

ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்திலும் சுதந்திரம் பெற்ற பிறகு சில ஆண்டுகள் வரையிலும் கல்வி மாநிலத்துக்கே உரிய பொருளாக இருந்தது. அந்தந்த மாநில மக்கள் நலம் கருதி, அவர்தம் மொழி, வாழ்வு, பண்பாடு, தொழில் வளம், நாட்டு அமைப்பு, பிற பொருள்கள் பற்றிய நிலையிலே அக்காலத்தில் பாடங்கள் அமைந்தன. அதே வேளையில் உயர்நிலையில் ஒன்றிய பாரதம் பற்றியும் அன்று ஆண்ட ஆங்கில அரசு பற்றியும் உலக வரலாறு பற்றியும் அறியவும் வாய்ப்பு இருந்தது. நான் மேலே காட்டியபடி கல்வி முறையினை ஆங்கிலேயர் காலத்தை ஒட்டியதாகவே இன்று வரை வைத்துக் கொண்டுள்ள நாம், கல்வியின் நிலையினை மாநில, மத்திய அரசுக்கு உரிய பொதுப் பொருளாக்கி விட்டோம். அதனால் எண்ணற்ற இன்னல்களை நாம் இன்று அனுபவித்து வருகின்றோம்.

இன்று தமிழ் நாட்டில் மாநிலப் பள்ளிகளோடு, மத்தியப்பள்ளிகள் போட்டியிடுகின்றன, அவற்றுள் தமிழ் நாட்டில் தமிழ் மொழி பயில வேண்டும் என்ற நிலை இல்லை வங்காளத்தில் வங்காளம் பயில வேண்டும் என்ற நிலை இல்லை. பேருக்கு மும்மொழித்திட்டம் என அமைத்தாலும் அம்மூன்றில் ஒன்று முக்கியமாக மாநில மொழி இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. மும்மொழியெனவே ஆங்கிலம், இந்தி, வேறு வடமொழி அல்லது வேற்று வெளி நாட்டு மொழிகளாகிய பிரஞ்சு போன்றவை மாணவர் எடுத்துக் கொள்ளலாம். ஏதோ தாராள

மாக அவர்கள் இருப்பதைப் போலக் காட்டி, தாய் மொழியை மட்டந்தட்டி கீழ் நிலைக்குக் கொண்டு வருவதே இந்த மொழிக் கொள்கையின் நோக்கமாகும். எத்தனை மொழியினைப் பயில வேண்டி வந்தாலும் அவரவர் தாய்மொழி—தமிழ் நாட்டில் தமிழ் அதில் ஒன்றாக இருக்கப் பார்ப்பது அரசாங்கத்தின் கடமையல் லவா! கல்வி மத்திய மாநிலங்களுக்குப் பொதுவானமை யின் மத்திய அரசு தன் மனம் போல, மாநில மக்களுக்குத் தேவையற்ற கல்வியைப் புகுத்தலாமா? 'இந்தி' நாட்டு மொழி என்பதில் யாருக்கும் ஐயமில்லை. ஆனால் தாய் மொழியே அறியாத ஒருவனுக்கு ஒன்றும் புரியா நிலையில் மற்றொரு மொழியைத் திணிக்க நினைப்பது தவறு அல்லவா! தமிழக அரசு, தம் பள்ளிகளில் இந்தியைக் கட்டாயமாக்க வில்லை என்பதற்காக, மாற்று வழியில் மத்திய கல்விக் கூடங்களைப் பல பெயர்களில் நிறுவி—அவற்றின் வழியாக அந்த மொழியைப் புகுத்த நினைத் தால் நாடு வருங்காலத்தில் என்னாகும். இந்திய விடுதலை என்றால் 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்' என்று பாரதி கூறியபடி, நாட்டில் வாழும் ஒவ்வொரு மனிதனுக்கும்—மாநிலத்துக்கும் உரிமைகள் உண்டென்பதுதானே பொருள். ஆனால் நான் சொன்னபடிதான் நீ கற்க வேண்டுமென்று மற்றவர்களை மத்திய அரசு வற்புறுத்த லாமா?

பள்ளியின் மேல் இரண்டு வகுப்புகளில் மொழி நிலை இன்னும் கேவலமாக்கப்பெறுகின்றது. அந்த இருவகுப்பு களிலும் (+2) ஒரே ஒரு மொழி மட்டும் பயின்றால் போதும். ஆங்கில வெறி பிடித்த தமிழர்கள் மட்டு மன்றிப் பிற மாநிலத்தவரும் ஆங்கிலம் ஒன்றையே மொழி யாகக் கொள்ளுகின்றனர். ஆனால், அதன்வழி அவர்கள் கல்லூரியில் சேரச் சங்கடங்கள் உண்டாகின்றன. தமிழ்

நாட்டுப் பள்ளிகளில் இருமொழிகளொடு நான்கு பாடங்கள் படிக்கும் மாணவருடன் இவர்களை எப்படி ஒத்துப் பார்க்க முடியும்? எனவே பல கல்லூரிகள் இந்த மத்திய பள்ளிகளில் பயில்வருக்கு இடம் தர முற்படுவ தில்லை. தமிழக அரசு அவர்கள்மேலும் இரக்கப்பட்டு, அவர்களும் தமிழர்களானதால் — அவர்கள் தாய்மொழிக் குத் துரோகம் செய்தாலும், கல்லூரிகளில் சில இடங்களை இம்மாணவர்களுக்கு ஒதுக்குமாறு ஆணையிட்டுள்ளது, எனினும், வாணிக வகையிலே அப்பள்ளியை நடத்திய பலர் தத்தம் கல்விக்கூடங்களைத் தமிழகக் கல்விக்கூடங் களாக மாற்றிவருகின்றனர். தமிழக அரசும் பள்ளியை நடத்த அமைத்த 'கடுபிடி' கொண்ட வலிய திட்டத்தைத் தளர்த்தி, புதிய பள்ளிகள் தொடங்கத் தாராளமாக அனுமதி வழங்க முற்பட்டுள்ளது. எனினும் அமைப்பு முறையினைத் தேர்ந்தெடுப்பதில், அவசரத்தில், அக்கறை காட்டவில்லை. மத்திய அரசும் அப்படித்தான். இந்த மத்திய அரசு 'நவோதா' போன்று வேறு வேறு பெயர் களில் பள்ளிகளைத் தொடங்கியும் மாநிலங்களின் முழுக் கல்வி உரிமையையும் பாழாக்குகின்றது.

மத்திய அரசின் இந்தப் போக்கிற்கு இடையே தமிழக அரசும் கல்வித்துறையைச் சரியாகப் போற்றவில்லை என்பேன். பத்தாம் வகுப்பு வரையில் எத்தனை வகைப் பள்ளிகள், கீழ்த்திசை நிலைப் (Oriental Schools) பள்ளிகள், மெட்ரிகுலேஷன் பள்ளிகள் எனப் பலவகை யில், பல்வேறு பயிற்று மொழிகள் அமையப் பல்வேறு பாடத்திட்டங்களை அமைத்து நடத்துகின்றது. இது எவ்வாறு பொருந்தும்? சில பள்ளிகளில் தமிழ் பயிற்று மொழி, சிலவற்றில் இரண்டும் உள்ளன. இவற்றில் தமிழ் வழிப் பயிலும் மாணவர் மேல் கல்லூரியின் எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்தில் பயில அவதி உறுவதையும் அதனால் தகுதி இழப்பதையும் காண்கிறோம். மற்றப் பள்ளிகளில் இருப்பது போல் அனைத்துப் பள்ளிகளிலும் சில வகுப்புகள் தமிழ் பயிற்று மொழியாக அமைத்து

அப்படியே கல்லூரிகளில் சில பாடங்களையாவது தமிழில் சொல்லித் தரும் ஏற்பாட்டைச் செய்யலாமே! இராஜாஜி அவர்கள் முதல்வராக இருந்த காலத்தில், அவற்றிற் கெனத் தமிழ்ச் சொற்களை ஆய்ந்து தனித்தனி அகராதி வெளியிட்டுத் தமிழிலேயே நூல்களையும் வெளிக் கொணர்ந்தாரே! பண்டைத் தமிழரும் திராவிடரும் வரிசை யர்க ஆளுகின்ற நாட்களில் இவை மறக்கப் பெற்றன—மறைக்கப் பெற்றன. அன்றே அந்த நூல்களின் வழி பயிற்று மொழி அமைந்திருப்பின் இந்நாள் தமிழ் 'எங்கும் தமிழ்—எதிலும் தமிழ்' என்று முழங்கும் நிலை மாறி உண்மையிலேயே தமிழ் எங்கும் நிறைந்திருக்குமே!

'புத்தம் புதிய கலைகள்— பஞ்ச
பூதச் செயல்களின் சேர்க்கைகள் யாவும்
மெத்த வளருது மேற்கே— அந்த
மேன்மைச் சிறப்பு தமிழ்மொழிக் கில்லை'

'சொல்லவும் கூடு வதில்லை— அதைச்
சொல்லும் திறமை தமிழ்மொழிக் கில்லை
மெல்லத் தமிழ் இனிச் சாகும்— அந்த
மேற்கு மொழிகள் புவிமிசை ஓங்கும்'

'என்றந்தப் பேதை உரைத்தான்' என்று பாரதி நைந்து பாடி, அந்தப் பேதையைக் 'கூறத்தகாதவன் கூறினன் கண்டீர்' என விளக்கியும் காட்டியுள்ளார். ஆம்! தமிழனே இவ்வாறு சொல்கிறான். அதனால் தானே பெரியவர்கள் 'தாய்க் கொலை சால்புடைத்து என்பாரும் உண்டு' என்று பாடிச் சென்றுள்ளனர்.

தமிழ்நாட்டுப் பாட அமைப்பிலும் பழைய நிலையே உள்ளது. பெருமாற்றங்கள் காணவேண்டும். நான் முன்னே காட்டியபடி— பாரதியின் பாடலின்படி— அறிய வேண்டுவனவற்றை அறியாது— தேவையற்ற—வேண்டத் தகாதவற்றையெல்லாம் பள்ளி, கல்லூரிகளில் மாணவர் கள் கற்க வேண்டியுள்ளன. எத்தனையோ சீர்திருத்தக் குழுக்களை மத்திய மாநில அரசுகள் அமைத்த

போதிலும் வேண்டிய சீர்திருத்தம் விளையவே இல்லை.

தேர்வு முறையிலும் இதே நிலை காணப் பெறு கின்றது. பள்ளியில் அல்லது கல்லூரியில் பயிலும் மாணவர் அந்தந்தப் பள்ளி— கல்லூரிகளிலேயே தேர்வு எழுதலாம் என்ற நிலை ஏற்கக்கூடியதாகாது. முன் பெல்லாம் ஒரு கல்லூரி மற்றொரு கல்லூரியிலும் ஒரு பள்ளி மற்றொரு பள்ளியிலும் எழுத வேண்டும். பச்சையப்பன் கல்லூரி லயோலாவில் எழுதும். லயோலா வேறு கல்லூரியில் எழுதும் அந்த வேறு கல்லூரி பச்சையப்பரில் எழுதும். பள்ளிகளிலும் அப்படியே. ஒரூரில் ஒரே பள்ளியோ ஒரே கல்லூரியோ இருக்கு மானால் அதற்குத் தனி ஏற்பாடுகளைச் செய்வர். அந்தந்த ஆசிரியரோ தலைமை ஆசிரியரோ தேர்வு நடத்தும் பொறுப்பை ஏற்க விட மாட்டார்கள். இந்த நிலையை ஏன் மாற்றினார்களோ தெரியவில்லை. அதே பள்ளி அல்லது கல்லூரியில் அதே முதல்வர் அதே ஆசிரியர்கள் மேற்பார்வையில் தேர்வு நடப்பது பொருந்துமா? பேருக்கு வேறு பள்ளி அல்லது கல்லூரியிலிருந்தோ, அரசாங்கக் கல்வித் துறையிலிருந்து ஒருவரோ, இருவரோ, வருவர். சில பள்ளிகள் அவர்களுக்குச் செய்வன செய்து, சாந்திப் படுத்தி, தலைமை ஆசிரியர் அறையிலேயே அமர வைத்து, தத்தம் செயல்களை — மாணவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் திறனில் தலை நிற்பன. (இவ்வாறு சில ஆண்டு களுக்கு முன் ஒரு கல்லூரி செய்ததை விடைத்தாள் திருத்துவோர்— ஆசிரியர் சொன்னதை அப்படியே எல்லோரும் ஒரே மாதிரியாக எழுதி இருந்ததைக் கண்டு பிடித்துத் தேர்வு ஆணையருக்கு உணர்த்த, அக்கல்லூரி சில ஆண்டுகள் தேர்வு இடமாக இருக்கக் கூடாது என்று சட்டமிட்டு நிறுத்தித் திருத்தினர்). இவ்வாறு அதே பள்ளியில் எழுதி நிறைய மதிப்பெண்கள் பெற்று முழுத் தேர்வு உற்று, பின் அரசாங்கப் பரிசுகளும் பெறு

கின்றனர். உண்மையாகவே தேர்வினைத் 'தேர்வாக'வே மதித்து நடத்தும் பள்ளிகள் - சிறக்கப் பயிற்றுவிக்கின்ற பள்ளிகள்— இத்தகைய மாற்றுவித்தைகள் செய்யாமை யால் சற்றே பின் அடைகின்றன. இவற்றை அரசாங்கமும் பல்கலைக் கழகங்களும் எண்ணிப்பார்க்க வேண்டும். (சில பள்ளி—கல்லூரிகள் முன்னாள் மாலையிலேயே வினாத் தாள்களைப் பிரித்து விளக்கம் சொல்வது உண்டாம். அது அறிந்த மாணவர் மற்றப்பள்ளி— கல்லூரி மாணவர் களுக்குச் சொல்ல, அத்தாள் வெளியானது தெரிந்து மறுமுறை தேர்வு நடத்தும் நிலையினையும் ஒரு சில ஆண்டுகளாகக் காண்கின்றோம்.) எனவே அனைவரும் இது பற்றிச் சிந்திக்கவேண்டும். மாணவர் பள்ளி, கல்லூரி களில் பெறுகின்ற தேர்வு மதிப்பெண், வகுப்பு நிலை முதலியனவே அவர்தம் வாழ்வை அறுதியிடுவன வாதலால் இதில் தவறு நடவாது பார்த்துக் கொள்ளுதல் அரசின் கடமையாகும். இல்லையேல் நல்லார்—வல்லார்— வாட, அல்லார் அலுவலகங்களிலும் பிற உயர் இடங் களிலும் இருக்கப்பெற வாய்ப்பு உண்டாகி, நாடு நலிவுறும் நிலைக்கே செல்லும் என்பதை அனைவரும் உணரின் நன்று. உணர்ந்து செய்வார்கள் என்ற முழு நம்பிக்கையோடு நான் மேலே செல்லுகிறேன். இடையில் மத்திய பள்ளிகள் தேர்வு பற்றி ஒரு குறிப்பு,

மத்திய பள்ளிகளில் இத்தேர்வு ஒரு வகையில் நடை பெற்றது. அதே பள்ளியில் மாணவர் தேர்வு எழுதினா லும் வேற்றுப்பள்ளியின் முதல்வர் தலைமை மேற்பார்வை யாளராக அமைந்து, தேர்வினைக் கவனிப்பார். அவர் வந்த பிறகே வினாத்தாள்கள் — தேர்வுக்கு 30 நிமிடங் களுக்கு முன்னரே பிரித்து, எடுத்து, உரிய வகுப்புகளுக்கு அனுப்பப்பெறும். பின், தேர்வுத்தாள்களை முன் கூட்டியே பள்ளிகளுக்கு அனுப்புவதால், தலைமைத் தேர்வாளர் துணையுடனோ அன்றி வேறு வகையிலோ முன்னாள் மாலையே பிரித்து மாணவர்களுக்கு விடை

சொல்லித் தரும் நிலை இருந்தது போலும். எனவே வினாத்தாள்களை அண்மையிலுள்ள வங்கிகளுக்கு அனுப்பி, அங்கிருந்து அன்றாடம் தேர்வுக்கு 30 நிமிடம் முன்புதான் தலைமைத் தேர்வாளர் எடுத்துச் செல்ல ஏற்பாடு பின்பு இருந்தது. இப்போது எப்படியுள்ளதோ? நான் அறியேன். ஆயினும் இவற்றுக் கெல்லாம் மேலாக, மாணவர்தம் உண்மைத்திறனை அறிய வேண்டுமாயின், நாடு நல முற நல்ல வருங்காலத் தலைவர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமாயின், நான் மேலே சொல்லிய முறைதான் சிறந்தது; அதுவே நம் நாட்டில் நெடுங்காலம் பழக்கத்தில் இருந்தது— நல்லவவரைத் தேர்ந்தெடுக்க வழி காட்டியது— வழி காட்டுவது. எனவே அரசாங்கம் விரைந்து அந்த வகையில் தேர்வுகளை நடத்த ஏற்பாடு செய்யவேண்டும். பல்கலைக் கழகங்களும் அந்த முறையினையே பின்பற்ற வேண்டும்.

தேர்வுகள் நடத்துவது எதற்காக? மாணவர் பயின்ற பாடங்களில் நன்கு தேர்ச்சி பெற்று விளக்கமுற்றுள்ளனரா என அறிவதற்காக ஆனால் அந்தவகையில் தேர்ச்சி பெறாதவரையும் மேல் வகுப்பிற்கு அனுப்புவது எப்படிப் பொருந்தும்? பட்ட வகுப்பில் முதலாண்டு இரண்டாம் ஆண்டுகளில் ஒரு பாடத்திலும் தேர்ச்சி பெறாதவர்கூட மேல் வகுப்பிற்கு மாற்றப் பெறுகின்றனர். இறுதி ஆண்டாகிய மூன்றாம் ஆண்டில் தேர்ச்சி பெற்றும் முதல் ஆண்டின் பாடங்களில் தேர்ச்சி பெறாத மாணவர்களும் உள்ளனர். இந்த முறை ஏற்புடைத்தாகுமா? முதலாண்டின் பாடங்களையே நன்கு பயின்று தேர்ச்சி பெறாதவர் பின், இரண்டாவது ஆண்டுப் பாடங்களுடன் இதையும் பயின்று எப்படித் தேர்ச்சி பெற முடியும்? ஆக, எதிலும் ஆழ்ந்த அறிவு பெறா நிலைக்கே அம்மாணவர் தள்ளப் பெறுகின்றார். இதே நிலைதான் மேல்பட்ட வகுப்பிலும் P osl- graduate) உள்ளது முதலாண்டு தேர்ச்சி பெறாத (வரை இரண்டாம் ஆண்டு படிக்க அனுமதித்து,

இரண்டிலும் நுனிப்புல் மேயும் அவலநிலையை உண்டாக்குகின்றனர். பள்ளிகளிலும் 'இத்தகைய அவல நிலை உள்ளது. பதினோராம் வகுப்பிற்கு அரசாங்கத் தேர்வு இனி நடை பெற உள்ளது. ஆனால் அத்தேர்வில் வெற்றி பெறாதவர்களை மேல் வகுப்பிற்கு அனுப்பிவிட வேண்டும் என்று ஆசிரியர்கள் விண்ணப்பம் செய்ததாகப் படித்து வியந்தேன். சில ஆண்டுகளுக்குமுன். பள்ளியில் பயிலும் மாணவர் எட்டு அல்லது ஒன்பதாம் வகுப்பு வரை தேர்ச்சி பெறாததற்காக நிறுத்தக் கூடாது என்று அரசாங்கமே ஆணையிட்டுள்ளது. பள்ளிக்கூடத்தில் பதிவு செய்து விட்டு, ஒரு நாள் கூட வராவிட்டாலும், ஆண்டுத்தேர்வு எழுதாவிட்டாலும், அம்மாணவன் மேல் வகுப்பிற்குச் செல்லத்தகுதி பெற்று விடுகிறான். இந்த நிலையில் கல்வியின் தரம் எப்படி உயரும்? நல்ல வேளை இந்த முறை இப்போது இல்லை என எண்ணுகிறேன். எல்லோரும் பயில வேண்டும் எனக் கட்டாயமாக்குவதில் தவறு இல்லை. அது நம் நாட்டுக்குத் தேவையும்கூட. ஆனால், படிக்காவிட்டாலும், தேர்ச்சி பெறா விட்டாலும், பள்ளிக்குப் பிள்ளை வராவிட்டாலும் எல்லாருக்கும் தேர்ச்சி பெற்ற நிலையினைத் தருதல் தேவைதானா? முறைதானா? எண்ணிப் பாருங்கள்!'

பல்கலைக் கழகங்கள் உரிய ஆய்வுப் பட்டங்கள் வழங்குவதிலும் சரியான முறை மேற்கொள்ளவில்லை. இது பற்றிய அவல நிலையினை அலசி, விளக்கி இரண்டொரு கட்டுரைகள் சில ஆண்டுகளுக்கு முன் 'இந்து' ஆங்கில நாளிதழில் வந்தன. ஆனால் அதை எந்தப் பல்கலைக் கழகமும் மறுக்கவில்லை. எனவே அந்த அவல நிலை இன்றும் நீடிக்கிறது என்பதுதானே உண்மை.

மேற்பார்வையாளரே தேர்வுக் குழுவின் அமைப்பாளராகிறார். அவருக்கு வேண்டிய இருவர் அக்குழுவில் இடம் பெறுவர். பின் முடிவு எப்படி இருக்கும் என்று

சொல்ல வேண்டுமோ! தமிழ் முதுகலை வகுப்பிற்கே ஒரு தாள் தனிப் பொருள் பற்றிப் பெரும் கட்டுரை வடிவில் எழுத வேண்டும் என்று, மதுரைப்பல்கலைக்கழகம் ஆரம்பத்தில் ஒரு ஏற்பாடு செய்திருந்தது. ஆனால் அது ஓராண்டுக்கு மேல் இல்லை என எண்ணுகின்றேன். காரணம் இதுதான்: அந்த முதுநிலைப் பட்ட வகுப்பில் நானும் வேறு சிலரும் தேர்வாளராக இருந்தோம். நாங்கள் இருவர் இருவராகப் பிரிந்து, முப்பது பேரை அக்கட்டுரைகள் பற்றிக் கேள்வி எழுப்பி விடை கண்டு முடிவு செய்ய ஏற்பாடு. எங்களிடம் வந்த முப்பது பேரில், பலருக்குத் தாம் எழுதிய பொருள்களின் அடிப்படையே தெரியவில்லை. என்ன எழுதியுள்ளார்கள்? எப்படி முடிவு கண்டார்கள்? எடுத்தாண்ட மேற்கோள்கள் யாவை? என்பன போன்ற வினாக்களுக்கே பலரால் விடை சொல்ல முடியவில்லை. அவர்களுள் பெரும்பாலோர் உண்மையினை ஒத்துக்கொண்டனர். நால்வர் தவிர்த்து, பிறர், வேறு யாரோ எழுதிக் கொடுக்க, தம் பெயரால் அவற்றைத் தந்ததாக ஒப்புக் கொண்டனர். சிலர் தமிழ்றிந்த உறவினர் எழுதித் தந்தனர் என்றனர். சிலர் காசும் பணமும் வாரி இறைத்து எழுதி வாங்கிக் கொண்டனர் என்றனர். இவ்வாறே பிற குழுவினரும் கண்டனர். இந்த அவலநிலை முதுகலைக்கு வேண்டாம் என எங்கள் தேர்வுக்குக் குழு முடிவு செய்தது. அதை அன்று துணைவேந்தராக இருந்த டாக்டர். மு. வரதராசனார் அப்படியே ஏற்றுக்கொண்டு அந்த ஆண்டோடு அதை நிறுத்திவிட்டார்.

இந்த முதுகலைக்கட்டுரை எழுதும் முறை புதியதன்று. அமெரிக்க நாட்டுப் பல்கலைக்கழகங்களில் இம்முறை உள்ளது. 'பென்சில் வேனியா' பல்கலைக்கழகத்தில் தமிழ் முது கலை பாடமாக உள்ளது. அதில் இக்கட்டுரைத் தாளும் உண்டு. அந்த நாட்டு மகள் தமிழ் நாட்டு மருமகள் ஒருவர் அத்தேர்வில் ஒரு கட்டுரை எழுதியிருந்தார் 'தமிழ்

நாட்டில் ஒன்பதாம் நூற்றாண்டில் சூரிய வழிபாடு,என்று ஆங்கிலத்தில் எழுதப் பெற்று (Worship of Sun God in Tamil Nadu During Nineth Century) அதை ஆய்வுச் செய்யத் தமிழ்த்துறையினர் மட்டுமன்றி, வான நூலா ராய்ச்சி, அணு ஆய்வு, நில நூல் ஆய்வு, ஆங்கிலத்துறை எனப் பல பிரிவினைச் சேர்ந்த பதினாறு கற்றுணர்ந்த பேராசிரியர்கள் அக்கட்டுரையினை நன்கு படித்து, பலப் பல வகையில் வினாக்கள் எழுப்பினர். நானும் அவருள் ஒருவனாக அங்கே இருந்தேன். அந்த மாணவி, விடுத்த கேள்விகளுக்கெல்லாம் தக்க பதில் கூறவே பட்டம் வழங்கலாம் எனப் பரிந்துரை செய்தோம். (இதுபற்றி என் நூல் 'ஏழு நாடுகளில் எழுபது நாட்கள்' என்பதில் விரிவாக எழுதியுள்ளேன், ஆனால் இங்கே 'டாக்டர்' பட்டம் வாங்குவோருக்கே அத்தகைய தேர்வு நிலை இல்லையே. நான் மேலே காட்டியபடி மேற்பார்வை யாளராக, அவருக்கு வேண்டிய இருவர் துணையாளராக அமைவதால் பட்டம் வாங்குவது கடினமல்லவே.

இவ்வாறு பட்டம்பெற்று வருபவர் பின் ஆசிரியர் களாகவோ வேறு துறையிலோ பணியாற்றுவார்களாயின் இவர்கள் பணி எப்படிச் சிறப்புற அமையும்! பல்கலைக் கழகங்கள் இப்படிப்பட்ட உயர் பட்டம் பெறுபவர் களுக்கு முன் உரிமை தரவேண்டும் என்கின்றன. ஆனால் ஒரு சிலரன்றி பலர் இந்நிலையில் உள்ளமையின் அவர் களிடம் பயில்வார் என்னாவர் என்பது எண்ணத்தக்க தொன்றல்லவா? எடுத்துக்காட்டு ஒன்றினைக் கூறுவேன்.

எங்கள் கல்லூரிக்குத் தமிழாசிரியர் வேண்டி விளம்பரம் செய்தோம் பல விண்ணப்பங்கள் வந்தன. ஓரிரு டாக்டர் பட்டம்பெற்ற மங்கையரும் இருந்தனர். அவருள் ஒருவரை நேர்முகத் தேர்வுக்கு அழைத்தோம். அவருடைய ஆய்வுக்கு உரிய தலைப்பு 'ஔவையார்'— அவரிடம் வாக்குண்டாம் என்ற ஒரு நூல் பற்றித்

தெரியுமா? அதை எழுதியது யார்? அப்பாடல்கள் எதைக் காட்டுகின்றன? என்ற கேள்விகள் கேட்கப்பெற்றன. அவர் திகைத்தார். பின் 'வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம்' என்பதையே திரும்பச் சொல்லிச் சொல்லி, மேலே ஒன்றும் தெரியாதாகி அப்படி ஒரு நூல் உண்டு என்றனர். அதன் ஆசிரியர் பெயரும் சொல்லத் தெரியவில்லை. அப்படியே ஆங்கிலத்தில் 'டாக்டர்' பட்டம் பெற்ற ஒருவரை, பள்ளி மேல் வகுப்புகளுக்குப் பாடம் சொல்லித்தர ஆரம்பித்து அதற்குரிய குறிப்புகளையும் தொகுக்கச் சொன்னார் முதல்வர். அத்தொகுப்பில் கீழே கண்ட வாக்கியங்கள் இடம் பெற்றிருந்தன (நல்ல வேளை மாணவர் நலம் கருதி அவர்களை நீக்கி விட்டோம்)

1. **I Will give the details of North America position and sise.**
2. how it **can used in** various ways and types of natural resources **all** the details **are give** very clearly.
3. To enable **to the know the** students what is Transport.
4. It will clearly **deals with**
5. The teacher says the first' of the chapters **and reads out.**
6. Makes the stucleuts to sead out to inprove their **influency.** Then the teacher gives the meaning for new words and explains line by line.

இத்தகைய நிலையில் இன்றைய ஆய்வுப் பட்டங்கள் அமையுமாயின், இவர்கள் வழி பயிலும் மாணவர் நிலை என்னாவது? பல்கலைக் கழகங்கள் இந்த முறையினை மாற்றி நாட்டுக் கல்வி நலத்தை நன்கு காக்க முன்வர வேண்டும்.

எனவே, இவ்வாறான மாறுபட்ட நிலைகளைக் கல்வித்துறையினர் உடன் மாற்ற வேண்டும். தக்க மேற்பார்வையில் இடம் மாற்றி நடத்தும் பள்ளி, கல்லூரித் தேர்வுகளும், ஆய்வுப் பட்டங்களுக்கு மேலை நாட்டுத்

தேர்வு முறைகளும் அமைந்தால் உண்மை அறிவு புலனாகும்! நல்ல கல்வியாளர் நாட்டில் தேர்ந்தெடுக்கப் பெற, அவர் வழியே நாட்டுக்கல்வியும் நலம் பெறும். நாட்டுக் கல்வி நலம் பெற்றால் பிற எல்லா நலன்களும் நாட்டில் நிரம்பும் என்று அன்றும் இன்றும் அறிவுடைய வர் அனைவரும் கூறிவருகின்றனர். எனவே அரசும் கல்வித் துறையும் இந்த வகையான மாற்றங்களை உடனடியாகச் செய்ய முற்படவேண்டும்.

கல்வி, சமுதாயத்தை உயர்த்துவது; வாழ வைப்பது. எனவே இதில் அரசியல் சிறிதும் கலக்கக் கூடாது. ஒவ்வொரு கட்சியும் ஆட்சிக்கு வரும்போது தத்தம் தலைவர் வாழ்வினை, அது எவ்வளவு வறண்டதாயினும்— மாணவர் தம் பாடநூல்களில் புகுத்துவதும், மாற்றுக் கட்சி ஆட்சிக்கு வந்தால், அதை எடுத்துத் தம் தலைவர் புகழ் பாடும் பாடங்களைச் சேர்ப்பதும் வழக்கமாக வரு கின்ற அநாகரிகச் சேற்றில் நாம் ஆழ்ந்துவிடக்கூடாது. அது மாணவர்தம் நல்லறிவை—உண்மை அறிவை மழுங்கச் செய்யும் — மாசுபடுத்தும்— அதனால் நாடு நாடாகாது அழியும்.

பாடநூல்களை அரசாங்கமே தயாரிக்க ஏற்பாடாகி வருகின்றது. அது ஒரு வகையில் நல்லது என்று சிலர் கூறினும் பொதுவாக அந்த முறையினைச் சிறந்தது என்று கூற முடியாது நாட்டில் ஒவ்வொரு துறையிலும் ஆய்ந்து அறிந்து தெளிந்த நல்லோர் பலர் உள்ளனர். அவர்களை விட்டுவிட்டு அரசாங்கம் தனக்கு வேண்டிய வர்களை குழுவாகவோ தனியாகவோ அமைத்து நூல் களை எழுதச் செய்து, அந்த நூல்களையே நாட்டில் உள்ள அனைவரும் படிக்க வேண்டும் என வற்புறுத்துவது வாழ்வுக்கு—நல்வாழ்வுக்கு ஏற்றதாகாது. முன்பெல்லாம் நூற்றுக்கு மேற்பட்ட பதிப்பகங்கள், பலப்பல அறிஞர் கள்— நல்லாசிரியர்கள் ஆகியோரைக் கொண்டு, ஒரே

வகுப்பிற்கு பலப்பல பாட நூல்களை எழுதி வெளியிடுவர். அவற்றை ஆராய்ந்து, பிழையுளதேல் திரும்பி அனுப்பித் திருத்தம் செய்யவும் நல்லனவற்றை ஏற்றுக்கொள்ளவும் எனத் தனித்த அறிஞர் குழு அரசாங்கத்தால் அமைக்கப் பெற்றது. அதன் வழியே ஒரு வகுப்பிற்கு ஒரே பாடத்திற்குப் பல நூல்கள்—பல வெளியீட்டாளர்களால் பல அறிஞர்களால் எழுதப் பெற்று வெளிவரும். ஒவ்வொரு பள்ளியும் அவற்றை ஆராய்ந்து, தத்தமக்கு வேண்டிய நல்லனவற்றை எடுத்துக் கொள்ளும்.

அக்காலத்தில் இளங்குழந்தைகள் உள்ளத்தே நல்ல பாடங்கள்— விளக்கங்கள் பதியும். அவர்கள் வளர வளர, அவர் வழியே சமுதாயம் நலம் பெறும். ஆனால் இன்றோ ஒரே நூலை அது தரமற்றதாயினும் பிழையுற்றதாயினும் எல்லோரும் படிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது. இந்த முறை வளரும் கல்விக்கு முட்டுக் கட்டையாக்கி, நல்ல கல்வியையும் அதன் வழியினையும் நலனையும் இல்லையாக்குகின்றது. இது பற்றிப் பல அறிஞர்கள் பத்திரிகைகளில் எழுதிவருகின்றனர். எனினும் அரசு கவலையற்றுச் செயலாற்றுகின்றது. 'இது நாட்டுக்குக் கல்வியால் நலம் விளைவதற்கு மாறாகவே அமையும். எனவே உடன் அரசு ஆவன செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இவ்வாறே தொழிற்கல்வி முறைகளும் பயிற்சிக்கல்வி முறைகளும் நிரம்ப மாற்றப் பெறவேண்டும். கல்லூரி ஆசிரியர்களுக்கு, பள்ளி ஆசிரியர்களுக்கு உள்ளமை போன்று— தனிப் பயிற்சி வகுப்புகள் ஓராண்டு அளவையேனும் இருக்க வேண்டும். நேற்று முதுநிலைக் கல்வி பயின்று இன்று அதே கல்வி பயில்வாருக்குப் பாடம் சொல்லும் அவலநிலை இன்று நாட்டில் உள்ளது: இதனால் பயிலும் மாணவர் தரம் இழந்து தடுமாறுகின்றனர். கல்லூரி ஆசிரியர்களுக்குப் பாடங்கள் தயார்

செய்ய, நிறைய ஓய்வு நேரங்கள் — பள்ளி ஆசிரியர்களை விட அதிகமாக— தரப்பெற்றும் அவர்கள் ஒன்றும் பாடங்களை ஆய்ந்து அறிந்து தெளியாது, வெறும் புத்தகங்களைக் வைத்துப் படிப்பதும் அதையே குறிப்பாக மாணவர்களை எழுதிக் கொள்ளச் சொல்வதும் அன்றாட நிகழ்ச்சிகளாக உள்ளன. அக்குறைபாடுகளைச் சுட்டிக் காட்டினாலேயே அவர்களுக்கு ஆத்திரமும் கோபமும் வருவதையும் காணமுடிகின்றது. ஆங்கிலத்தில் கோல்டு ஸ்மித் (Gold Smith) போன்றோர் ஆசிரியர்தம் இலக்கணங்களை வகுத்துள்ளது போலவும் நல்லாசிரியர்கள் அமைய வேண்டும். இதற்கான வழிமுறை அரசு உடன் அலசி ஆராய்ந்து தேர்ந்து தெளிந்து கடைப்பிடிக்க வேண்டும். இன்றேல் மேனிலைக் கல்வி பயனற்றதாகவே முடியும்.

பள்ளி, கல்லூரிகளில் சேர இயலாதவர்கள் பயிலும் வகையில் இன்று அஞ்சல் வழிக்கல்வி முறை எல்லாப் பல்கலைக்கழகங்களிலும் ஏற்று மேற்கொள்ளப் பெறுகின்றது. ஒவ்வொரு பல்கலைக் கழகமும் போட்டி இட்டு இச்செயலைச் செய்கின்றது. அதற்கென எப்போதோ ஒருமுறை இரண்டு நாட்கள் (சனி ஞாயிறு) யார் யாரையோ கொண்டு வகுப்புகள் நடத்துகின்றன. கத்தை கத்தையாக அச்சிட்டும் படி எடுத்தும் பாடங்களை அனுப்பி வைக்கின்றன. எனினும் எடுத்துக் கொண்ட பாடத்தை நன்கு முற்றக் கற்க முடியுமா? எங்கோ ஒரு சிலர் உண்மையிலேயே ஆர்வமுடையவர் நன்கு பயிலலாம். ஆனால் பெரும்பாலானோர் தம் வேலைகளுக்கு இடையில் முற்றக் கற்றவராக மாட்டார்கள். சில பல்கலைக்கழகங்கள் சேர்பவர்கள் எல்லோரையும் தேர்ச்சி பெற்றவர்களென அறிவிப்பதாகவும் - அதனால் அதில் பலர் சேர்வதாகவும், அந்தவகையில் அவை பெரும் பொருள் ஈட்டுவதாகவும் ஒரு சிலர் கூறக்கேட்டிருக்கிறேன். இது உண்மையாயின் வருந்த வேண்டியதே, காலை முதல் மாலை வரையில் குருவின் வீட்டிலேயே

இருந்து, அவர்கள் வீட்டு வேலைகளையும் செய்து, பல ஆண்டுகள் அவரோட கழித்துக் குருகுலவாசம் செய்த நாடு நம் நாடு. பேரரசர்தம் பிள்ளைகள் உட்பட்ட அவ்வாறு பயின்று பாடங்கள் மட்டுமன்றி அரசர்களுக்கு வேண்டிய போர்ப்பயிற்சிகள் போன்றவற்றையும் பிற வாழ்வியல் தன்மைகளையும் கற்றவர்களென அறிகிறோம் இன்று நூல் இல்லாமல், ஆசிரியர் இல்லாமல் முறையான வகுப்புகள் இல்லாமல்— எதுவும் இல்லாமல் எப்படியோ படித்தோ படிக்காமலோ பட்டம் பெறும் நிலையினையும் காண்கிறோம். அதிலும் தெளிந்த அனுபவப் பயிற்சியும் ஆய்வுகளச் சோதனைகளும் உடைய ஆசிரியர் பயிற்சி, உயர்ந்த அறிவியல் பட்டப் படிப்புகள் 'B.Ed,M Sc' போன்றன இவ்வாறு அஞ்சல் வழியே கற்றுத் தருவது எவ்வாறு பொருந்தும்? அவ்வாறு பயில்கின்றவர்கள் எங்கேனும் அலுவலகங்களில் எழுத்தாளராகவோ வேறு வகையிலோ பணியாற்றினாலும் கவலை இல்லை. ஆனால் அவர்கள் ஆசிரியர்களாகக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் இடம் பெற்றால் அவரிடம் பயிலும் மாணவர் நிலை என்னாவது? அதிலும் நான் மேலே காட்டியபடி எதையும் முன் தயார் செய்யாது வகுப்புக்குச் செல்லும் நிலையில் அவர்கள் இருந்தால் மாணவர் என்னாவர்? இப்போதே நூற்றுக்கு ஐம்பது நாற்பது விழுக்காடு தேறும் பள்ளிகளும் கல்லூரிகளும் உள்ளன என்பர். சில பல்கலைக்கழகங்கள் தேர்வுநிலை குறைவாக இருப்பின் கூடுதல் எண்களை வாரி வழங்கும் முறையும் உண்டு. ஒரு காலத்தில் 27ம் அதற்கு மேலும் (34வரை) உள்ளனவற்றை எல்லாம் முப்பத்தைந்தாக்கி, அதன்வழி அதிக மாணவர்கள் தேர்ச்சி பெற்ற ஒரு நிலையினை நான் அறிவேன். அரசாங்கமே 'Moderation Board' என்று அமைத்து இத்தகைய செயல்களுக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கின்றது என்பது வேறு. இவ்வாறு எல்லாம் செல்வது கல்விக்கு நலம் சேர்ப்பதாகாது.

நம் நாடு கல்வியில் பின் நோக்கி—மிகவும் தாழ்ந்த நிலையில் இருப்பது உண்மை. தற்போது நூற்றுக்கு நாற்பத்திரண்டு பேர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள் எனக் கணக்கெடுத்துள்ளனர். விடுதலை பெற்றபின், எங்கோ 18, 16இல் இருந்த நிலை மாறி இதற்கு உயர்ந்துள்ளமை போற்றுதற்குரியதே எனினும் இந்த நாற்பத்திருவரில் கையெழுத்துப் போட, கூட்டிப் ப்டிக்கத் தெரிந்தவர்கள் பாதியாகக் கழிவர் என்பர். எப்படியாயினும் எழுத்தறிவு இயக்கம் இந்த அளவு செய்தல் போற்றுதற்கு உரியதே!

இன்று நாட்டில் எழுத்தறிவில்லா நிலையைப் போக்க மத்திய மாநில அரசுகள் பெரும்முயற்சி செய்கின்றன. கோடி கோடியாகச் செலவு செய்கின்றன. ஆயினும் அதைச் செயல்படுத்துவோரில், ஒரு சிலர் தவிர்த்து,பெரும் பாலோர் செய்யவேண்டிய பணிகளைச் செம்மையாகச் செய்யவில்லையே! அதனாலேயே வளரவேண்டிய வளர்ச் சியைக் காணமுடியவில்லை. அரசாங்கங்களும் பெருந் தொகைகளை ஒதுக்கிவிட்டோம் என்று விளம்பரம் செய் வதோடு அமையாது, களப்பணிகள் நன்கு நடைபெறு கின்றனவா என்பதைத் தக்கார் வழிக் கண்டு தெளித்து, குறையுளதேல் தீர்க்க முயலவேண்டும். மக்களுக்கு நலம் செய்வதற்கெனவே சட்டமன்றங்களையும் பாராளு மன்றத்தையும் அலங்கரிக்கும் உறுப்பினர்கள் தத்தம் தொகுதியில் அடிக்கடி சுற்றி உழன்று செயல் முறை களைக் காண வேண்டும். மத்திய மாநில அமைச்சர்களும் கூடிய வரையில் சுற்றி உழன்று செயல் பற்றிக் காண வேண்டும். இவ்வாறு அனைவரும் கலந்து செயலாற்று வார்களாயின் நாட்டுக் கல்வி நலம் பெறும் என்பது உறுதி.

இன்று மருத்துவக் கல்லூரி, பொறியியல் கல்லூரி அவை சார்ந்த பிற நிறுவனங்கள் தனியார் வழி பலப் பல வாகப் பல்கிப் பெருகுகின்றன; மக்கள் வேட்கை அறிந்து.

அளவற்ற நிலையில் அவை பெருகினாலும் அவற்றின் தரம் சிறந்ததாக உள்ளதா எனப் பலர் ஐயுறுகின்றனர். மத்தியில் உள்ள அனைத்திந்திய தொழில்கல்வி, மருத்துவக்கல்லூரி நிறுவனங்களும் மாநிலத்தில் உரிமை வழங்க உள்ள நிறுவனங்களும் வேண்டுவார் வேண்டு வதை வாரி வழங்கும் நிலையில் உள்ளமையின், இருக்க வேண்டிய நிலையில் இருந்து, சிலர் இயங்கவில்லை என அறிகிறோம். மேலும் அறிந்தாலும் பணம் பதவி போன்ற வற்றின் பரிந்துரையாலும் பிறவற்றாலும் செயலாற்ற முடியாது நிற்கின்றனர். எத்தகுதி இன்றேனும் பணம் தந்தால் எத்தகைய பாடமும் தரப்பெறும் என்பதைப் பற்றிப் பத்திரிகைகள் வெளியிட்டுள்ளன. அது தவது என்று யாரும் மறுப்பார் இல்லை. சென்ற ஆண்டு தமிழ்நாட்டில் ஒரு பல்கலைக் கழகத்திலே துணைவேந்தர் இல்லா நிலையில் நிகழ்ந்த அவலநிலை பற்றி நாடே அறியும். இந்தக் கொடுமை கல்வியில் வந்தால் நாட்டுக் கல்வி நலம் பெறுவ தெங்கே? நன்கு தேர்ச்சி பெறாத மருத்துவர்கள் 'நோய்நாடி நோய் முதல் நாடி அது தணிக்கும் வாய் நாடி வாய்ப்பச்செயல்' என்ற வள்ளுவர் வழி நிற்கத் தெரியாமல் நோயாளிகளை வாடவிடு கின்றனர். அப்படியே பொறியாளர் தம் மேற்பார்வை யில் கட்டும் பல கட்டடங்கள், பாலங்கள் போன்றவை விரைவில் கெடுகின்றன எனவே அடிப்படை நன்று அமையப்பெற்ற, ஆழ்ந்த கல்வி முறையினை வல்லார் வழி நாட்டில் பரவவைத்து, வருங்காலச் சமுதாயத்தை வாழ வைக்க வேண்டியது அரசின் கடமையும் மற்றவர் கடமையும் ஆகும்.

இன்று கல்வி நலம் காணாத தாழ்த்தப்பட்டோர் கற்று உயரும் வழியில் பள்ளி, கல்லூரி, தொழிற்கல்லூரி, மருத்துவக் கல்லூரி போன்ற வற்றில் மாணவர் சேர்க்கை சாதி அடிப்படையில், வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ முறையில் அமையச் சட்டங்களும், நீதிமன்ற வழிமுறை களும் பிறவும் அமைகின்றன. அறுபது எழுபது ஆண்டு

களுக்குமுன் நீதிக் கட்சி, தமிழகத்தில் ஆண்டகாலத்தில், அரசாங்க உத்தியோகத்தில் இந்த வகுப்பு வாரி முறை புகுத்தப்பட்டது ஒரே இனத்தைச் சேர்ந்தவரன்றி, பலரும் இடம் பெறும் இந்த நிலை, இன்று கல்வி முறையிலும் பின்பற்றப்படுகிறது. நூற்றுக்கு அறுபத்தொன்பது தாழ்த்தப் பட்டோருக்கு என அறுதியிட்டு, அதன் வழி செயலாக்கம் நடைபெறுகின்றது. எனினும் அதிலும் அரசாங்கமும் உயர்நிலையில் உள்ளவர்களும் அதிகாரிகளும் தம் மனம் போன போக்கில் நடப்பதாகவும் அதற்கென நீதி மன்றங்களில் வழக்குகள் தொடுக்கப்படுவதாகவும் காண்கிறோம்.

'எல்லாரும் எல்லாச் செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை உடையாரும் இல்லை'

என்று கம்பன் கூறியபடி, எல்லோருக்கும் எல்லாச் செல்வங்கள் அமைய வேண்டியதே. அதிலும் கல்வி அந்த வகையில் முக்கிய இடம் பெறுகிறது அரசாங்கம் அதற்கெனப் பல விதி முறை அமைத்து மாணவர் சேர்க்கையை வகைப்படுத்த நினைக்கிறது. எனினும் சில தனியார் நிறுவனங்கள் தம் வழியில் செல்வதையும் காண்கிறோம், இந்த நிலை மாறி எல்லோரும் கல்வி கற்கும் வாய்ப்பு உண்மையில் உண்டாவதே நாட்டுக்கல்வி நலம் பெறுதற்கு வழியாகும்.

முன், மாநில மொழிகள் போற்றா நிலையினை விளக்கி எழுதினேன். அக்குறையை அரசர்ங்கம் நினைத்தால் - உடனே செயல்படுத்தினால் அக்குறை நீங்கும். பள்ளி கல்லூரிகளில் பயிற்று மொழி தமிழ்தான் என்று தமிழ்நாட்டில் உறுதி செய்ய வேண்டும். தாய்மொழி தமிழ் அல்லாதார் அவரவர் தாய்மொழியினையே வேற்று மொழியினையே கொள்ளலாம் மொழிப் பாடத்துக்கு அதுவாக, பயிற்று மொழி தமிழாகவோ ஆங்கிலமாகவோ அமையலாம். அது மட்டுமன்றி, தமிழ்நாட்டில் தமிழ் வழி

யில் கற்றவர் களுக்கு மட்டுமே, அரசாங்க அலுவலகப் பணிகளிலும் அதன் சார்பாக உள்ள பிற நிலையங்களின் பணிகளினும் அரசாங்க மானியம் பெறும் பள்ளி, கல்லூரி போன்றவற்றினும் இடம் தரப்பெறும் என்று விதி கொண்டு வர வேண்டும். அப்படியே பிற மாநிலங்களில் செயலாற்றலாம் பிற மாநிலத்தவர் தமிழ்நாட்டில் தமிழ் வழியே கற்பவராயின் அவருக்கும் சலுகை தரப் பெற வேண்டும். இந்த முறை செயலில் வருமானால் நிச்சயம் அவரவர் தாய் மொழி வழிக் கல்லூரிகள், பள்ளிகள் வழியே அவரவர் மொழி தழைத்தோங்கும். உலக நாடுகளில் பெரும்பாலானவை இம்முறையினைத்தான் பின் பற்றுகின்றன.

அனைவருக்கும் கல்வி பற்றியும் சற்றே எண்ணல் வேண்டும். அனைவரும் கல்வி கற்றால், தம்மை எதிர்க்கும் அறிவும் ஆற்றலும் பெற்றுவிடுவர் எனக் கருதி, ஒரு வேளை ஆங்கிலேயர், தொடக்க நாளில்— கிழக்கிந்திய கம்பெனி ஆட்சி நடத்திய நாளில், நாட்டுக்கல்வியைப் போற்றவில்லை, பின்பும் அவர்கள் கல்வியில் கருத்திருத்த வில்லை. எனினும் உரிமை வேட்கை மிக்கு, நாட்டு உரிமையில் நம் நாட்டு மக்கள் தீவிரமாக ஈடுபட்டபோது அவர்களைக் கண் துடைப்பதற்கு எனவோ அன்றி வேறு காரணத்தாலோ கல்வியில் கருத்திருத்தி வளர்க்க முயன்றனர். தீண்டாமை ஒழிப்பு, கல்வி வளர்ச்சி போன்றவற்றில் மக்களை ஈடுபடுத்தினர். சற்றே கல்வி ஓரளவு வளர்ச்சி யுற்றதெனலாம்.

ஆனால், சுதந்திரம் பெற்ற பின்பும் ஆரம்பக்கல்வி அனைவருக்கும் கட்டாயம் என்று செய்த பின்பும், இன்னும் கோடிக்கணக்கில் இளஞ்சிறுவர்கள் பள்ளி செல்லவில்லை எனக் காண்கிறோம். தில்லி, மேற்கு வங்காளம் போன்ற மாநிலங்களில் தீவிரத் தண்டனை

தருவதற்கச் சட்டம் செய்தும் பயன் விளையவில்லை. அரசியல் சாசனம் செய்தோர். அது அமுலாக்கப் பெற்ற பத்து ஆண்டுகளில் ஆரம்பக் கல்வி எல்லாக் குழந்தைகளும் (6—14) பயின்றாக வேண்டும் எனச் சட்டம் செய்தது (சாசனத்தின் 45 ஆவது பகுதி) எனினும் ஐந்து பத்தாண்டுகள் நிறையும் நிலையிலும் அது நிறைவேறவில்லை. பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் பல்கிப் பெருகியபோதிலும் எல்லோரும் கற்றவர் என்று கூறிக் கொள்ள இயலவில்லை. இந்தக் கொடுமை நீக்கப் படுதற்குப் பொதுமக்கள் ஒத்துழைப்பு முக்கியம். குழந்தைகளை வேலைக்கு ஏற்று ஊதியம் அளிப்போரும் சற்றே நின்று நினைத்து, அந்த அவல நிலையை நீக்கினால் ஒருவேளை நாம் வேண்டிய பயன் கிட்டும். நாட்டுக் கல்வி நலமுறும்.

எல்லோரும் எழுத்தறிவு பெறவேண்டியதுதேவையே. ஆனால் அந்த அறிவு, வள்ளுவர் கூறியாங்கு வையத்தை வாழ வைக்கும் வகையில் அமைய வேண்டும். அந்தவகையில் வாணிபமாகவுள்ள நம் பல்கலைக்கழகங்களையும் கல்லூரிகளையும் பள்ளிகளையும் நீக்கி, நேரிய வழியில் நலம் காண்பவற்றை ஊக்கி, அரசாங்கம் ஓரளவேனும் நல்ல பல பள்ளி, கல்லூரிகளை நிறுவி, நாட்டுக் கல்வியை நலம் பெற்றதாகக் காணும் வழியைக் கடைப்பிடிக்க வேண்டும். எதை இழந்தால்— கல்வியின் நலத்தினை— பயனை இழந்தால்— அதனைத் திரும்பப் பெறுதல் அரிது. அது மட்டுமன்றி, கல்வியே நம்மை உலக நாடுகளில் உயர்ந்த நாடாக்கிக் காட்டும். படையும் பணமும் ஆட்சியும் பிற மாட்சியும் எவ்வளவு இருப்பினும் அவை பிற நாடுகளின் முன் தலைதூக்காது. 'யாதானும் நாடாமால் ஊராமால் என் ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு என்றும் 'கற்றோர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு என்றும்' கூறியபடி எங்கும் எல்லா நாடுகளிலும் கற்றவர் சென்று நாட்டின் பெருமையை—

நலத்தை நிலை நாட்டுவர். நாடு நாடாகும். நாமும் தலை நிமிர்ந்து வாழமுடியும். அத்தகைய நல்ல வருங்கால வாழ்வினை அனைவரும் பெற ஆவன செய்ய அனைவரும் ஒன்று சேர்ந்து உழைத்து நாட்டுக்கல்வியை நலமுறச் செய்ய வேண்டும் என வேண்டிக் கேட்டு அமைகின்றேன். நாட்டுக்கல்வி நலமுறுவதாக! கல்வி பற்றி சில ஆண்டுகளுக்குமுன் நான் எழுதிய பாடல்களையும் உடன் சேர்த்துள்ளேன்.

## இணைப்பு-1

### சில ஆண்டுகளுக் முன் எழுதிய கவிதைகள்

### நாடு வாழ — நல்ல கல்வி

1) கல்வி மாந்தர் கண்ணாகும் கற்றல் ஒன்றே நன்றாகும்
அல்லல் நீக்கும் கல்விதனை அனைவோருக்கும் தரல்வேண்டும்

சொல்லிச் சொல்லி ஓயாதே தொடர்ந்து சொல்லும் பேச்சாலே
நல்ல ஒன்றும் விளையாது நாட்டில் செயலே உடன்தேவை.

2) கணக்கும் எழுத்தும் சொல்லதுவும் கல்வி என்று அமையாதே!
கணிப்பிர் வாழ்வின் நலமெல்லாம் கல்வி ஒன்றே தரும்என்று
உணர்த்தும் செயலால் உயிர் தம்மை ஒத்துநோக்கும் அறமன்றே
மணக்கும் கல்வி அதைமறந்தீர்! மறந்தீர் வாழ்வை மாநிலத்தே!

3) கூட்டம் அதிலே கூடிநின்று கூடிப் பிதற்றல் ஒன்றறிந்து
நாட்ட மிதிலே கொள்ளாமல் நாளும் மக்கள் உழல்வதையே

பாட்டில் அன்றே பாரதியும் பாடிக் காட்ட,
நாமெல்லாம்
ஏட்டில் கல்வி எப்படியோ என்றே எழுதிக்
கழிக்கின்றோம்!

4) தான்புறுவ துலகமதே தனக்கும் உரிய இன்பமாதாய்க்
காணும் நெறியே கல்வியெனக் கண்டார்
குறளார்! யார்கண்டார்?
பேணும் நெறியை யார்அறிவார்? பேச்சால் உலகை
ஏமாற்றும்
வீணர் வாழ அவர்கையில் விளையும் இன்பம்
-காணுவதே

5) கற்கும் கல்வி அவற்குமட்டும் காலம் தனக்கு
உதவுவதோ?
கற்கும் கல்வி பிழைப்புக்குக் காரண மாக
அமைகுவதோ?
அற்பர் அயவார் அன்றளித்த அடிமைக் கல்வி
தனைப்போற்றி
நிற்கும் நிலையை விட்டிடுவீர்! நிலவும் வாழ்வுக்
கணிகாண்பீர்!

6) ஓர்ஊர் பள்ளி ஓராசான் உற்றால் திறக்கும்,
வராவிட்டால்
சீரூர் மக்கள் திரும்பிடுவார், தினமும் இதுதான்
வழக்காமே!
யாரோ இதனைத் தகைந்திட்டார்! ஏன்தான்
அதற்கு விதித்திட்டார்?
பாரோர் வாழும் கல்வி இதோ! பாராள் வீரே
பார்த்திடுவீர்!

7) தேர்வில் பாதி மாணவர்கள் தேரார் அதற்கும்
ஆசிரியர்.
பேரில் உயர்வு பதவிபொருள் பெறுவர் இதுவும்
விந்தை யன்றோ?

ஊரில் கோடி கோடியென ஒதுக்கும் பொருள்கள்
உண்மையிலே
சீரும் செயலுள் சிறப்பாரைச் சேர்தற் கான
வழியிலையே!

8) மேலை நாட்டுக் கல்வியிலே மிளிரும் நன்மை
தனைக்கொண்டு
காலை எட்டு மணிஅளவில் கல்விக் கூடம்
திறந்திட்டால்
வேலை சிறக்கும் பணிசிறக்கும் வேண்டும் கல்வி
விளக்கமுறும்
மாலும் அகலும், கல்வியுடன் மற்றென் நலமும்
மலர்ந்திடுமே.

9) எங்கும் உலகில் சுற்றிவந்தே எல்லா நாட்டுக்
கல்விநெறி
பொங்கும் வழிகள் பலஅறிந்தும் போற்றா
திருப்ப தென்னேயோ,
தங்கும் கல்வி கற்பதற்கு தரமே முதலாம் அத்துடனே
எங்கும் வாழ வழிகாணும் ஏற்றம் அதிலே
இயைந்திடுக!

10) சென்ற போரில் சீரழிந்து திறமே அற்ற நாடுகளில்
நன்றே கல்வி அனைவோரும் நாளும் கற்க; நம்
நாட்டில்
இன்றே நாற்ப தாண்டுகழித்து இன்றும் பத்தில்
ஐந்துஎன்
ஒன்றும் அறியா திருப்பதற்கு உரியார் யாரே
உணர்த்திடுவீர்?

11) நடுவ ணரசும் நம்அரசும் நாளும் நாளும்
கருத்தரங்கைக்
கிடுகி டெனவே கூட்டிஅதில் கேள்வி பதிலாய்ப்
பலபேசி
முடிவொன் றில்லா வகைநின்று முதலாய்ப் பல
ஆயிரம் கழித்து
கடிதில் பிரிந்தே செல்கின்றார் காணும்
பயன்தான் என்னேயோ?

12) நாட்டுக் கல்வி நமக்கென்றே நாளும் நாளும்
உழைப்பவர்கள்
கேட்டுக் கேட்டு வெளிநிற்பார்; கேட்பா ரின்றி
மற்றொருசார்
மாட்டைக் காட்டி மதியிலியும் மதிப்பாய் நிமிர்ந்து
உள்சென்று
வேட்டைப் பெற்று வந்திடுவர் விழிப்புக்கு
இதுவோ வழியாகும்?

13) ஏழைக் கொன்று, ஏங்காது எத்தப் பிழைப்பார்
தமக்கொன்று
கூழைத் தனத்தார்களுக்கு ஒன்று.கூடிப் புகழ்வார்
தமக்கொன்று
ஊருக் கறமே எனக்கூறி ஒருசார் மக்கள் பலகோடி
தேடிச் சேர்க்கப் பள்ளிகளைத் திறக்கும் நாட்டில்
நலன் உண்டோ!

14) உள்ளார் எல்லாம் ஒருபுறமும் இல்லார் எல்லாம்
ஒருபுறமும்
எல்லாக் கல்விச் சாலையிலும் ஏறி ஏறி
நிற்கின்றார்
உள்ளார் உள்ளே செல்கின்றார்; இல்லார் வெளியே
வருகின்றார்!
பொல்லாக் கொடுமை கல்வியிலே பூத்தல்
அழகோ புகழ்வீரே!

15) எல்லாக் கல்விச் சாலைகளும் எல்லாருக்கும் எனக்
காணல்
அல்லால், கல்வி ஒருசாரர் அவர்கோ, அவரே
உயர்வாரே!
கல்லார் என்றும் கல்லாரே; கணிப்பும் மருந்தும் பிற
தொழிலும்
வல்லார் எல்லாம் பொருள்வழங்கின் 'வழியைத்
திறந்து வந்திடுவீர்'

16) என்றே கூறி முரசறைந்து எங்கும் பலகல் லூரிகளை
நன்றே என்று நாட்டினிலே நாளும் நாட்டி
வருகின்றார்!

ஒன்றோ இந்த நெறிதானும்! உலகீர் எண்ணிக்
காணுங்கள்
பின்றான் கல்விதனில் திருத்தம் பேசும்
பொருளும் என்னமோ?

17) கோடி கோடி அரசாங்கம் கொடுத்தும் கல்வி
வளராமல்
வாடி வாடி மக்கள்பலர் வளமார் கல்வி
வாழ்வினுக்கே
தேடித் தேடி அலைகின்றார் செல்வர் சிலரே
பெறுகின்றார்
நாடி இந்த வேற்றுமையை நாட்டார் போக்க
வேண்டாவோ!

18) பெற்றோர் கல்வி தனைக்கருதார், பிறந்தார் தாமும்
கல்லூரி
உற்றால் கூட்டம் கூட்டமதாய் உட்கார்ந்
திருந்து பலபேசி
கற்றோர் கூறும் மொழி எண்ணிக் கருதில்லையா
தெப்போதும்
மற்றோர் உறவில் அரசியலில் மயங்கித் தியங்கி
மாய்கின்றார்!

19) கட்சிச் சார்பும் மதச்சார்பும் கலவாச்சாதிப்
பிரிவுகளும்
மட்டற் றாங்க நடமாட மறுமாற் றங்கள்
பலபகர்ந்தே
சட்டம் பேசி வலுப்பேசி சார்பில் ஒழுகிக் கல்விநிலை
பற்றும் வகையில் ஒழுகாமல் பாழுக் கிறைத்தே
கழிகின்றார்.

20) இந்தக் கல்வி முறையினிலே எப்பட் டமுமே
பெற்றிடுவோம்!
என்றே உள்ளம் களிதுளிர்ப்ப எதையும் கொடுத்து
வென்றிடுவர்
நன்றோ இதுவும் நானிலத்தில் நலமார் கல்வி
வளர்ந்திடுமோ
நின்றே நினைப்பீர் இக்கல்வி நிலையை உடனே
மாற்றிடுவீர்!

21) உள்ள பிரிவு போதாமல் உயர்ந்தார் கற்றோர்
எனக்காட்டி
மெல்ல அல்லார் தமைவெட்டி வேறோர் பிரிவு
தோன்றுவதென்?
உள்ள இடங்கள் அத்தனையும் உரிய வகையில்
பகிர்ந்தளித்து
நல்ல அறிவைப் பெற்றவரை நாட்டில் உலவ
விடல்நன்றே!

22) 'பட்டம் ஒன்றே பதவிக்கு பயின்றார் வருக'
எனும்கொள்கை
மட்ட மாக, அறிவினுக்கே வருகை காட்டும்
செயல்வேண்டும்
இட்டார் தமக்குப் பதவிஎனும் இழுக்கைப் போக்கி
வல்லார்க்கே
முட்டா வகையில் இடம்கிடைப்பின் முற்றும் கல்வி
வளம்பெறுமே!

23) தொழிற் சாலைகளே ஆய்வாளர் தொகையை
வளர்த்து அவர்களைத்தம்
தொழிற்சா லையிலே பணியமர்த்தித்
தொலையா வாழ்வை நாட்டினுக்கு
அளித்தால் என்னோ? மேநாட்டர் அவ்வா றன்றோ
செய்கின்றார்
உளத்தால எண்ணி உடன்இன்றே உற்று
செயலைத் தொடங்கிடுவீர்

24) ஆய்வுக் கென்றே புகுந்தங்கே அவரே சொன்னார்
இவர்சொன்னார்
மேய்வுக் கேகும் வெள்ளாட்டின் மேலே பலமேற்
கோள்காட்டி
தோய்வுற் றாலும் பின்சென்று சொளையாச்
பல்லாயிரம் தந்து
ஆய்வுப் பட்டம் பெற்றிடுவார்! அதனால்
நாட்டுக்கென் பயனோ?

25) கற்பார் தமக்கு அவர் வேண்டும் கல்வித் தன்மை
அறிந்தளித்தே
பொற்பார் தொழிலில் அறிவியலில் புகவே
தக்க பலதுறையில்
கற்பார் செல்ல வழிகாட்டி கற்ப தறிந்து அவரேற்று
நற்பார் உலகில் உயர்ந்தோங்க நல்ல வழியை
வகுத்திடுவர்!

26) எதையோ படித்தோம் எதற்கென்றோ எங்கோ
வேலை தனைத்தேடி
அதையும் மறந்து அவலமுறும் அல்லல் கல்வி
தனை நீக்கி
எதையும் பயின்ற வழிநின்று, எல்லாத் தொழிலும்
செயத்தக்க
விதமே கல்வி அமைந்திட்டால் வேறென்
நமக்கு வேண்டுவதே!

27) காலம் கடந்தும் நிலையில்லை கற்றார் மற்றார்
எல்லாரும்
ஓலம் இடு நிற்பதுடன் ஒய்ந் திடாது,
உடனே நம்
ஞாலம் வாழும் வகையறிந்து நாட்டில் நிலைமை
உளத்துணர்ந்து
கோலும் கல்வித் திட்டத்தை குறியாய் உடனே
தொடங்கிடுவீர்!

இணைப்பு—2

## நேரோ ஒரு தமிழ் நாடு

நான் உலகில் தமிழர் வாழும் பல பகுதிகளுக்குச் சென்றுள்ளேன். இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், அமெரிக்கா போன்ற பிற நாடுகள் பலவற்றையும் சுற்றி வந்துள்ளேன். அங்கங்கே வாழும் தமிழர்கள் தமிழையும் தமிழ்ப் பண்பாட்டையும் கலையையும் எவ்வெவ்வாறு போற்றி வளர்க்கிறார்கள் என்பதைக் கண்டு மகிழ்ந்தவன்; தமிழ் நாட்டில் இன்றுள்ள நிலையினைக்

காட்டிலும் ஆங்காங்கே தமிழ் மொழி, தமிழ்ப் பண்பாடு, தமிழ்க்கலை இவை போற்றி வளர்க்கும் நிலை கண்டு, அவ்வப்போது நான் எழுதிய நூல்களில் அவை பற்றி விளக்கமாக எழுதியுள்ளேன். எனினும் நான் 1990இல் தொடக்கத்தில் சென்ற நாடு ஒன்றே இன்று என் கண் முன் நிற்கின்றது. அதுதான் இந்த மகா சமுத்திரத்தின் தென் மேற்கு கோடியில் ஆப்பிரிக்கா நாட்டுக்கு அருகருகில் உள்ள 'மோரிசு' ஆகும்—'மௌரீஷ்யஸ்' என்ற சிறு தீவாகும்.

பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்— இமயம் கடலுள் ஆழ்ந்த காலத்தே,' குமரிக்குத் தெற்கு தமிழ் நாடு பரந்து விரிந்த நிலையில், நாற்பத்தொன்பது நாடுகளாக நிலவி தமிழில் முதல் இடைச் சங்கங்களை வளர்த்தென அறிகிறோம். வரலாறு, நில நூல் ஆய்வு, பிற அனைத்தும் இதை வலியுறுத்துகின்றன. அதன் எல்லை மேற்கே மெடகாஸ்கர் தீவு தொடங்கி, கிழக்கே ஆஸ்திரேலியா வரையில் பரவி இருந்ததெனவும் கூறுவர். அந்தப் பெரும் குமரிக்கண்டம் (லெமுரீயா கண்டம் என்று ஆராய்ச்சியாளரால் அழைப்படுவது) அழிந்த போது சிறுசிறு துளிகள்— துண்டுகள் விடப்பெற்றிருக்கலாம். அவற்றுள் ஒன்றே இந்த 'மௌரிஷயஸ்' என நான் முடிவு செய்தேன்.

1990இன் தொடக்கத்தே உலகத்தமிழ் மாநாட்டை நடத்திய பெருமை அத்தீவில் வாழ் தமிழர்களுக்கே உண்டு. அந்த மாநாட்டில் கலந்து கொள்வதற்காகவே நான் வான் வழியே அந்த நாட்டுக்குச் சென்றேன். அதன் வளத்தையும் அதனை வளம்படுத்தி, அதே வேளையில் தம் தமிழ்ப் பண்பும், மொழியும், கலையும், பிறவும் ஓம்பி வாழும் தமிழ் மக்களைக் கண்ட நிலையில் 'இங்கு ஒரு தமிழ் நாடு உணடு' என எண்ணி மகிழ்ந்தேன். அதே நிலையில் அந்நாட்டு வரலாற்றையும் அறிந்து மகிழ்ந்தேன்.

அன்று தமிழ் நாட்டில் இருந்த பிரிந்த இந்தச் சிறு தீவு ஏறக்குறைய பதினைந்தாம் நூற்றாண்டு வரை பார்ப்பாரற்று இருந்தது எனலாம். மேலை நாட்டினர் உலகெங்கணும் உள்ள நாடுகளில் நம் வாணிபத்தையும் வாழ்வையும் பெருக்க முயன்ற பதினைந்து, பதினாறாம் நூற்றாண்டுகள் தொடங்கிப் பல நாடுகள் அவர்களால் கொள்ளப்பெற்றன. அவற்றுள் அமெரிக்காவும் ஒன்று. இந்திய மண்ணில் முதல் முதல் கால் வைத்த போர்ச்சுசிய மக்களே இந்த 'மோரிசு' நாட்டையும் முதல் முதல் கைப் பற்றினர். அங்கு அவர்தம் ஆட்சியையும் ஊன்ற ஆவன கண்டனன். எனினும் இந்திய நாட்டில் அவர்கள் நிலை பெறாதது போன்றே, இங்கும் அவர்கள் நிலை பெற வில்லை 1735ல் பிரஞ்சுக்காரர் இச்சிறு தீவினைக் கைப் பற்றினர். இதை வளமாக்கவும் முயன்றனர். எனினும் மக்கள்— செயலாற்றத் தக்கவர் அங்கே இன்மையின் அவர்தம் ஆதிக்கத்தில் தமிழ் நாட்டில் இருந்த புதுச்சேரி, காரைக்கால் பகுதியிலிருந்து பல தமிழர்களை அங்கே குடியேற்றி, இந்நாட்டை வளம்படுத்தி அவர்களையும் வாழச் செய்தனர். தமிழர் பிற் காலத்தில் முதன் முதல் குடியேறியது அக்காலமே.

பிரஞ்சு ஆதிக்கமும் அங்கு ஒரு நூற்றாண்டு வரை கூட நிலைபெறவில்லை. 1810ல் இதை ஆங்கிலேயார் கைப்பற்றினர். அவர்கள் தமிழ் நாட்டின் பல பகுதி களிலிருந்தும்— சிறப்பாகத் தஞ்சை மண்ணிலிருந்தும் பல தமிழர்களை இங்கே குடியேற்றி நாட்டை வளமாக்கினர். ஆங்கிலேர் தம் கொள்கைப்படி பிற மதத்தினர்— மொழியினர்இடைத் தாம் புகுத்து வலிய மாறுபாடு செய்யா நிலையில், இங்கும் வந்த தமிழர் வாழ்வில், வழி பாட்டில், பண்பில், கல்வியில் தலை இடாது அவற்றை வளர்க்கவே உதவினர். தமிழருள் பெரும்பாலோர் சைவர் களாக உள்ளமையின் அவர்தம் சமயக் கோயில்கள் பல உண்டாயின. கல்வி பற்றிய கூடங்களும் கலை, பண்பாடு

பற்றிய கழகங்களும் பல தோன்றி வளர்ந்தன அக்காலத்திலேயே பல தமிழர்களை அரசாங்க உயர் பதவிகளில் அமர்த்தி அவர்கள் வழி நாட்டு ஆட்சி முறையினையும் நாட்டு நலனையும் ஆங்கிலேயர் போற்றி வளர்த்தனர் எனலாம்.

இந்த நூற்றாண்டின் இடைக்காலத்தே உலகெங்கணும் உள்ள நாடுகளில் உரிமை வேட்கை மீதூர இந்தியாவும் பிற நாடுகளும் உரிமை பெற்றமை போன்றே, இச்சிறு தீவும் 1968ல் உரிமை பெற்றது. ஆங்கிலேயர் தம் ஆட்சி முறையும் பிறவும் இங்கே பெரும்பாலராக வாழ்ந்த தமிழர்களை ஆளும் நிலையில் உயர்த்தியமையால் நாட்டினைச் சிறக்க ஆளும் பொறுப்பினை இவர்கள் மேற்கொண்டனர். இங்கே தமிழர்களே அன்றி வேறு மொழியாளர் — இந்திய மக்கள் — வேறு பலர் வாழ்ந்தனர்— வாழ்கின்றனர், பல சமயத்தவர்— பல மொழியாளர்கள் இருப்பினும் தமிழர்தம் 'யாது ஊரே யாவரும் கேளிர்' என்ற கொள்கைப்படி, யாரிடத்திலும் வேற்றுமை காட்டாது அனைவரையும் தழுவி ஒரே குடும்பமாக வாழ்ந்து வருகின்றனர். அதே வேளையில் தம் சமய நெறி, பண்பாடு, கல்வி, கலை இவற்றின் நிலை கெடாது மேன்மேலும் வளரப் பாடுபடுகின்றனர். 'வேற்றுமையில் ஒற்றுமை' கண்டு அதே வேளையில் தம் தனித்தன்மை கெடாது வாழும் பெருஞ்சிறப்பு அவர்களுடையது.

'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்று விண் முட்டப் பேசி, எங்கும் ஆங்கிலத்தை வளர்க்கும் நம் தமிழ் நாட்டை போலன்றி, இங்கு வாழும் தமிழர்கள் உண்மையில் எங்கும் தமிழ் முழங்க, வழங்க சிறக்கப் பாடுபடுகின்றனர். ஊர்தொறும் தமிழ்ப் பள்ளிகள் பலப்பல உள்ளன— ஊர்தொறும் தமிழ்ச் சங்கங்கள் உள்ளன—ஊர்தொறும் கலை, பண்பாட்டு மையங்கள் உள்ளன. ஊர்

தொறும் அவர்கள் வழிபடும் தெய்வத்திருக்கோயில்கள் உள்ளன— பொதுவாகக் கூடும் சமுதாய மன்றங்கள் அத்திருக்கோயில்களை அடுத்தே உள்ளன. இவ்வாறு ஊர் தொறும் தம் சமயம், கல்வி, மொழி, பண்பாட்டு ஆகிய வற்றை வளர்ப்பதோடு, அரச உடைமையாகிய தொலைக்காட்சி, வானொலி ஆகியவற்றிலும் தமிழ் முழக்கம் இருந்து கொண்ட இருக்கும் நிலையில் செயலாற்றுகின்றனர். நான் உலக தமிழ் மாநாட்டிற்குச் சென்ற போது அந்த நாட்டுக் கல்வி அமைச்சரே ஒரு தமிழர்தான். இத்தகைய தமிழ் உள்ளம் வாய்ந்த தமிழ் மக்களே உலகத் தமிழ் மாநாட்டை இங்கே நடத்தினர். பல நாட்டினர் அதில் பங்கேற்றனர். தமிழ் நாட்டிலிருந்து அரசுச் சார்பில் சென்றவருள் நானும் ஒருவன். இதன் பக்கத்தில் உள்ள சிறு சிறு தீவுகளிலும் பெரும்பாலாகத் தமிழர்கள் வாழ்கின்றனர் என்பதை அம்மகாநாட்டில் அவர்கள் பெருந்திரளாகக் கலந்து கொண்ட போது கண்டு மகிழ்ந்தேன்,

நான் ஒரு சில நாட்களே அங்கே தங்கினேன். ஆயினும், அதற்குள் கண்ட ஊர்கள் பல — கோயில்கள் பல — கலந்து கொண்ட கூட்டங்கள் பல. எங்கு நோக்கினும் உண்மைத் தமிழர்தப் உளத் தொண்டும் உரத்தொண்டும் அறத்தொண்டும் அறிவுத்தொண்டும். காட்சி அளித்தன. ஆடவர் முகத்தில் 'நீறில்லா நெற்றி பாழ்' என்று கூறத் தேவையில்லா வகையில் நீறும் சந்தனப் பொட்டும் தெளிவாக விளங்கின. பெண்களோ. நம் தமிழ்ப் பண்பாட்டில் பழைய நெறி முறை வழாமல் புடவை அணிந்து பொலிவுடன் இருந்தனர். முகத்தில் சிறக்க மஞ்சள் பூசி, நெற்றியில் நீறும் பொட்டும் இட்டு தம் பண்பாட்டினைக் கட்டிக் காத்தனர். எங்கும் பள்ளி கள் மிக்க இருந்தமையால் அவற்றுள் பலரும் பயில, பெண்கள் உட்படக் கற்று, யாரும் படிக்காதவர்களே இல்லை என்னுமாறு கல்வி வளம் பெற்றிருந்தது. ஆம்! தமிழ் கல்வியே— உடன் ஆங்கிலம். அவர்கள் வாய் 'நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமசிவாயவே' என்று சுந்தரர் கூடியவாறு எப்போதும்

தேவார திருவாசகப் பாக்களைப் பாடிக்கொண்டிருக்கும். 'அவனே அவனே என்பதைக் காட்டிலும் சிவனே சிவனே என்று சொல்' என்று சொல்வது அங்கே நேரின் கண்டு கேட்டதாகும்.

சமயம், மொழி, பண்பாடு இவையன்றிச் சமுதாய நெறியிலும் இத்தமிழ் மக்கள் சிறப்புற வாழ்ந்தனர். வாழ்கின்றனர். 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே' என்று பாரதி இந்த நாட்டு மக்களைப் பற்றித்தான் பாடினானோ எனக் கொள்ள வேண்டியுள்ளது.

ஆண் பெண் சமத்துவமட்டுமன்றி, சாதியாலும், பிறவற்றாலும் உள்ள வேறுபாடும் இங்கே தலைகாட்ட வில்லை! 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்' எனவே வாழ்ந் தனர். உயர் பதவியில் உள்ளவர்கள்—அமைச்சர்கள் உட்பட சாதாரண மக்களொடு மக்களாகவே பழகி நிற்கின்றனர். பதவி, பட்டம், செல்வம் முதலியவற்றால் பெறும் 'யான் எனது' என்னும் செருக்கும் 'தாம்தான் உயர்ந்தவர்' என்ற உணவும் இங்கு காண முடியாதவை. எங்களைப் போன்று புதிதாக—விருந்தினராக வந்தவ ரோடு மட்டுமன்றி, அந்நாட்டு மக்கள் அனைவரோடும் எளிய முறையில் அவர்கள் பழகிய காட்சி என் கண் முன் நிற்கிறது. இந்த நாட்டில் பெண்களுக்கு மணம் பேசும் போது 'Dowry' என்னும் வரதட்சனைக் கொடுமை மருந்துக்கும் காண முடியாது. காதல் மணங்களும் உண்டு பெற்றோர் வழிக் காணும் பெருமணங்களும் உண்டு. அனைத்தும் எளிய தமிழ் முறையிலேயே நடைபெறும்.

உணவு வகையிலும் மக்கள் வள்ளுவர், தேரையர் போன்றோர் கூறியாங்கு நோய்வாரா உணவினை, பதத் தொடு, அளவொடு உண்கின்றனர். தயிரும், பாலும் மோரும் இன்றி அவர்கள் உணவு அமையாது. 'நான் தயிர் மோர் விட்டுக்கொள்வதில்லை' என்று பேசும் சிலர்தம் சென்னை நாகரிகம் அங்கே கிடையாது. இந்தத் தயிரும் மோரும் நெய்யும் மனித வாழ்வில் முக்கியமானவை, அதனாலே இறைவன் 'ஆனைந்தும் ஆட்டுகந்தான்' என்று பாராட்டப் பெறுகின்றான். இத்தகைய தேவையான அளவறிந்த உணவினைப் பசித்துப் புசிக்கும் நல்

உணவினை உண்பதால் இந்நாட்டில் பலரும் நோய் இன்னதென அறியா வகையில் வாழ்கின்றனர்.

இவ்வாறு தமிழ் நலத்தைத் தளரா வகையில் போற்றும் இம்மக்களுக்கு இங்கே தமிழ்நாட்டில் வாழும் நாம் பலவகைகளில் உதவி செய்யக் கடமைப் பட்டிருக்கிறோம். இத்தீவில் நன்கு படித்துள்ளவர் அனைவரும். எனவே அவர்கள் படிப்பதற்குத் தேவையான நூல்கள் தமிழில், அங்கே தக்கவர்களுக்கு— தெரிந்தவர்களுக்கு அனுப்பிப் பலரும் படிக்க வழி காணலாம். அரசாங்கம் அச்சிடும் நூல்களில் சில படிகளை— தான் கட்டாயமாகப் பெறுவது போன்று இதற்கெனப் பெற்று, 'மௌரிஷியஸ்' அரசுக் கல்வித்துறைக்கு அனுப்பி, அனைவருக்கும் பயன் படுத்தச் செய்யலாம். பல அறிஞர் தற்போது இங்கே வந்து தம் செப்பற்பொழிவின் வழியும் பிற வகையிலும் இந்த மக்களை ஊக்குவிக்கின்றனர். எனினும் இன்னும் பலர் சென்று பழகி வாழும் வகையில் கலந்து ஒன்றி உறவாடி அவர்தம் உயிர் தளிப்ப ஆவன செய்ய வேண்டும். தமிழ் பயின்றுவிக்க நல்ல தேர்ச்சி பெற்ற ஆசிரியர்கள் தேவைப்படுகின்றனர், நல்ல ஊதியம் உண்டு. எனவே பல ஆசிரியர்கள் சென்று அத்தீவில் கல்வி நலம் காணலாம். தமிழ் நாட்டு அரசாங்கமும் நல்லாசியர் களை அனுப்பி உதவலாம். அவர்களுக்குச் செல்வம் தரத் தேவையில்லை. தமிழ்நாட்டிலேயே மங்கும் மொழி, கலை, கல்வி, பண்பாடு இவற்றை என்றும் காக்கும் வகையில் வாழ்ந்து வளர்த்து வரும் இத்தீவின் தமிழருக்கு வேண்டுவதை வேண்டிய வகையில் ஈந்து **'இதோ ஒரு தமிழ் நாடு'** என்று நாம் உலகுக்குக் காட்ட முற்பட வேண்டும்.

'சுடர் விளக்காயினும் நன்றாய் விளககிடத் தூண்டு கோல் ஒன்று வேண்டும்' என்று பெரியவர்கள் கூடியபடி சுடர் விளக்காக ஒளிரும் தமிழ் விளங்கும் வகையில் வாழும் இத்தீவின் மக்களுக்குத் தூண்டு கோலாகத் தமிழ் நாடும் அதன் மக்களும் செய்ய வேண்டிய அனைத்தையும் உடனே செய்ய முற்பட வேண்டும். முயன்று உதவி 'மௌரிஷியஸ்' மக்கள் தமிழ் உளத்தை— வளத்தை— வற்றாத பண்பினை வளர்ப்பீர்களாக! வாழ்க 'மௌரிஷியஸ்'! வளர்க அதன் தமிழ் நலம்!

# தலைவிரி கோலமும் தரணியின் ஓலமும்

'எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே'! (புறம் 187)

என்றார் சங்கப் புலவர் ஔவையார். இந்த உண்மை என்றும் உண்மையாக உலகில் அமைகின்றது. ஏதோ சங்க காலப் புலவர் சொன்னார் நமக்கென்ன என்று நாம் இருப்போமானால் நம்மை நாம் அழித்துக் கொண்டவர்களாவோம். சொல்லால் மாயா ஜாலம் காட்டும் இந்த நாளைப் போல் அந்தக் காலப் புலவன்— சங்க காலத்தில் வெற்றுப் பாட்டுப் பாட வில்லை; அப்படிப் பாடிஇருப்பானாயின் அவையும் இன்று புற்றீசல் போலத்தோன்றி மறையும் பாடல்களைப் போன்றே, என்றோ மறைந்திருக்கும். 'கவிதை' என்பது காலத்தை வென்று வாழ்வது என்ற உண்மையினை நம் நாட்டுப் புலவர்களும் அறிஞர்களும் மட்டுமன்றி, மேலை நாட்டு அறிஞர்களும் கவிஞர்களும் அறுதியிட்டுக் காட்டியுள்ளனர். அவை காலத்தை வென்று மட்டும் வாழ வில்லை. காலந்தொறும் வாழும் மக்களுக்கு நன்னெறி காட்டி, பொய்ந்நெறி போக்க வற்புறுத்தி வாழ்வினை வளமாக்கும் வகையிலும் உதவுகின்றன. ஆம்! இன்றும் அச்சொற்கள் மெய்யாகவே உள்ளன. ஔவையார் பாடிய அப்பாடல்'பொருள் மொழிக் காஞ்சி'என்ற துறையின் பாற்படும். அதன் பொருள் பொதிந்த மொழி இன்றும் பொய்யாவதில்லை.

நாட்டுக்கு வரும் நலம், தீங்குகளை அக்காலப் புலவர்கள் நன்கு அறிந்து சொன்னார்கள். அதன் விளைவே இப்பாடல். ஒரு நாடு நலமுற்று, உயர்வுற்று, சமுதாய

வாழ்வு அமைதியாக நடைபெறுகின்றது என்றால்—இயற்கை உற்பாதங்கள்— மனிதர்தம் செயற்கைக் கொடுமைகள் இல்லாமல் வாழ்கின்றது என்றால் அதற்கு அடிப்படைக் காரணம் அந்நாட்டு மக்களேயாவர். இப்பாடலில் ‘எவ்வழி நல்லவர் **ஆடவர்**’ என ஆண்பாலை மட்டும் குறித்தாலும், ‘ஒரு மொழி ஒழிதன் இனம் கொளற் குரித்தே’ என்ற இலக்கண முறைப்படி இது மகளிரையும் உள்ளடக்கியதேயாம். எனவே ஒரு நாட்டில் வாழும் மக்கள் அனைவரும், ஆண், பெண் இரு பாலரும் நேரிய வாழ்வின் அடிப்படையிலேயே வாழும் நாடும் அதன் வளமும் அமையும் எனக் கொண்டனர் சான்றோர். அது முழுக்க முழுக்க உண்மையும் கூட. இதனை அறியின் இன்றைய நாட்டின் கொடுமைகளுக்கு மூல காரணம் நன்குதெளிவாகும்.

அண்மையில் மராட்டிய, கர்நாடக மாநிலங்களில் உண்டாகிய பூகம்பங்களுக்கு அத்துறையில் வல்லவர் ஏதேதோ காரணங்களைக் காட்டினர். ஆனால் எவரும் அது தோன்றுவதற்கு முன் அதனைத் தேர்ந்தறிய முடியாது என்றே கூறினர். இரண்டினையும் எண்ணிப் பார்க்கலாம். தொலைக் காட்சியில் இந்தியா எங்கோ தெற்கே அண்டார்டிக்காவில் இருந்து பல கோடி ஆண்டு களுக்கு முன் மெல்ல மெல்ல வடக்கே நகர்ந்து ஆசியாவின் பிற பகுதிகளோடு இணைந்தது எனக் காட்டினர். அதன் வட எல்லையில் இமயம் இல்லை ஆக, இமயத்தொடு இந்தியப் பகுதி கலந்தது என்பது அவர்கள் எண்ணம் போலும். இந்த ஆய்வு சரிதானா? முடிவானதுதானா? இவர்கள் கூற்றின்படி இன்றைய குமரிமுனைக்குத் தெற்கே வேறு நாடுகள் — நிலப்பகுதிகள் இல்லை என்பதுதான் முடிவு போலும். ஆனால் இதுவரை இந்துமகாசமுத் திரத்தை ஆய்ந்த மேலை நாட்டு அறிஞர்களும், நம் பண்டைத் தமிழ் இலக்கியங்களும் கண்ட—கூறிய உண்மை

கள் பொய்யா? யார் வேண்டுமானாலும் எதை வேண்டு மானாலும் எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம் என்பது இன்றைய அரசியலில் — ஏன்? சமுதாயத்திலும் பழக்கமான ஒன்றாக இருக்கலாம். ஆனால் ஆழ்ந்த ஆய்ந்து அறிந்து தெளிந்த ஆய்வாளர்கள் தவறான கருத் துக்களைத் தூவினால் அவை உலகுக்கே கேடு விளைவிக் குமே! குமரிமுனைக்குத் தெற்கும் விந்தியத்துக்கு வடக்கும் பல கோடி ஆண்டுகளுக்கு முன் இருந்த நிலையினை நில நூல் ஆய்வாளர்கள் தெள்ளத் தெளியக் கூறியுள்ளார்கள். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் குமரிக்குத் தெற்கே, கிழக்கே ஆஸ்திரேலியா தொடங்கி, மேற்கே மெடகாஸ் கர் வரையில் பரந்த நிலப்பரப்பு இருந்தது என்றும் அது நாற்பத்தொன்பது நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்த தென்றும் அவை ஊழிகள் சிலவால் மெள்ள மெள்ள அழிந்தன என்றும் தமிழ் நூல்கள் சாற்றுவன சரியே என அத்துறைகளில் வல்ல நல்ல மேலை நாட்டு ஆய்வாளர்கள் கூறியுள்ளனரே! அண்மையில் இந்துமகா சமுதத்திரத்தில் அகழ்ந்தாய்வு செய்து, அதற்குச் சான்றும் உண்டு என்று கண்டனரே. அப்படியே இமயம் கடலுள் ஆழ்ந்திருந்த மைக்கு, அம்மலையில், இடையில் பூமிக்குச் சில ஆயிரம் அடிகள் உயரத்தில் கடல் வாழ் உயிரினத்தின் எலும்பு களும் எலும்புக்கூடுகளும் கண்டெடுக்கப்பட்டனவாகக் காட்டியுள்ளனரே. திரு.வி.க. அவர்கள் 'இமயம் கடலுள் ஆழ்ந்த காலத்தே' என்று தன் ஒரு கட்டுரையினையே தொடங்கியுள்ளார்.

'பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள
வடதிசைக் கங்கை இமயமும் கொண்டு
தென்திசை ஆண்ட தென்னவன் வாழி'

என்று சிலப்பதிகாரம் தன் மதுரைக் காண்டத்தைத் தொடங்குகின்றது. குமரி என்னும் ஆறும் குமரி என்னும்

பெருமலையும் அதன் தொடர்களும் பஃறுளி என்னும் பேராறும் இருந்த பகுதிகள் கடலால் கொள்ளப்பெற, அவற்றை இழந்த பாண்டிய மன்னன் புதிதாகத் தோன்றிய இமயப் பெருமலையினையும் கங்கைப் பேராற்றையும் தனதாக்கிக் கொண்டு, எஞ்சி நின்ற தமிழகத் தலைநகரா கிய மதுரையில், தெற்கே இருந்து அரசாண்டான் என்பது அன்று வாழ்ந்த இளங்கோவடிகள் கண்டறிந்த உண்மை அல்லவா! அதைப் பொய் என்று தள்ளமுடியுமா? அதனை வரலாற்றுக் காப்பியம் என்றல்லவா வரலாற்று ஆசிரியர் கள் கொள்ளுகின்றனர்.

அந்தத் தெற்கே இருந்த நாடுகளில்தான் தென் மதுரையில் முதல் தமிழ்ச் சங்கமும் கபாடபுரத்திலே இரண்டாம் தமிழ்ச் சங்கமும் இருந்தன என அறுதியிட்டுக் கூறுகின்றனர். வால்மீகி, இராமாயணம் நடைபெற்ற காலத்தே வாழ்ந்தவர் — சிலப்பதிகாரம் நடைபெற்ற காலத்து இளங்கோவடிகள். போல, ஆம்! அவர்தம் இராமாயணத்தில் கபாடபுரத்தைக் குறிக்கின்றார். வடமொழி இராமாயணமும் தமிழ்ச் சிலப்பதிகாரமும் பொய்க் கதைகளா? ஆழ்ந்து சிந்தியுங்கள். அந்தத் தென் தமிழ்நாட்டில்தான் இரணியனும், இராவணனும், சூரபதுமனும் வாழ்ந்தார்கள் என இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. கம்ப இராமாயணத்திலே தான் விபீடணன் வாயிலாக இரணியன் அறிமுகப்படுத்தப் பெறுகின்றான். ஆம்! அவர் வாழ்ந்த பொன்நகரங் களும், நாடுகளும், ஆறுகளும் மலைகளும் ஏன் அழிந்தன? அங்கெல்லாம் ஏன் பூகம்பங்கள் உண்டாகி அவற்றை அடியோடு அழித்தன? எண்ணிப்பாருங்கள்.

'இழந்த 'லெமூரியா கண்டம்' என்று ஆங்கில நூலும் 'குமரிக் கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு' என்ற தமிழ் நூலும் இந்த இந்துமாக் கடலில் ஆழ்ந்த நாடுகளைப் பற்றி நன்கு விளக்குகின்றன. இயற்கை

அன்னை பொறுமையுடையவள் — நிலம் தண்மையுடையது. ஆனால் அதில் வாழும் மனிதர்கள் இயற்கை வாழ்வு அற்று, இரக்கமற்ற அரக்கர்களாக மாறும் போது, இயற்கை அன்னை பேசாமல் பார்த்துக் கொண்டிருக்க மாட்டாள். சீறுவாள் — நிலம் பிளக்கும் — அழியும் கடலுள் ஆழும்; காணாத — கேளாத கொடுமைகள் நிகழும். இதைத்தான் நான் முன் கூறிய உலகொடு வாழ்ந்த உண்மை உணர்ந்த ஔவையார் பாடிய

'காடா கொன்றோ நாடாகொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே' — (புறம் 187)

என்ற பாடல் நன்கு விளக்கிக் காட்டுகின்றது. நாடு காடாவதும், காடு நாடாவதும், மேடு பள்ளமாவதும், பள்ளம் மேடாவதும் ஆங்காங்கு வாழும் மக்களின் மன மொழி மெய்களால் ஆகிய வாழ்க்கையால் நிகழ்வனவேயாம்.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர்
திண்ணிய ராகப் பெறின்'

என்று மன உரத்தை வள்ளுவர் வரையறுக்கிறார். இந்த எண்ணம் நல்லதாக—நலம் பயப்பதாக—நாடுவாழ்வதாக அமையின் யாவும் நலமுறும். மற்றவரைக் கெடுக்க— அழிக்க— அவலத்தில் தள்ளும் எண்ணமும் அதன் வழிச் செயலும் அமையுமாயின் அதைக் கொள்ளுபவருடன் அவர்தம் உடமை — நாடு, நகரம் அனைத்தும் அழியும். எனவே, இந்த அடிப்படையிலேதான் திருச்செந்தூர் தாண்டி இருந்த கடலில் இருந்த சூரபதுமன் நகரும், அதே நிலையில் தெற்கே இருந்த இராவணன் தென் இலங்கையும் இரணியன் நாடும் அழிந்தன. அவற்றொடு அண்டையில் இருந்த தமிழ் வழங்கிய நாடாகிய தென் மதுரை, கபாடபுரம் ஆகிய நகரங்களும் அழிந்தன.

கபாடபுரம் தாண்டியே தென் இலங்கை இருந்ததென்ப தனை வால்மீகி நன்கு எல்லையிட்டுக் காட்டுகிறார். ஆழ்வார்கள் அப்பகுதியினைத் 'தென் இலங்கை' எனவே காட்டுவர். எனவே நாடு காடாவதும், மண் நீராவதும், மேடு பள்ளமாவதும் மானிடர் உள்ளத்து அடிப்படை யிலேயே அமைவது தெளிவு. மனிதன் ஒழுங்கு தவறினால் இயற்கையும் தன் நிலைகெடும்; பூகம்பம் உண்டாகும். மழை தவறும்; பிற கொடுமைகள் நிகழும். இவ்வாறு நான் கூறுவது வேடிக்கையாகக்கூடத் தோன்றும். ஆனால் இன்றைய விஞ்ஞானமும் இந்த உண்மையில்தான் சென்று முடிய வேண்டும். 'இராவணன் விமானத்தில் பறந்தான்' என்றால் கேலி செய்தவரும் 'பாண்டவர் நினைக்கக் கண்ணன் வந்தான்' என்றால் இழித்துரைத்தவரும் இன்று பல விமானங்களை — (REMOTE CONTROL) தொலைவி லிருந்தே இளக்குதல் என்றும் தொலைபேசி முதலியவற் றினையும் காண்கின்றனர். 'வலவன் ஏவா வான ஊர்தி' (புறம் 27) என்று பாகனால் செலுத்தப்பெறாத விண்கலம் சங்க காலத்தில் சொல்லப்பட்டது என்றால் அதனை நையாண்டி செய்த 'நல்லவர்' இன்றைய நாட்டு நிகழ்ச்சி களைக் கண்டு உணர வேண்டாமா! எனவே. இந்த ஔவையார் பாடல் அடிப்படையில் தான் மேடு பள்ள மாதற்கும், பள்ளம் மேடாவதற்கும் காரணம் என அறிதல் வேண்டும்.

> 'மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
> இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
> காவலர் பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம்'
> — (புறம் 35 வெள்ளைக்குடி நாகனார்)

என்பன சங்ககால அடிகள். சங்ககாலப் புலவர்கள் ஆய்ந்தே, உணர்ந்தே, அளந்தே தம் சொற்களைப் பயன் படுத்துவர். எனவே, இதன் வழி ஆராயின் பரந்த உலகம் கண்கொண்டு — கருத்தில் ஆராய்ந்து உணர்ந்த கண்—

உண்மையைக் கூறுகின்றது எனக் காண்கின்றோம். கூறும் உண்மை இதுதான், உலகில் மழை இல்லாது வற்றி; குடிக்கும் தண்ணீருக்கும் மக்கள் தவித்தாலும் அன்றிப் பெருமழை பெய்து பேரழிவை உண்டாக்கினாலும் அந்த நாட்டை ஆளுபவரே அதற்குக் காரணம் ஆவர். அப்படியே கடல் வளமும் பிற வளங்களும் காட்டு வளமும்—நாட்டு வளமும்—குன்றினாலும் அதற்கு அவர்களே காரணமாவர். மேலும் இயற்கையாக அதற்கு வேண்டிய விண்ணும் மண்ணும் இவற்றுள் அடங்கிய பஞ்சபூதங்களும் இயற்கையாகத் தாம் தாம் இயற்ற வேண்டிய நிலை மாறித் திசை கெட்டு நடுங்கிப் பிளந்து வேறுபட்டு நிற்பினும் அதற்கும் நாடாளும் காவலரே அடிப்படைக்காரணம் என்கின்றனர். எனவே, நாட்டில் பெருமழை பெய்தாலும், வற்றி வரண்டாலும், பூகம்பங்கள் பிற கொடுமைகள் நிகழ்ந்தாலும் பதில் சொல்ல வேண்டியவர்கள் நாடாள்பவர்களே. வெறும் கண் துடைப்பாகத் துயர்துடைக்கும் பணியினால்—அப்பணியில், இன்றைய நிலையில், செலவாகும் பெருந்தொகையில் பாதிகூடப் பாதிப்பவரைச் சென்று சாருமோ என்ற ஐயத்திடை வாழும் மக்களை, ஆளுபவர்கள் ஏமாற்றலாம். ஆனால் இயற்கையினையும் அதற்கும் மேம்பட்ட—அந்த இயற்கைக் கோள்களையும் நம்மையும் இயக்கும் இறைவனையும் யாரும் — எந்தப் பதவியில் உள்ளவரும் ஏமாற்ற முடியாது. இப்படிப்பட்ட அக்கிரமங்களையெல்லாம் செய்து, கோயிலில் பூவும், நீரும் கொண்டு அர்ச்சனை செய்தும் விழா நடத்தியும் ஆண்டவனைத் திருப்திப்படுத்த நினைத்தால் அது பயனற்றதாகவே முடியும் — இறைவன் அவர்களைக் கண்டு சிரிப்பான்.

'பொக்க மிக்கவர் பூவும் நீரும் கொண்டு
நன்கு நிற்பன் அவர்தமை நாணியே!

என்று நாவுக்கரசர் இதைத்தான் விளக்கியுள்ளார், இறைவன் சிரிப்பதோடு, இப்படிப்பட்டவர்களையும்

படைத்தோமே என நாணவும் செய்வான்; நமக்காக அவன் நாணுவான் என்கின்றார். இவற்றையெல்லாம் நோக்கும் போது, நாடு வாழ — நல்லவர் வாழ — நாட்டுப் பண்பாடு கெடாது வாழ— மக்கள் பெறுவன பெற்று வாழ— நல்லவர் நாடாள வேண்டும். அன்று மன்னர்கள் நாடாண்டனர். இன்று மக்கள் - பதினெட்டு வயதுக்கு மேற்பட்ட மக்கள் யாவரும்தான் நாடாளும் மன்னர்கள். இதையேதான் பாரதி 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்' என்று விடுதலைபெறும் முன்பே— அன்றே பாடிவிட்டுச் சென்றான். எனவே, நம்நாட்டில் ஒரு பாதி மழையால் அழிய — ஒரு பாதி குடிநீருக்கும் அலைய — தோன்றக் கூடாத இடத்திலெல்லாம் நிலம் நடுங்க — பூகம்பம் உண்டாக நாமே- எல்லாருமே காரணமாகின்றோம் என உணர்தல் வேண்டும்.

இந்த உலகம் உள்ளமைக்கு, நாம் அறிவியல் முறையில் எத்தனையோ காரணங்களைக் காட்டினும் ஆன்மீக உயிரினப் பண்பின் அடிப்படையில் ஒரு பெருமன்னன்—பாண்டியன் இளம்பெருவழுதி புறம் 182இல் ஒரு காரணத்தைக் காட்டுகின்றான். மற்றவர் வாழத் தாம் வாழும் மற்றவர் வாடத் தாம் வாடும் இந்த உலகம் — தேவையானால் பிறர் வாழத் தாம் வாடும் நல்லவர் உள்ளமையே இந்த உலகம் வாழக் காரணம் எனக் காட்டுகின்றான். ஆம்! ஒரு பெருமன்னன் விரும்பினால் தன்னால்தான் உலகம் வாழ்கிறது என்று பறை சாற்றிக்கொள்ள முடியும். ஊர்களையெல்லாம் தம் பெயரிலும், தம் தலைவர்கள் பெயரிலும், இன்று சில காலமே ஆளும் தலைவர்கள் போலச் செய்து கொள்ளலாம். ஆனால் தமிழ் உள்ளம் பூண்ட அப்பாண்டியன்,

'அயர்விலர்' அன்னமாட்சி அனையராகி
தமக்கென முயலா நோன்தாள்

பிறர்க்கென முயலுநர் உண்மையானே
உண்டால் அம்ம இவ்வுலகம்

(புறம் 182)

என நல்லவர்— தம்மை மறந்து நாட்டை— மக்களை— சமுதாயத்தை வாழ வைக்க நினைப்பவர்களால்தான் உலகம் வாழ்கிறது என்கிறார். அத்தகைய நல்லவர்-இந்த நூற்றாண்டில் நம் காந்தி- வாழ்ந்தார். அவரால் நம் பாரத நாடு விடுதலை பெற்றது. ஆனால் நாம் அவருக்குத் தந்தது குண்டுப் பரிசு. ஆம்! இயேசுவைச் சிலுவையில் ஏற்றிய மிருகம்—மகமதுவைக் கல்லால் அடித்த மிருகம்— மணிவாசகரைக் கோடை வெயில் மண்ணில் புரட்டிய மிருகம்—சாக்ரடிசை விஷம் கொடுத்துக் கொன்ற மிருகம் இன்று காந்தியையும் கொன்றது. எனவே, மனிதன் மிருகமாகிவிட்டான். பின் பூகம்பமும் தண்ணீர்ப் பஞ்சமும் அதே வேளையில் அதே நாட்டில் வெள்ளமும் வராது என் செய்யும்? இயற்கை அன்னை நமக்குப் பாடம் கற்பித்தாலும் நாம் உணருவதில்லை. எங்கும் கொலை, கொள்ளை, வழிப்பறி. காமவெறிக்களி யாட்டம், பெரிய வங்கிகள் ஏமாற்றம், பொருள் வாங்கு வதில் கையூட்டு, எதிலும் இலஞ்சமும் மோதலாலும், பிற வற்றாலும், புகைவண்டிப் பயணத்தாலும் பல இழப் புக்கள், இத்தனையும் நிறைந்தால் பூமகள் எப்படிப் பொறுப்பாள்? தாங்குவாள்? எனவே நடக்காதன நடக்கின்றன. நாடு நலிவுறுகின்றது. ஆனால் நாடாள் வோர், நாடு எக்கேடுகெட்டால் நமக்கென்ன? நாம்— நம்மைச் சேர்ந்தவர்கள் நன்கு வாழ்ந்தால் போதும் என்கிற போக்கில் தானே இன்று இருக்கிறார்கள்.

'மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால், யான் உயிர் என்பது அறிகை
வேல் மிகுதானை வேந்தர்க்குக் கடனே'

(புறம் 186)

என்று மோசிகீரனார் கூறியபடி, மன்னர் ஆளுகின்றனரா? உடலை உயிர் ஓம்புவது போல நாட்டை ஆள வேண்டும். இவ்வாறு இன்று நாம் ஆளப்படுகிறோமா? கம்பர் மன்னரை—

'உயிரெலாம் உறையுமோர் உடம்பு மாயினான்'

என்று உலகை உயிராகவும், மன்னனை உடலாகவும் காட்டுகிறார். அப்படியும் நம்மை ஆள்வார் வாழ வில்லையே; பின் எப்படி நாடு நாடாகும்? இவ்வாறு எத்தனையோ காட்டிக் கொண்டே செல்லலாம். இன்று நம்நாடு ஒன்று என்று சொல்லுகிறோம் ஆனால் ஒரு கையில் ஈ உட்கார்ந்தால் மறு கை ஓட்டுகிறது. உடம்பில் ஓரிடத்தில் நோய் கண்டால் மற்ற உறுப்புகள் அலறுகின்றன. எங்கோ அடிபட்டால் கண் நீர்விடுகிறது; வாய் புலம்புகின்றது. ஆனால் நாட்டில் ஒரு பகுதியில் வாடும் பயிரை வாழ வைக்க, தேவைக்கு மேல் கட்டி வைக்கும் நீரைக் கொடுக்க மற்றொரு பகுதி மறுக்கின்றது. இது ஒரு நாடு என்பதற்குச் சான்றாகுமா? நீதி மன்றம் ஆணை தந்தும் நேர்மையை மறுக்கும் நிலை நாட்டுக்கு ஏற்றதாகுமா? நாடு என்று அழைக்கும் தகுதி இதற்கு உண்டா? இத்தகைய அக்கிரமத்திற்கு இதுவரை தராத பரிசினை இயற்கை அன்னை அளித்த நிலையினை நாம் அறிவோம். எல்லாக் கொடுமைகளுக்கும் இத்தகைய பரிசுகள்தாம் தரப்பெறும் என்று உணர்ந்து, இனியாவது நாம் திருந்தி வாழ்வோமா! வாழ்ந்தால் நாடு நிலைக்கும். இன்றேல் பெரும் இயற்கையின் சீற்றத்துக்கு நாம் தயாராக இருக்க வேண்டும்.

தினமணி நாளிதழ் தன் 15.10.93 இன் தலையங்கத்தில் மராட்டிய மாநிலத்தில் நிகழ்ந்த பல கலவரங்கள், இழப்புக்கள், இரெயிலில் அடிபட்ட கொடுமை, பூகம்பம் ஆகியவற்றிற்குப் பரிகாரம் கூறி இருக்கிறது.

'ஸ்திரமான, கட்டுக்கோப்பான நகரம் என்கிற பெருமையைப் பம்பாய் இழந்து வருகிறது. **நாட்டின் வர்த்தக நிதித் தலைநகரம் உலக அளவில் இன்று கெட்ட பெயர்** சம்பாதித்து உள்ளது. இதை அனுமதிக்கக் கூடாது வெளிநாட்டில் துர்ப்பிரசாரத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். அந்நிய முதலீட்டாளர்கள் தயக்கம் காட்ட இடந்தரக் கூடாது, என்பதே இனிக் கொடுமை நிகழா திருக்கத் தினமணி காட்டும் வழி. ஆம்! இத்தகைய மனித மாறாட்டங்களே மண்ணையும் விண்ணையும் சாடும் கெட்ட கருவிகளாக அமைகின்றன. அதனாலேயே பூகம் பங்களும் பிறவும் நிகழ்கின்றன.

மேலும், தினமணிக் கதிர் 10.10.93 இதழில் இந்நில நடுக்கம் பற்றியும் அடிப்படை காரணங்கள் பற்றியும் சற்றே விளக்கியுள்ளது. நம் நாடு இந்த நில ஆய்வில் எங்கோ பின் நிற்கிறது என்பதைக் காட்டுகிறது.

'நில நடுக்க ஆய்வுத்துறையில் இந்தியா எங்கோ மிகவும் பின் தங்கிய நிலையிலுள்ளது. எனவே, நாம் உடனடியாக நமது நிலநடுக்கவியல் ஆய்வு மையங்களின் தரத்தை உயர்த்தியாக வேண்டும்.'

மராட்டிய மாநிலத்தில் நில நடுக்கம் ஏற்பட்ட பகுதிகள் தக்கண பீடபூமியைச் சேர்ந்தவை தக்கண பீட பூமியின் மேற்பரப்பில் உள்ள பாறை அடுக்குகள் குறித்து விரிவான ஆய்வு எதுவும் நடைபெறவில்லை என்று தேசிய புவி பௌதிக ஆய்வு நிறுவன முன்னாள் இயக்குநர் திரு. வினோத் கே. கவுர் கூறுகிறார்.

'தென் இந்தியாவில் நில நடுக்கம் ஏற்படாது என்ற கருத்தைக் கிலாரி நில நடுக்கம் தகர்த்து விட்டது.

மகாராட்டிர நிலமட்டுமல்ல, கர்நாடகம், கேரளம், தமிழ்நாடு முதலிய மாநிலங்களிலும் நிலநடுக்கம் ஏற்பட

வாய்ப்பு உண்டாகும் பாதாள பாதிப்புகள் உள்ளன. என்ற கருத்து பெரிதும் அச்சம் தருவதாக உள்ளது (5.10.93 கதிர்).

இவ்வாறு தினமணிக்கதிர் கூறுவதில் பொருள் உண்டு. இந்தக் கிலாரி நிலநடுக்கம் பற்றித் தேசியப்புவி பௌதிக ஆய்வு நிறுவனத்தைச் சேர்ந்தவர்களே ஆச்சரியப்படுகின்றனர் என்று அது கூறுகிறது (பக்கம் 4). ஆம். விந்திய மலைக்குத் தெற்கே நிலநடுக்கம் உண்டாகாது என்பது ஆய்வாளரும் அறிஞரும் சான்றோரும் கண்ட முடிவாகும். ஆனால் இன்று எப்படி நடந்தது?

இன்றைய கதிர் இயக்க நிலையும் அத்தகையதே. சென்னையில் மிக்க கொடுமை வாய்ந்த கதிரியக்கப் பேழைகளைத், திருடி நீரிடை இட்ட நிலை நடக்கலாமா? காவல் எங்கே? கட்டுப்பாடு எங்கே? அதன் கசிவு சென்னை நகர உயிரினத்தையே அழித்து ஊரையே பாலைவன மாக்கும் என்கிறார்களே! இத்தகைய கொடுமை வாய்ந்ததை ஏன் உண்டாக்க வேண்டும்? அமெரிக்காவில் ஓர் ஊரில் உள்ள அணுகுண்டுகளே உலகை அழிக்கப் போதுமானவை. இதைப்பற்றி என் பயண நூலில் (ஏழு நாடுகளில் எழுபது நாட்கள்) தெளிவாக எழுதியுள்ளேன். முந்திய அணுகுண்டால் அழிந்த நாடுகள் — தீவுகள் இன்றும் சரியாகவில்லை. மனிதன் — மற்றொரு மனிதனை இத்தகைய கொடுமைகளுக்கு இலக்காக்கலாமா? அப்போது இயற்கையும் சீற்றமடையாதா! அச்சீற்றத்தின் விளைவே பூகம்பங்களும் பிற கொடுமைகளும். இவற்றை எண்ணியாயினும் மனிதன் திருந்துவானா?

இக்கதிர் வீச்சின் கொடுமையினையும் சூலை மாதத்தில் போடப்பட்ட அது, அக்டோபரில் கண்ட நிலையையும் அது வெளியே போடப்பட்டிருந்தால் உண்டாகி இருக்கும் அவல நிலையினையும், எதுபற்றியும்

கவலையற்றிருக்கும் 'மக்களையும் அரசாங்கத்தையும் பற்றியும்' திரு. சுதாங்கன் அவர்கள்' கருவறுக்கும் கதிர் வீச்சு' என்ற தலைப்பில் **தினமணிக் கதிர் 31.10.93** நாளிட்ட இதழில் விளக்கமாக எழுதியுள்ளார். அதே கட்டுரையில் அமெரிக்க நாட்டு ஒரு நகரில் இத்தகைய அவல நிலை ஏற்பட்டால் செய்ய வேண்டியவை பற்றி அந்த அரசாங்கம் மேற்கொண்டே எல்லா நடவடிக்கை களையும் இரு பேராசிரியர்கள் எழுதிய எழுத்துக்களைக் கொண்டே நன்கு விளக்கி இருக்கிறார். LORRY COLLINS, DAMINIC LAPIERRE என்ற இருவர் எழுதிய THE FIFTH HORSE என்ற நூலே அது. அந்த அமெரிக்க அரசாங்கம் செய்யும் ஏற்பாடுகளை நம்மவர் கள் ஏன் செய்யக்கூடாது? இன்றும் செய்ய நினைக்க வில்லையே அதனாலேதான் ஔவையார் — எவ்வழி நல்லவர் ஆடவர், அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்று கூறிச் சென்றார்.

இந்த - வரப்போகும் அவல நிலையினை இன்றைய விஞ்ஞானிகள் ஓரளவு கண்டு எச்சரிக்கை செய்துள்ளனர். உலகின் வெப்பம் அதிகரித்துக்கொண்டே வருவதாகவும், கடலின் மட்டம் உயர்ந்து கொண்டே வருவதாகவும் கி.பி. 2000த்தில் கடல் மட்டம் முப்பது மீட்டர் (100 அடி) உயரும் நிலை உள்ளது என்றும் கூறுகின்றனர். (வானொலி 29.10.93 – 8.30 செய்தி) இவை எல்லாம் எதனால்? அமைதியோடு, குளிர்ந்த உள்ளத்தோடு, தணிந்த உணர்வோடு வாழ வேண்டிய மனிதன்; உள்ளம் வெம்பி, மற்றவர் நிலை கண்டு பொறாமைத் தீயால் பொசுங்கி, தான் மட்டும் வாழ வேண்டும் என்று கொழுந்து விட்டெரியும் வெப்ப எண்ணத்தால், எல்லா வகையிலும் உள்ளம் கொதிக்கும் வகையில் நிலைகெட்டு வாழ்ந்தால் அவன் வாழும் பூமி ஏன் வெப்பமடையாது? 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய

நிலனே' என்பது ஔவையார் பொய்யா மொழி யன்றோ? மேலும் நூறு அடி உயரம் கடல் உயருமானால் சென்னை போன்ற நகரங்களின் கதி என்னாகும்? எண்ணிப் பார்த்தவர் உண்டா? ஊரார் நிலத்தை— அரசாங்க நிலத்தை— ஊரார் சொத்தை எப்படி நமது உரிமையாக்கி, அதற்கு எப்படி எப்படிக் கொடுமை இழைக்கலாம் என்று எண்ணி மனித மனம் வெம்பிச் சாம்புகிறது. அதில் வெற்றி கொண்டதாக 'வெப்பம்' விழாக் கொண்டாடுகிறது. எப்படிப் பெண்களைக் கற்பழிக்கலாம்? எவ்வெவ்வாறு இலஞ்சம் வாங்கலாம், இலட்சமா— சீ, வேண்டாம்— கோடியாகக் கொடு என்று கேட்கலாம் என உள்ளம் எரிகிறதே! எப்படி பொதுச் சொத்தை— சமுதாயம், கோயில் நிலங்கள், சொத்து முதலியவற்றை நமதாக்கிக் கொள்ளலாம் என்பது போன்ற மனித நச்சு எண்ணங்கள்— மண்ணில் பிரதிபலிக்காமல் என்ன செய்யும்? எனவே விஞ்ஞானிகள் நேர்மையாக வாழ வழி காணவேண்டும். இன்றேல் கல்கி அவதாரத்தால் காசினி முற்றும் வெள்ளக் காடாகியும், வெந்தணலால் வெந்தும் அழியப்போவது உண்மை; விரைவில் அழியப் போவது உண்மை. 'விண்ணில் பறக்கிறேன். சந்திரனில் கால் வைத்து விட்டேன்! அங்காரகனில் அடியிட்டேன், இனி அங்கே குடி போகிறேன் எனப் புறப்படும் மனிதன் அங்கேயும் வாழ வழி இல்லாமல்— திரும்பி இங்கே வந்தால் இங்கேயும் வாழ மண் இல்லாமல் திரிசங்கு சுவர்க்கமாகத் திண்டாடி அழியப் போகிறான். ஆம! உயிரினம் அழியும் காலம் அண்மையில் உள்ளது இதை நான் சொல்லவில்லை. அன்று தெளிந்து கூறிய மெய்ஞ்ஞானமும் இன்று ஆராய்ந்து கண்ட விஞ்ஞானமும் அதைத்தான் கூறுகின்றன. எனவே, மனிதன் வாழ்வாங்கு வாழும் நெறியில் தம் கடமை மற்றவரைத் தாங்குதலே என்ற உணர்வில் 'எல்லாரும் இன்புற் றிருக்க நினைப்பதுவே அல்லாமல்

வேறொன்றறியா, நல்ல தெய்வ நிலையில் 'நாடெங்கும் வாழக் கேடொன்று மில்லை' என்ற மனித உணர்வில் திருந்தி வாழத் தொடங்கினால்தான் உலகம்— உயிர் அனைத்தும் உய்ய வழியுண்டு. மிருகமாகிய மனிதன்— அதனினும் கீழ் நிலைக்குச் சென்று கொண்டிருக்கும் மனிதன் இதை எண்ணியாவது திருந்துவானா? திருந்தினால் உய்தி உண்டு.' அன்றேல் கி.பி. 2000த்தை நலமாகக் காணுவார் யாரே!

கலிபோர்னியா எரிவதும், மராட்டியம் குமுறி வெடிப்பதும் எதனால்? எண்ணிப் பார்த்து மனிதன் வாழ வேண்டும். இனி இவ்வாறு நிலநடுக்கம் போன்ற உற்பாதங்களும் பிற கொடுமைகளும்— மழையின்மை— பெருமழை— பருவநிலை பற்றியவையும் முன் கூட்டி அறியமுடியாதா? என்ற கேள்வி எழும். நிலநடுக்கத்தை முன் கூட்டி அறிய முடியாது என்கின்றது ஆய்வுத்துறை. பிறவற்றைப்பற்றி அன்றாடம் வானொலி, தொலைக் காட்சி, நாளிதழ்கள் போன்றவை முன் கூட்டி அத்துறையினர் குறிப்பதாகக் காட்டுகின்றன. என்றாலும் சில அதன்படி நடப்பதில்லை. கடந்த இருவாரங்களில் (அக்டோபர் 1-15) 'வங்கக் கடலில் புயல் சின்னம் உருவாகியுள்ளது. சென்னையில் அதன் சுற்றுப்புறங்களில் அடுத்த இரண்டு நாட்களில் பலத்த மழை பெய்யும்' என அனைத்தும் அறிவித்தன. ஆனால், அந்த இரு நாட்களிலும் முற்றிய வெய்யிலே காய்ந்தது அப்படியே அடுத்த இரண்டு நாட்களில் நகரின் சில பகுதிகளில் தூறல் இருக்கும் என்று அறிவித்த மறுநாளே, இந்த ஆண்டின் இதுவரையில் பெய்யாத அளவிற்கு (14.10.93 இல் 5 செ. மீ அளவு) மழை பெய்துள்ளது. இவ்வாறே இந்து 24-14-95லும் எக்ஸ்பிரஸ் அதே நாளிலும் பெரும் புயலும் காற்றும் கனமழையும் தமிழகத்தைப் பாழ்படுத்தும், அதனால் கடலோரக் கல்வி நிலையங்கள்யாவும் மூடப்பட வேண்டும் எனவும் அரசாங்கம் ஆணையிட்ட

தெனவும், அனைவரும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் எனவே பெரும்தலைப்புக்களில், அத்துறையினர் கூறிய தைச் சான்றாகக் காட்டி எழுதியதை அனைவரும் அறிவர். ஆனால் நடந்தது என்ன?

L.R A. நாராயணன் என்பார் 5-11-95இந்து இதழில் Preventing naturaldisosters என்ற தலைப்பில் நாம் இயற்கைச் சீற்றத்தினின்றும் காத்துக்கொள்ளும் வழி காட்டுகின்றார். அவை உண்டாவதை அறிய வாய்ப்புகள் உண்டு என்கின்றார்.

**We can thus infer that some natural disasters can be prevented while the efforts of others can be mitigated by regular monotiring and timely action. Arial photographs, radar images, satellite images of Earth and information from weather or meterological satellites like advanced very high Resolution Radiometric (AUHRR) help in monitoring the physical changes on the Earth.**

**(Hindu 5-11-95)**

இதனால், அத்துறையினரை நான் குறை கூறவில்லை. கணிப்பில் தவறு ஏற்படுகின்றது; அவ்வளவே! 'எறும்பு முட்டை கொண்டு திட்டை ஏறின் கட்டாயம் மழை பெய் தது' என்று காலவழு அமைதிக்கு மேற்கோள் காட்டும் அளவிற்கு மழை பெய்வது மூவறிவுடைய எறும்புக்கு முன் கூட்டியே தெரிய, அவை தம் முட்டையை எடுத்துக் கொண்டு மேடான இடத்திற்குச் செல்லும் என அறிகிறோம் அப்படியே சில பறவைகளும், விலங்குகளும் அறியும் ஆற்றல் பெற்றுள்ளன, எங்கோ இரஷ்யாவில் உள்ள பறவைகள், பருவத் தோற்றத்தை முன் கூட்டியே அறிந்து வேடந்தாங்கலுக்கு வந்து தங்கவில்லையா? ஆக. மூவறிவு, ஐயறிவு உடையவை அறியும் போது மனிதனால் அறிய முடியாதா? முடியும். சில தவறுகள்—

எப்படிச் சொல்ல முடியும்? பாரதி இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் பாடிய பாட்டு இன்று செயலளவில் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

'கணிதம் பன்னிரண்டு ஆண்டு பயில்வர்பின்
கார்கொள் வானிலோர் மீன்நிலை தேர்ந்திலார்
அணிசெய் காவியம் ஆயிரம் கற்கினும்
ஆழ்ந்திருக்கும் கவிஉளம் காண்கிலார்
வணிகமும் பொருள் நூலும் பிதற்றுவார்
வாழும் நாட்டில் பொருள் கெடல் கேட்டிலார்
துணியும் ஆயிரம் சாத்திரம் கற்கினும்
சொல்லுவார் எள்துணைப் பயன் கண்டிலார்'

என்று தொண்ணூறு ஆண்டுகளுக்கு முன் பாரதி பாடிய பாடல்கள் இன்றும் உண்மையாகவன்றோ உள்ளன. சுதந்திரம் பெற்று அரை நூற்றாண்டாகும் நிலையிலும் கல்வியில் மாறுபாடு இல்லையே. கற்பதில் தெளிவில் லையே! 'கற்கக் கசடறக் கற்பவை' என்ற வள்ளுவர் வாக்கினை அச்சில் ஏற்றியும் உந்துவண்டியில் எழுதியும் விட்டு, வாழ்க்கையில் பறக்க விடுகிறோமே. எனவே, அவ்வத்துறையில் கற்பவர் தெளியக் கற்க வேண்டும். வானாராய்ச்சி பெற்றுள்ள இந்த நாளில் ஆழ்ந்து கற்று, அறிவன அறிந்து, புரிவனவற்றைப் புரிந்துகொண்டு, நின்று, நெடிது நினைந்து செயல்படின் வரும் கொடிய துன்பத்தையும் முன்னமே அறியலாம் — பிறவற்றையும் நன்கு உணரலாம். ஆனால் உணரவில்லையே! நாட்டுக் கல்வி நாளுக்கு நாள் கீழே தரம் கெட்டு எங்கோ சென்று கொண்டிருக்கிறது. அதுவும் தமிழ் நாட்டில் சொல்ல வேண்டுவதில்லை. நான் என் 'கல்வி எனும் கண்' என்ற நூலில் தெளிவாக இது பற்றி விளக்கியுள்ளேன். அனைவரும் நான் எழுத்தில் சொல்வதை ஏற்றுக் கொள் கின்றார்களே தவிர செயல்படுவதில்லை. உயர்கல்வி இன்னதென அறியாத— கல்லூரிப் படியினைக் காலால்

மிதித்தும் அறியாத 'நல்லவர்கள்' பல்கலைக் கழக ஆட்சிக் குழுக்களில் இடம் பெறின் கல்வி வளருவதெங்கே? வேண்டியவருக்கு முதலிடம், அல்லாதார் எங்கேயோ என்ற செயல் உள்ள நிலையில் கல்வி வளருவதெங்கே? எங்கோ சென்று விட்டேன். மன்னியுங்கள். தெளிந்த அறிவு பெறின் எதனையும் தெள்ளென அறிய முடியும். அப்படி அறிந்து செயல்பட முடியாததால்தான் வாழ்க்கை எரிமுன் வைக்கோல்போல் அழியும் என்கிறார் வள்ளுவர், இதோ அவர் வாக்கு—

'வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்'

என்வே சற்று நாட்டு நிலையினையும் வாழ்வுக் கொடுமையினையும் அதற்கேற்ற இயற்கை அன்னையின் மாற்றத்தையும்— ஒருபால் வெள்ளப் பெருக்கும், ஒருபால் குடிக்கும் நீருக்கும் பஞ்சமும் உள்ள வகையினையும் ஆய்வாளரும் ஆட்சியாளரும் சற்று முன்னரே நின்று நினைத்துச் செயல்பட்டிருப்பாரேயாயின், இந்த மராட்டிய, கன்னட நாட்டில் பூகம்பம் வருவதை முன்னமே அறிந்திருக்கலாம். அதைத் தடுக்க முடியாது என்றாலும், மக்களை— எறும்பு போல வேறு இடத்துக்கு மாற்றி இருக்கலாம். போனது போக், இனியாவது நம் நாட்டு மக்கள்— சிறப்பாக ஆளும் வர்க்கத்தார் வாழ் வாங்கு மனிதனாக வாழ்வதற்கு முயல்வார்களாயின் நாட்டில் இக்கொடுமைகள் நிகழாமல் தடுக்கலாம்.

அன்று அழிந்த வீடுகளை அரசாங்கம் கட்டிக்கொடுத்தது. இன்று சிறு நடுக்கத்தையும் தாங்காது அவ்வை இடிந்தன். அது பற்றி, தினமலரில் (20-12-95 பக்கம் 7) வெளிவந்த செய்தி நம்மைத் திகைக்க வைக்கிறது.

'நிலநடுக்கத்தைத் தாக்குப் பிடிக்காத 3000 வீடுகள்' என்ற தலைப்பில் அண்மையில் (14.12.95) மராட்டிய

மாநில லத்தூரில் மீண்டும் பூகம்பம் ஏற்பட, முன் 1993ல் உண்டான பூகம்பத்தில் சேதமடைந்த வீடுகளை, அரசாங் கத்தார் மீண்டும் கட்டித் தந்து, பூகம்பம் 6.2 எக்டர் வரை யில் இவை தாக்குப் பிடிக்கும் என்றனராம். ஆனால் இன்று 4.2 எக்டர் நிலையிலேயே அனைத்தும் இடிந்து விழுந்து மக்களை விரட்டி அடித்தது. இதற்குக் காரணம் 'தரக் குறைவுப் பொருள்கள் பயன்படுத்தியதால் இந்த வீடுகள் இடிந்துள்ளனவா' என்ற மக்கள் கேள்விக்கு அரசியல் அலுவலர் (கலெக்டர்) 'அந்த முடிவுக்குத்தான் வரமுடியும்' என்று கூறியதாகத் தினமலர்(20.12.95)செய்தி வெளியிட்டுள்ளது. ஆக நமது அரசும் அதன் வழிச் செயல் பாடுகளும்தாமே மக்கள் அவலநிலைக்குக் காரணமாகின் றன. இன்றும் தமிழ் நாட்டில் நடைபெறும் பல கலவரங் கள், சாதிச்சண்டைகள், பிற கொடுமைகள் அனைத்துக் கும் அரசு தானே காரணம் என்கின்றனர். எனவே அன்று சங்கப் புலவன் சொல்லிய,

> 'எவ்வழி நல்லவர் ஆடவர்
> அவ்வழி நல்லை வாழிய நிலனே'

என்பது எவ்வளவு மெய்யாகிறது.

அண்மையில் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த விஜய நகருக்கு அருகிலும் நிலநடுக்கம் வந்ததாகச் செய்தித்தாள் களில் கண்டேன். தமிழ்நாடு மட்டும் விட்டுவைக்கப் பெறுமா என அஞ்ச வேண்டியுள்ளது. ஆக, விந்திய மலைக்குத் தெற்கே, திண்ணிய நிலப்பகுதியில் நிலநடுக்கம் வராது என்று ஆய்ந்து கண்ட முடிவுகளெல்லாம் எதனால் மாறுகின்றன? நிலம் என்னும் நல்லாள் ஏன் நடுங்குகிறாள்? ஆம்! 'இத்தகைய கொடுமை வாய்ந்த பண்பாடற்ற, வாழ்க்கை நெறியற்ற 'மக்கள்' எனும் பெயரையுடைய மாக்களைத் தாங்க வேண்டியுள்ளதே' என ஆவலித்து அழுது நடுங்குகின்றாள்.

அண்மையில் கதிரியக்கப் பேழைகள் காணாமற் போனதாகவும் அது கூலம் ஆற்றில் போடப் பெற்றுப் புதையுண்டு கிடப்பதாகவும் எடுக்கப் பல முயற்சிகள் நடைபெறுவதாகவும் படங்களுடன் செய்திகள் வெளி வந்தன. உடன், அது ஒரு வேளை கசிய ஆரம்பித்தால் உண்டாகும் அவலம் பற்றியும் பலர் நாளிதழ்களில் செய்தி களை வெளியிடுகின்றனர். அப்படிக் கசியின் சென்னையே தரையாகி—புல்லும் அற்ற பாலைவனமாகி அழியும் என்கின்றனர். இதை இங்கேதானே தயாரித்தனர்- ஏன் தயாரித்தனர்? சரி, தயாரித்ததை — இத்தகைய கொடுமை வாய்ந்ததை மற்றவர் கொள்ளை கொள்ளும் வகையில் கண்டபடி வைக்கலாமா? வெடித்துக் கசியின் மக்கள்— உயிர்கள் வாழ்வது எங்கே? இத்தனையும் கண்டும் கேட்டும் நாடாளுபவர்கள் இருக்கலாமா? இப்படி விட்டவர்மேல் என்ன நடவடிக்கை எடுத்தனர்? ஆம். இவர்கள் செய்யத் தவறியதை இன்னும் சில நாளில் இயற்கை செய்து முடிக்கும். அதுதான் நியதி— நடை பெறப்போவது. அப்போது வருந்தி என்ன பயன்?

17 10. 93— இந்தியன் எக்ஸ்பிரஸில் குஜராத் மாநிலத்தைச் சேர்ந்த ஒருவர் (Dr. HEMENDRA B. JOSHI) அக்டோபர் 3ஆம் தேதி வெளியான 'ஸ்பாட் லைட்' (SPOT LIGHT)என்ற இதழைமேற்கோள் காட்டி இயற்கை விளைக்கும் பூகம்பம்போன்ற கொடுமை களைக் காட்டிலும் அவை வருவதை அறிந்து தடுக்காது நிற்கும் மனிதனின் கொடுமைகளே மிகமிகக் கொடியவை எனக் கூறுகின்றார். 'SPOTLIGHT OCTOBER 3rd 1993 RIGHTLY POINTS OUT THAT THE QUAKE WASMORE A MAN MADE DISASTER THAN A NATURAL CATASTROPHY'

பின் அதற்குரிய காரணங்களை விளக்கும்போது அரசாங்கமே இதற்குக் காரணம் என்றும். சீனாவில் இதை விடக் கொடிய பூகம்பத்தால் வந்த சேதத்தை ஓர் உயிரும் பலியாகாமல் தவிர்த்த போது, இங்குப் பல எச்சரிக்கைகளை நில நல்லாள் விடுத்த போதும், செய்யாது விட்டது யார் தவறு? மனிதன்— இன்றைய நாட்டாளும் 'நல்லவன்' செயல்தானே என்கின்றார். இதைத்தான் ஔவையார் அன்றே சொன்னார்.

திரு மனோஜ்தாஸ் (Thiru. Manoj Dus) என்பவர் 17.10.93 இந்து (HINDU) நாளிதழில் பல பூகம்பங்கள் மனிதனால் உண்டாக்கப் பெறுகின்றன எனக் காட்டு கிறார். அவர் தம் Image of man in Disaster என்ற கட்டுரையில் பல அறிஞர்களுடைய எழுத்துக்களைச் சான்றாகக் காட்டி, மனிதன் இயற்கையை எவ்வெவ்வாறு சிதைக்கிறான் எனவும் அதனால் நடக்கும் கொடுமைகள் இவை எனவும் விளக்குகிறார். தாங்க முடியாத இடத்தில் பெரும்பாரம் தாங்க வைத்து நீர் அணைகளைக் கட்டு வதும் ஒரு காரணம் என்கிறார்.

(Earthquakes are Caused by men because of his projects and loading the Surface of the earth unlimitedly)

இன்று நர்மதை அணை இந்த நிலையில்தானே மக்களால் வேண்டாமென மறுக்கப் பெறுகின்றது. அரசாங்கம் தன் அதிகாரத்தால் கட்டுமேயாயின் மற்றொரு பெரும்பூகம்பத்தை வரவேற்பதாகாதா? அப்படியேதான் தண்ணீர் இல்லாத நாளில் நூற்றுக்கும் மேலாக ஆழ்கிணறுகளும் குழாய்களும் இட்டு நிலத்தடி நீரை, நீர் வரண்டு, வற்ற— ஒரு வேளை இந்த ஐப்பசி கார்த்திகையில் மழையும் இல்லையாயினும் இங்கேயும் நில அதிர்வும், பிளவுகளும் உண்டாகி நாட்டை நாசப்படுத் தாதா? மழைக்கு வேண்டிய, காரணமான காட்டை மனிதன் அழிக்கிறான். அதனால் மழை இல்லை என்று

பறைசாற்றும்—வானொலியிலும், தொலைக்காட்சியிலும் விளம்பரம் செய்யும், மாநாடுகளில் வானளாவப் பேசும் அரசாங்கம் அவ்வாறு வெட்டுபவர்களைத் தடுக்க ஏன் கடுமையான நடவடிக்கை எடுக்கக் கூடாது? நடவடிக்கை இல்லையாயின் இயற்கை தன் தண்டனையைத் தந்தே தீரும் என்பது உறுதி. இவையாவும், இன்று பல அறிஞர் கூறுவன யாவும், ஔவையாரின்

'எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே'

என்ற வாய்மொழியினை வலியுறுத்துகின்றன அன்றோ!

முன்னரே இமயம் கடலுள் ஆழ்ந்த காலத்தைப் பற்றியும் தெற்கே பல நாடுகள் அழிந்தன பற்றியும் எழுதியுள்ளேன். பழைய நில நூலார்— தொன்மை நில ஆய்வாளர் போன்றோர் கண்ட உண்மையும் நம் இலக்கியங்கள் காட்டும் உண்மையும் ஒன்றே.

விந்தியமலைக்குத் தெற்கும் குமரிமுனைக்கு வடக்கும் உள்ள நிலப்பகுதி காலத்தால் மிக மிக முந்தியது. இது தான் உண்மையும் கூட. நான் முன்னே காட்டியபடி எங்கோ தெற்கே இருந்து மெல்ல மெல்ல நகர்ந்து இந்தியப் பகுதி வடக்கே வந்து இமயத்தொடு முட்டிற்று என்று காட்டியபடி இன்றேனும், இந்திய நாட்டின் தென்பகுதி—விந்திய மலைக்குத் தெற்குள்ள பகுதி காலத்தால் மிக மிக முந்திய தெனவும் வடபகுதி இமயம் உட்பட பின் கடலினின்று மேலெழும்பிக் காலத்தால் பிந்தியவாக உள்ளன எனவும் கொள்ள வேண்டும். இந்த ஆய்வின்படி பல அறிஞர்கள் மண்திணிந்த தென் பகுதியில் நில அதிர்வும், நடுக்கமும் உண்டாகாதெனவும், வடபகுதியில் பல இடங்களில் உண்டாகும் எனவும் அறுதியிட்டுக் கூறினர் அது இன்று வரை உண்மையாகவும் இருந்தது. குவேட்டா, பீகார் போன்ற இடங்களில் பெரு நிலையிலும் வேறுபல இடங்

களில் சிறு அளவிலும் நில அதிர்வும், பூகம்பமும் உண்டா யின என நாம் நன்கு அறிவோம். ஆனால், சில ஆண்டு களுக்கு முன் பூனாவின் பக்கத்தில் 'கொய்னா' அணை ஒட்டிய பூகம்பமும் இன்றைய மராட்டிய கிலாரி பூகம் பமும் நம்மை நடுங்க வைக்கின்றன. இந்த மாறுபாட்டுக் குரிய காரணங்களைப் பல அறிஞர்கள் ஆராய்கின்றனர். திருச்சி பல்கலைக்கழகப் பேராசிரியர் டாக்டர் எஸ். எம். இராமசாமி அவர்கள் பல காரணங்களைக் காட்டுகிறார். (The Hindu 17.10.93). வேறு சிலரும் விந்திய மலைக்குத் தெற்கே பூகம்பமும் வந்ததை எண்ணி எண்ணி வியந்து வியந்து—பல அறிஞர்கள் கண்ட ஆய்வு பொய்த்து விட்டதே என்று அதற்குரிய காரணங்களைக் காண முயல் கின்றனர். 'Quake Explodes Myth About PENINSULAR INDIA' என்ற தலைப்பில் இந்துவின் தனிச் செய்தியாளர் 3.10.93 இந்து (THE HINDU) இதழில் இது பற்றி எழுதி யுள்ளார். அதில் இந்திய நாடு ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப் பெற்றதைக் காட்டி, அதில் முதல் பிரிவில் (ZONE-I) நில நடுக்கம் பூகம்பம் வராது என்று இதுவரை கண்ட உண்மை பொய்த்து விட்டதே என வருந்தி, இது பற்றி இத்துறையில் வல்ல அறிஞர்களை ஆய்வு செய்யு மாறு கேட்டுள்ளார். உலகெங்கணும் இதனை முன் கூட்டி அறிபவர் இலர் என்று ஓரறிஞர் கூறியதாகவும் காட்டி யுள்ளார். அது பொருந்தாது. எறும்பும் புள்ளும் எதிராக வருவதை அறியும் ஆற்றல் பெறும்போது, மனிதனால் இந்த நிலநடுக்க அதிர்வை முன் கூட்டி அறிய முடியாது என்பது பொருந்துமாறில்லை. இயற்கை அன்னை மிகக் கொடியவள் அல்லள்— மனிதனைப் போன்று. நாளிதழ்கள் வழியே, இப்பெரும் பூகம்பத்துக்கு முன் பல முறை அசைந்து நிலம் என்னும் நல்லாள் எச்சரிக்கை விடுத்தும்— மக்கள் அதை எடுத்துக் கூறியும், கண்ணிருந் தும் குருடராய் காதிருந்தும் செவிடராய் வாழ்ந்த நாமே

தக்க நடவடிக்கை எடுக்கத் தவறிவிட்டோம். இதுபற்றி இந்து (THE HINDU) 1.10.93லும், 18.10.93லும் நாளிதழில் கல்கத்தாவைச் சேர்ந்த B.C. DUTTA அவர்கள் எழுதியுள்ள கடிதத்திலும் நல்ல குறிப்புகள் உள்ளன. சீன நாடு அத்தகைய நிலநடுக்கத்துக்கு முன் தக்க நடவடிக்கை எடுத்து உயிர்களையும் பொருளையும் காப்பாற்றியது எனக் குறித்த அறிஞர் விளக்கத்தை முன்னரே காட்டியுள்ளேன். இந்தக்கட்டுரையில் கற்பனை (Myth) என்று அவர் குறித்திருப்பது பொருந்தாது. அது தான் உண்மை. அதனால் பல பேராய்வாளர்கள் ஆச்சரியப்படுகின்றனர்— தடுமாறுகின்றனர். இன்று நிலை மாறியதற்கு நாமே காரணம் என்பதை நன்கு தெளிந்து, நில நல்லாள் வருந்தா வகையில் வாழ்வின் அடிப்படையைப் பின்பற்ற வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த வள்ளுவர் இத்தகைய கொடுமைகளுக்கெல்லாம் மேலே சில அறிஞர்கள் காட்டியபடி மக்களே காரணம் என்கிறார்.

'சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை'

'பண்புடையார்ப் பட்டுண்(டு) உலகம்;
அதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்'

என்ற இரு குறள்பாக்களும் அவர் பாடிய பொய்யா மொழிப் பாடல்களன்றோ! ஆம். அவை பொய்க்காது. நாம்— மனிதர்— மனிதர்களாக வாழவில்லை, இயற்கை மகள்— பாரதத்தாய்— நில மகள் சீற்றம் கொள்ளு கிறாள். அவ்வளவே. இவ்வாறு சமுதாயமும் அரசாங்கமும் தாம் பல உற்பாதங்களுக்குக் காரணம். மேலும், தனி மனித வாழ்வும், அதில் வழுக்கி விழும் நிலையும், அதைக் கண்டும் காணாதிருக்கின்ற ஆள்வார் நிலையும் சற்றே எண்ணிப் பார்க்கவும் வேண்டும். நாடே தலைவிரி கோல

மாக இருக்கின்ற நிலை கண்டோம். நாடு மட்டுமன்று, வீடும் தலைவிரி கோலமாக உள்ளது. வீட்டில் உள்ள பெண்கள் தங்கள் தலை முடியை அவிழ்த்து விட்டு, விரித்துத் தம் தலைவிரி கோலத்தைக் காட்டுகின்றனர். பெண்கள் தலைவிரித்துத் தெருவிலே வந்தால், வெளியே செல்பவர் அதைச் சகுனத்தடையாக—கெட்ட சகுனமாக எண்ணிச் செல்லாது அமைவர். ஆனால் இன்று நாட்டிலே உள்ள பெண்கள் எங்கும் தலை விரித்தாடுவதால் எப்படி நல்ல செயல்கள் நடக்கும் என ஏங்க வேண்டியுள்ளது. அரசாங்கங்கள் அல்லல் உறுகின்றன. ஊர்கள் அவலமாகக் காட்சி தருகின்றன. வீடுகளிலோ சொல்ல வேண்டியதில்லை. வீட்டுக்கு வீடு பூசல் — கொள்ளை நீதி மன்றத்தில் அளவிடற்கரிய விசாரணைகள்.

இந்தத் தலைவிரி கோலத்தைத் தனி மனிதர் மட்டும் ஆதரிக்கவில்லை. அரசாங்கமே அங்கீகாரம் செய்கிறது. தன் அலுவலகத்திற்கு அவ்வாறு வரும் பெண்களுக்கு வரவேற்பு அளிக்கிறது. தொலைக்காட்சியில் தலைவிரித்து ஆடி — அசைந்து — செய்தி படிப்பதுதான் நாகரிகமாக இருக்கின்றது.

தில்லித் தொலைக்காட்சியில் வரும் பெண்கள் பெரும்பாலும் பொட்டு இட்டு புடவை கட்டிக்கொண்டு, தலையை ஒழுங்காக சீவிக் கொண்டு அல்லது பின்னல் இட்டு வருவதைக் காணமுடிகிறது ஆனால் பண்பாடு பற்றிப் பலமாகக் கத்தும் தமிழ் நாட்டுத் தொலைக்காட்சி தலைவிரி கோலமாக அன்றோ உள்ளது. இத்தக் கொடுமையை எப்படித் தொலைக்காட்சியினரும் அரசாங்கமும் அனுமதிக்கின்றனர்? (அதிலும் ஒழுங்கான முறையில் உடை உடுத்தும், முடி திருத்தியும் வரும் பெண்கள் உளர் அவர்கள் பாராட்டப் பெற வேண்டியவர்கள்). ஆனால் பலர் இந்த இயற்கை நியதிக்கு, பண்பாட்டு முறைக்கு மாறுபட்டவர்களாகவே தொலைக்காட்சியிலும், படக் காட்சியிலும் காட்சி தருகின்றனர்.

ஆடைகள், ஆண், பெண் முக்கிய உறுப்புகளை மறைப்பதற்கு—தம் ஈனமானங்களைக் காப்பதற்கென உண்டாயின. ஆதாம் ஏவாள் காலத்திலே — கற்கால மனிதர் வாழ்விலே அங்கம் மறையா வாழ்வு இருந்திருக்கலாம். ஆனால் அப்பொழுதே தழை உடுத்துத் தன் மானம் காத்த மகளிர் இருந்திருக்கின்றனர். ஆனால், இன்று மார்பினைப் பாதி காட்டும் ஆடையும், ஆண், பெண் வேறுபாடு காணாத ஆடைகளும் நாட்டில் வாழ்கின்றன. தென் ஆப்பிரிக்கா நாடுகளில் ஒன்று, பெண்கள் தம் நாட்டு மரபின் வழி வந்த ஆடைகளைத் தவிர, மேலைநாட்டு ஆடைகளை அணியக்கூடாது என்று சட்டமே இட்டுள்ளது (மங்கை — ஆகஸ்டு 1993). ஆனால் இங்கே அரசாங்கமே அத்தகைய உடல் காட்டும் உருவ வேறுபாடு அற்ற ஆடைகளை அனுமதிக்கின்றது. இவ்வாறு மரபுக்கு மாறுபட்ட வாழ்க்கையை மனிதன் மேற்கொள்ளும் போது ஏன் இயற்கை தன்னிலையிலிருந்து மாறுபட்டு வெடிக்கக்கூடாது? யார் தடுக்க முடியும்?

மகளிர் கூந்தலை எப்படிப் பின்னலிட்டு அழகுற முதுகில் தொங்கவிடவேண்டும் என்பதைச் சிவப்பிரகாசர் தம் பிரபுலிங்க லீலையில் சொல்லுகிறார்.

'மாயை' ஓர் அழகிய மங்கை. பிற எல்லாப் பண்புகளையும் உடைய தெய்வ நலம் சான்ற பெண். அவள் சிறப்பினை அவர்,

'கலையை மதிக்கும் புலவர்தமை, சித்தர் குழாத்தைக்
கடவுளரை
நிலையை மதிக்கும் முனிவரரை, திசைமாமுகனை
நிரைவளையாச்
சிலையை மிதிக்கும் நெடியோனை விழுங்கி உமிழாத்
திறன் மாயை'

என்கின்றார். ஆம்! கடவுளரையும் பிறரையும் தன் தோற்றத்தால் மயக்கும் திறன் வாய்ந்த பேரழகி. அத்தகைய உயர்ந்த'தெய்வநலம் சார்ந்த மாயைக்கு அவருடைய தோழிப் பெண்கள் தலையை நன்கு சீவி, கருங்கூந்தலை ஒழுங்கு படுத்தி, பின்னலாகப் பின்னி முதுகுப்புறத்தில் நீண்ட நிலையில் தொங்க விடுகின்றனர். அது மன்மதனுடைய வில்லில் பின்னிய வண்டுகளால் ஆகிய நாண் அவிழ்ந்து விட்டது போல் இருக்கின்றது என்கின்றார். கரிய கூந்தல்—முப்பிரிவால் அல்லது ஐம்பிரிவால் பிரித்துப் பின்னிய நிலையில் அடுக்கடுக்காக உள்ள வளைவுகள் கரிய வண்டுகள் போல் காட்சி தருகின்றன. எனவே மன்மதனுடைய 'சுரும்பு' ஆகிய வண்டுகளாகிய நாணில் அவை ஒன்றன்பின் ஒன்று ஒட்டித் தொங்குவது போல அமைகின்றது என்கிறார்.

'மாரவேள் சிலை வளைத்திடப் பூட்டிய வண்டு
நாரிஓர்சிலை நெகிழ்ந்து விட்டென ஒருநாரி
காரவா மலர் குழற்சடைக் கைபுனைந்து இயற்றி
வீரவேல் நெடுங்கண்ணிதன் முதுகுற விடுத்தாள்'

என்பது அவர் கவி. எனவே மலர் சூடும் பெண்கள் கருவண்டுகள் காட்சி தருவதுபோல் அமைந்த பின்னல் வளைவுகள் — ஐம்பால் காட்சி அமைய முதுகில் நீண்டு தொங்கும் வகையில் அமையுமாறு அழகுபடுத்திக் கொள்ள வேண்டும் என்பது தெளிவு. ஆனால் அவ்வாறு அன்றி, தாலி அறுத்தாள் வீட்டில் தலைவிரித்து ஒப்பாரி பாடுவது போலப் பெண்கள் கூந்தலை விரித்து விடுவார்களானால் நாட்டுநிலை என்னாகும். இளமையில் பின்னலும் முதுமையில் கொண்டையும் பெண்களுக்கு இயல்பாக அடைய வேண்டுவன. ஆனால் முதுமையை எட்டும் பேரன், பேத்தி எடுக்கும் வயதுடைய பெண்களுள் சிலரும் கூட இந்த நிலைக்கு மாறாகக் காட்சி தருவதும் அதை அரசாங்கம் ஏற்று ஆதரிப்பதும் நாட்டின் எதிர்காலத்தை

நமக்குப் படம் பிடித்துக் காட்டுவனவேயாகும். கிராமத்தில் மறுமணம் செய்யும் ஆடவனைப் பார்த்து (வயதான) கொண்டைக்காரி போனால் (இளையவளான) பின்னல்காரி வருவாள் என்று கூறும் மரபு இன்றும் உண்டு. ஆனால் 'தலைவிரித்தாள் வருவாள்' என்று யாரும் கூறுவதில்லை. இவற்றை உணர்ந்து இயற்கை நெறியில் நிற்பின் உய்தி உண்டு. இன்றேல்,...

இந்திய நாட்டின் வடக்கே ஒருத்தி தலைவிரி கோலமாக, ஒரு பெரும் போரே நடந்து;பாரதமே பாழ்பட்டது. அப்படியே தெற்கே ஒருத்தி தலைவிரித்த கோலத்தில் வரப் பேரரசும் நகரும் அழிந்தன. இவற்றை விளக்கும் காப்பியங்களை நாள்தோறும் படித்துக் கொண்டும் போற்றிக் கொண்டும் இருக்கும் நிலையில், இன்று எங்கும் மக்கள் தலைவிரிகோலமாகக் காட்சியளிக்கின்றனர். முடிவு என்னவாகும் என்று நான் சொல்ல வேண்டுமா?

> 'மலைகண்டதென என்றன்மறத் தண்டின் நிலை
> கண்டும் மகவான்மைந்தன்
> சிலை கண்டும் இருவர் பொரும் திறல் கண்டும்
> எமக்காகத் திருமால் நின்ற
> நிலை கண்டும் இவள் விரித்த குழல் கண்டும் நேரார்
> தம்மைக்
> கொலை கண்டு மகிழாமல் அவனடியில் குடி இருக்கக்
> கூசினாயே

என்று தருமன்,'ஐந்தூர் வேண்டு அவை மறுத்தால் ஐந்து இல்லம் வேண்டு' எனக் கண்ணனைத் தூதனுப்ப நினைத்த போது, வீமன் கூறிய வாசகமே இவ்வாறு வில்லிப்புத்தூரரால் பாட்டாக உருண்டோடி வருகிறது. எனவே, பாரதப் போருக்கு திரௌபதியின் விரித்த கூந்தலே காரணமாகின்றதல்லவா! ஒரு வேளை அன்று சபையில் திரௌபதி அவிழ்ந்த கூந்தலை முடிக்கத்

துரியோதனன், துச்சாதனன் இரத்தங்களே எண்ணை யாகப் பயன்படும் என்று எடுத்த சபதம் இல்லையானால் பாரதப் போரே நடந்திருக்காது.

'தேவி திரௌபதி சொல்வாள் — ஓம்
தேவி பராசக்தி ஆணை உரைத்தேன்
பாவி துச்சாதனன் செந்நீர் — அந்தப்
பாழ்த் துரியோதனன் ஆக்கை இரத்தம்
மேவி இரண்டும் கலந்து — குழல்
மீதினில் பூசி நறுநெய் குளித்தே
சீவிக் குழல் முடிப்பேன்யான் — இது
செய்யுமுன்னே முடியேன் என்றுரைத்தாள்'

என்று பாரதி இவள் சபதத்தைப் பாடுகிறார். இன்றைய தலைவிரித்த பெண்கள், பிற நாட்டின ராலோ - உள்ளே உள்ளவர்களாலோ—அகப்பகை—புறப்பகை ஆகிய இரண்டும் கலந்து நாட்டை அல்லலுக்கு உட்படுத்திய பிறகுதான் — அன்றி பல பூகம்பங்கள்—கடல் கொந்தளிப்புகள் போன்றவை உண்டான பிறகு தான் குழல் முடிப்பார்களோ! என்னவோ! தெரியவில்லை.

'மெய்யிற் பொடியும் **விரித்த கருங்குழலும்**
கையில் தனிச் சிலம்பும் கண்ணீரும்—வையைக்கோன்
கண்டளவே தோற்றான் காரிகை தன்
சொற்செவியில்
உண்டளவே தோற்றான் உயிர்'

என்று இளங்கோவடிகள் ஒருத்தி விரித்த குழலால் நாடாண்ட மன்னவன்— கூடலான் கூடாயினதையும்—அரசு மாய்ந்ததையும், நாடு அழிந்ததையும் இப்பாடலா லும் தொடர்ந்தும் காட்டுகிறார். அன்று கண்ணகி உடம்பு வீதியில் புரண்டு அழுததால் பொடிபட்டது. இன்று பெண்கள் தாமே விலை கொடுத்து வாங்கிப்பொடி பூசிக் கொள்ளுகின்றனர். தலை விரிகோலம் இருவருக்கும் அமைந்த ஒன்றே. கையில் தனிச் சிலம்பிற்குப் பதில்

கைப்பை அல்லது காமக் கதை நூல்கள், கண்ணீர்'கள்' நீராகும். இந்த நிலையில் நம் நாட்டுப்பெண்கள் தலைவிரி கோலமாக உள்ள காரணத்தால் நாடு— ஊர்— அரசு அனைத்தும் என்று அழியுமோ என அஞ்சி அஞ்சிச் சாக வேண்டியுள்ளது. அரசாங்கமே இந்த அவலநிலைக்குக் காரணமாகின்றது. கள்ளுக்கடைகளை திறந்து வைத்து, மதுவிலக்குப் பிரசாரம் செய்வது போலப் பொது வாழ்விலும் பட வாழ்விலும் தகாத முறைகளிலெல்லாம்—பண்பாட்டு நெறிகளுக்கெல்லாம் மாறுபட்ட உடை, உணவு பழக்க வழக்கங்கள், மக்களிடத்தும்— ஆண், பெண், இருபாலரிடத்தும் அமைவதால்தான் நாட்டில் அமைதி இல்லை. ஒரு காலத்தில் ஒன்றி இருந்த இந்தியா பிளவு பட்டது. இன்னும் எத்தனை பிளவுகள் உண்டாகுமோ என ஆள்வோரும் அல்லாரும் அஞ்சி, அஞ்சி வாழ்கின்றனர். எண்ணற்ற கொலைகள்-கொள்ளைகள் —வழிப்பறிகள்— நூதன வகையான திருட்டுகள்— கற்பழிப்புகள் கல்விச்சாலைகள் காமக்கூடங்களாதல்— ஆள்பவர் சிலர் நாடு நமக்கெனக் கருதிப் பொருள் பெருக்குதல் போன்ற கொடுமைகள் நடைபெறுகின்றன. வாகனங்கள் நாள் தோறும் இடிபட்டுப் பலரைக் கொலை செய்கின்றன. நாட்டின் ஒரு பகுதியில் பெருவெள்ளத்தால் அழிப்பு— அடுத்த பக்கத்தில் குடிநீருக்கும் தடுமாற்றம். இன்றைக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் சர். விஸ்வேஸ்வரையா வரைந்த 'கங்கை காவிரி' இணைப்பு செயல்பட்டிருந்தால் இந்த இருவேறு வகைப்பட்ட கொடுமை உண்டாகாதே என அறிந்தவர் பேசுகின்றனர். எனவே நாடு அமைதியாக வாழ வேண்டுமானால் நாம் வள்ளுவர் கூறியபடி 'வாழ்வாங்கு வாழ' வேண்டும். எப்படி என்பதை அவரே நூல் முழுதும் காட்டியுள்ளார். காதல் வாழ்வு அதில் உண்டு; கற்றார் மற்றார் கலந்து வாழும் வாழ்வு உண்டு, நல்ல நாடு உண்டு, அமைச்சு உண்டு, அரசு உண்டு, இல்லறமும், துறவறமும் நல்லறமாக வாழ வழி உண்டு.

திருக்குறளை உந்து வண்டியில் எழுதிவிட்டு அவர் நாளைக்கொண்டாடி விடுவதிலேதான் நம் பணி முடிந்து விடுகின்றது. எதற்கும் **ஒரு நாள் மட்டுமே** ஒதுக்குகிறோம். காந்தி விழா ஒரு நாள்—உழவர் விழா ஒரு நாள், அஞ்சல் விழா ஒரு நாள்—இப்படி அடுக்கடுக்காக ஒரு நாள் விழாவோடு நம் வழிகாட்டிகளை—வழக்கமான பண்பு களைப் பற்றிப் பேசி முடித்துக் கொள்ளுகிறோம்.

> 'கூட்டத்தில் கூடி நின்று கூடிப் பிதற்றல் இன்றி
> நாட்டத்தில் கொள்ளாரடி— கிளியே
> நாளில் மறப்பாரடி'

என்ற பாரதியாரின் பாடல்களுக்குச் சான்றாக நாம் இன்று வாழ்கின்றோம்.

இந்த நிலை நாட்டில் உள்ள வரையில் எல்லாக் கொடுமைகளும் இயற்கையின் சீற்றமுடன் நிச்சயம் வந்தே தீரும். வெறும் பிரசாரத்தால் நாடு திருந்தாது. செயல் வேண்டும். முன்னோடிகள் வாழ்ந்து காட்ட வேண்டும். 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராக' வாழ வேண்டும் 'எவ்வுயிரும் பராபரன் சன்னதியதாகும்' என்ற உணர்வில் எல்லா உயிர்களையும் ஓம்பிப் பாது காக்க வேண்டும். உற்றார், மற்றார் என்னாது, இன்னார் இனியார் என்னாது, எல்லாரையும் ஒத்து நோக்கும் பண்பும் உணர்வும்— சிறப்பாக ஆளுவோருக்கும் கட்டாயம் இருத்தல் வேண்டும். சாதி— சமயச் சழக் கெல்லாம் நாட்டை விட்டு அகல வேண்டும். உரிமை பெற்ற பின்தான்— யாதொரு வேறுபாடுமற்ற நாடு (Secular State) என்று பெயர் சூட்டிய பின்தான் எல்லா வேறுபாடுகளும் அதிகமாக உள்ளன. மாண்புடை எம் ஜி. ஆர். தெருப் பெயர்களில் ஜாதிகளை ஒழித்தார். ஆனால் இன்று சாதிகளின் பெயரால் மாவட்டங்கள் உருவா கின்றன. அவர் தாம் உயிரொடு இருக்கும் வரையில் தம் பெயரில் எதுவும் கூடாது என்ற அறநெறியில் வாழ்ந்

தார். கருத்துக்கும், கொள்கைக்கும் மாறாகத் தம் பெயரிலேயே ஒரு பல்கலைக்கழகமும் தாம் வாழும்போதே உருவாவதைத் தடுத்தார். முடியவில்லை. கொள்கையா—உயிரா என்ற எண்ணத்தில், உயிரினும் கொள்கையே மேல் என்று எண்ணி, அப்பல்கலைக்கழகம் நாள் குறித்து விழா அமைத்த நாளுக்கு முன் இரவு தம் உயிரை நீத்தார். அவர் வாழ்ந்தார் பெயரில் இருந்த இரண்டொரு இடங்களின் பெயர்களையும் மாற்றினார். ஆனால், இன்று குட்டித்தலைவர்கள் பெயர்களிலேயே பல இடங்கள் உண்டாகின்றன. (எம்.ஜி. ஆரின் அச்செயலைப் பாராட்டி நான் என் 'ஓங்குக உலகம்' என்ற நூலில் விளக்கி எழுதியுள்ளேன்). 'தன்னை மறந்தாள், தன் நாமம் கெட்டாள்' என்றார் அப்பர், நல்லவர் செயல் கருதி.

மனிதனின் இக்கொடுஞ் செயல் பற்றி இந்தியன் எக்ஸ்பிரஸ் 19.11.95 இல் 'Expelling God' என்ற ஒரு கட்டுரை வந்துள்ளது. அதில் ஒரு சில வரிகளைக் குறிக் கின்றேன்.

**'To worship is a basic human need. Politicians, Film Stars and Cricketers have replaced our avadaras and munis, saints and prophets, while the Greedy God-men, each one claiming to be God himself, have a field day.'**

மேலும் 1967 பூனா அருகில் 'கொயினா (Koyna) பூகம்பத்தால் அடிப்பட்ட நிலையிலும், ஏறக்குறைய முப்பது ஆண்டுகள் கழித்தும் வேறு நர்மதை, தேரி, அணைக்கட்டுகள் கட்டுவதை மக்கள் நலம் பெறுவதைத் தடுக்க நினைக்கும் எண்ணம் வருகின்றது. மக்களுக்கு நில நடுக்கம் முதலியன ஆயும் வல்லவர்களுக்கும் அந்த கொயினா அணைக்கட்டே பூகம்பத்துக்கும் காரணம் எனக்கண்ட காரணத்தால், இவற்றைத் தடுக்க நினைக் கின்றனர். எனினும் அவற்றால் மக்கள் இறந்தமை,

வாழும் கட்டடங்கள் நன்கு அமையாமையே என்க் கட்டட ஆய்வாளர் கட்டடத்தையும் அவர்கள் காட்டிய புதிய கட்டட முறைகளையும் எண்ணிப்பார்க்கவில்லை. முப்பது ஆண்டுகள் முடியும் நிலையிலும் மக்கள் செயலின் மைதான் பல் இயற்கைக் கொடுமைக்குக் காரணம் என்பதை இது காட்டுகின்றது. இவற்றையெல்லாம் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' நாளிதழில் 11.12.95ல் தலையங்கம் பக்கத்திலேயே திரு. அருண் பாபட் (ARUN BAPAT) அவர்கள் விளக்கியுள்ளார்கள்.

மேலும் நருமதை ஆற்றின் அணைக்கட்டுகள் பற்றியும் அவற்றால் மக்கள் பெறும்— நான்கு மாநிலங்கள் பெறும் பயன் பற்றியும் விளக்கி அவற்றைச் செம்மையாகச் செயல் படுத்தா நிலையில் அரசும் பிறரும் தலையிட்டு நிற்பதைக் குறித்து 'இந்து' தாளில் (12.12 95) திறந்த கருத்தினைக் காட்டும் பக்கத்தில் (Open page) திருவாளர் டாக்டர் பாரத் சிங் என்பார் (Dr. Bharat Singh, water resource Development centre, University of Roorkee U.P) விளக்கியுள்ளார்.

இந்திய நிலை உயர வேண்டுமானால்—ஏழை நாடாகிய இது வளம்பெற வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும் எனவும் காட்டியுள்ளார். அவர்தம் கடைசிப்பகுதியில் ஒன்றினை இங்கே தருகிறேன்:

**If India is to be strong nation, free from degrading poverty, it has to go ahead with the development of its natural resources in its own best judgement without being influenced by the transient fads in the rich countries.**

ஆம்! பல குழுக்களைப் பிற நாடுகளுக்கு ஆய்வு என்ற பெயரில் அனுப்பி, முடிவு காணாமலும் கண்டும் வாய் மூடியும் இருக்கும் இன்றைய நிலை மாறி, நாடுவாழ நல்ல நெறிகளை நாமே— நம் அரசே— நம் அறிவுடை

மக்களே ஆராய்ந்து செயல்பட்டால் நாடு நலமுறும். வறுமை நீங்கி மக்களெல்லாம் மகிழ்ந்து வாழ்வர்,

எனவே 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்ற சங்கப் புலவர் வாக்கு நூற்றுக்கு நூறு உண்மையாகிறதன்றோ! மேலும்

'மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர் பழிக்கும் **இக்கண் அகல் ஞாலம்**'

என்ற சங்கப்பாடலும் எவ்வளவு உண்மையாகிறது. எல்லாவகைக் கொடுமைகளும் 'எல்லாரும் இந் நாட்டு மன்னர்'களாகிய மக்களும் அவர்கள் அனுப்பிய ஆள்வோரும் இழைக்கின்ற கொடுமைகளால் தானே! மழையில்லை. கடல் வளம் இல்லை. இயற்கை மாசுபடுகிறது. இவ்வாறு குருடன் சொல்லவில்லை. விரிந்த பார்வையுடைய— அனைத்தையும் கண்டறிகின்ற ஞாலம் சொல்லுகிறது என்கிறார் சங்கப்புலவர் வெள்ளைக்குடி நாகனார். ஆம்! அவர் தூய்மையான வெள்ளைக்குடியில் பிறந்தவரன்றோ!

இன்று இலங்கையில் விடுதலைப்புலிகளை நசுக்கும் செயல் எனப் பல்லாயிரம் தமிழ் மக்களைப் பழி வாங்கும் கொடுமையைக் கண்டு இயற்கை சீற்றங்கொண்டு கடுமையான பூகம்பத்தை (மத்தியமதாலே நகரில்) உண்டாக்கிய நிலையினைத் 'தின மலர்' 11 12.95இல் (பக்கம் 9) வெளியிட்டுள்ளது. விந்திய மலைக்குத்தெற்கே நிலம் திண்மையதாகி விட்டமையில்— லெமுரியா கடல் கோளிலிருந்து தப்பிய அந்நிலப்பகுதி மிகத் திண்மையதாக—தொன்மை வாய்ந்ததாக உண்மையில் இங்கே என்றும் நிலநடுக்கம் வராது என்று ஆய்ந்து முடிவு கட்டிய அறிஞர் கூற்று

பொய்த்து விட்டதே! எப்படி 'நிலமென்னும் நல்லாள்' கொடுமையை ஏற்றுக் கொள்வாள். அவள் நகுவாள். நல்லவர் சிரிப்பு அக்கிரமத்தை அழிக்கும். சிவபெருமான் சிரித்தே முப்புரங்களை அழித்தார். எனவே நிலமென்னும் நங்கையின் சிரிப்பே இலங்கையில் பூகம்பமாக வெடித்தது. அந்த நிலை தமிழ் நாட்டுக்கும் வரும். ஆம்! இங்கே இது வரையில் நடவாத கொடுமைகள்— கொலைகள், வண்டி மோதல்கள், வெட்டுகள், கொள்கைகள், கட்சிச் சண்டைகள்— சாதிப் போராட்டங்கள் துப்பாக்கிச் சூடுகள்— திடீர்ச் செல்வ வளர்ச்சிகள்—அநியாயச்செலவு கள் இன்னும் எத்தனையோ—தலைவிரி கோலங்கள் நடக் கின்றன. வேலியே பயிரை மேய்கின்றது என்பது போலக் காப்பார் கள்ளராகும் நிலை நாட்டில் நிலவும் போது இயற்கை நல்லாள் எப்படிச் சும்மா இருப்பாள்? கார்த்திகை மாதம் முற்றும் காய்கிறது. 'வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரியும்' வற்றி வரண்டு நிற்கிறது. தஞ்சைத் தரணி மக்கள் தண்ணீருக்குத் தவிக்கின்றனர். இதற்கும் அடிப்படை தமிழக— கர்நாடக ஆட்சியாளர்கள் தாமே காரணமாகின்றனர். இப்படியே நாமே நமக்கு— மனிதனே மனித வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் முடிவு தேடிக் கொள்ளுகிறான் என்றால் உலகம் என்று செம்மையுறும்? எண்ணிப் பாருங்கள் — நாடு திருந்த— நலமுற ஆவன காணுங்கள்.

தமிழ்நாட்டில் வழக்கத்தில் உள்ள ஆண் பெண் உடைகள், காலத்துக்கும் நேரத்துக்கும் ஏற்றதாக மட்டு மின்றி, வாழ்வுக்கு—நல்வாழ்வுக்கு—நாட்டு வாழ்வுக்கு வளம் சேர்ப்பதாகவே அமைந்துள்ளன. 'உண்பது நாழி உடுப்பது **நான்கு முழம்**' என்று ஔவையார் (நல்வழி 28) பாடியுள்ளார். இது ஆடவருக்கு அமைந்த உடை. மகளி ருக்கும் இந்த வகையிலே புடவை அணியும் நிலை தொன்று தொட்டு அமைந்த ஒன்றாகும். கருவினைத்

தாங்கி வளர்க்கும் மகளிர்தம் இடை—இடைக்குமேல் நான்கு அல்லது ஆறுவிரற்கிடை (3 அல்லது 4 அங்குலம்) எப்போதும் இயற்கையான காற்றுப் புகும் வகையில் ஆடை அமைய வேண்டும் என்பது முறை வயிற்றில் சிசு தோற்றுவதற்கும், அது நல்லபடி வயிற்றில் வளருவதற்கும், பிறப்பதற்கும் பிறந்தபின் சிறக்கச் செழித்து வளர்வதற்கும் அடிப்படை அக்காற்றோட்டமுள்ள இடையேயாகும். மேல் இடும் கச்சுடன் கூடிய இரவிக்கைக்கும் புடவை கட்டும் இடுப்பிற்கும் இடையில் மேற்கண்டபடி காற்றோட்ட நிலையே நன் மக்களைப்பெற நல்வழியை அமைக்கும். கிராம மக்கள் பெரும்பாலும் அத்தகைய ஆடை அணிவதையே பின்பற்றுவதால், பலர் மகப்பேற்றிற்கு மருந்தகம் நாடுவதில்லை. புடவை இடுப்பிலணிந்து, அதன் ஒரு பகுதியை மேல் இட்டு உடலை நன்கு மறைக்கும் அதே வேளையில், அந்த இடைவெளியினைக் காற்றோட்டம் பெறும் வகையிலே ஆடை அணியும் மரபே அவர்களுடையது.

இன்று சில பெண்கள் உடலை முற்றும் மறைக்கும் தமிழ்நாட்டுக்கு முற்றும் மாறுபட்ட ஓர் உடையினை அணியத் தொடங்கி விட்டனர். அந்த உடையால் மறைக்க வேண்டிய மார்பகம் நன்கு தெரியும் வகையில் அமைகிறது. அது நம் பண்பாட்டுக்குக் களங்கம் தருவதாகும். சிலர் அதற்காக ஓர் மேலாடை துண்டு போலப் போட்டுக் கொள்வார்கள். ஆனால் அதுவும் தேவையான பயனைத் தருவதில்லை. மேலும் இந்த இடைப்பட்ட இடுப்பினைக் காற்றோட்டமின்றிக் கட்டிப்போடுவதால் அவர்கள் பிற்காலத்தில் மகப்பேறு பெறுவதில் தடைகள், துன்பங்கள், பிற கொடுமைகளுக்கு ஆளாக நேரும். பழங்காலத் தமிழ் அறிஞர்கள் இந்த உண்மையினைத் தெளிந்து பாராட்டிப் போற்றி வந்தனர். இந்த நூற்றாண்டில் வாழ்ந்த பாரதி கூட,

'தில்லித் துருக்கர்செய்த வழக்கமடீ—பெண்கள்
திரையிட்டு முகமலர் மறைத்து வைத்தல்;
வல்லி யிடையினையும் ஓங்கிமுன் னிற்கும்—இந்த
மார்பையும் மூடுவது சாத்திரங் கண்டாய்;

என்று பாடியுள்ளார். இப்பாடல் காதல் பற்றிய பாடலாக உள்ளமையின், பின்பகுதியாக 'மார்பையும் மூடுவது' பற்றிப் பாடுகிறார். அதனாலேயே கடைசி அடியில் 'கனி கண்டவன் தோல் உரிக்கக் காத்திருப்பானோ' என்று பாடித் தம் காதல் பாட்டை முடிக்கின்றார். காதலுக்கு அது பொருந்தும். எனினும் அதனோடு 'வல்லி இடையினை' மறைத்தலையும் கண்டிப்பது, அது தேவையற்ற—வாழ்வு முறைக்கு மாறுபட்ட ஒன்றெனக் காட்டவே உடன் சேர்த்துக் காட்டுகிறார். எனவே வருங்காலத்தில் வளமாக வாழ வேண்டிய பெண்கள் உடையில் அந்த மார்பினைக் காத்தல் வேண்டுவது அவசியமாகும். இயற்கைச் சூழலும் தட்ப வெப்ப நிலையும் மாறுபட்ட நாட்டின் பிறபகுதிகளில் வாழ்வார் உடையினையும் பழக்க வழக்கத்தையும் நாம்—தமிழராகிய நாம் மேற்கொண்டால் இயற்கை அன்னை அதற்குரிய தண்டனையைத் தாராதிராள்.

இக்கட்டுரை அச்சேறிக் கொண்டிருந்த வேளையில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்றினையும் இங்கே குறித்தல் வேண்டும். மனிதன் எவ்வளவு கீழ் நிலையில் செல்கின்றான் என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டு. உலகில்—அமைதி உலகில்—இது வரையில் காணாத ஒரு கொடும் நிகழ்ச்சி. 1995 டிசம்பர் 17ம் தேதி அடையாளம் தெரியாத விமானம் மேற்கு வங்கத்தில் புருலியா மாவட்டத்தில் **(Purulia District)** பலப்பல போர்க் கருவிகளையும் பிறவற்றையும் விண்ணிலிருந்து மழை எனப் பொழிந்த கொடுமையைத்தான் குறிக்கின்றேன். பின் 22.12.95ல் ஒரு

ரஷ்யா விமானம் 26-ல் பம்பாயில் இறக்கப் பெற்றதும் அதுதான் முன் வங்காளத்தில் ஆயுத மழை பொழிற்ற தெனக் கொண்டதும், பின் 23.12.95 அதில் இருந்த விமா னிகள் அதை ஒத்துக்கொண்டதும் பிற செயல்களும் உலக றிந்தவை. பின் மேற்கு வங்க அரசாங்கம் அவர்களைக் கைது செய்ததும் இந்தியாவுக்கு எதிராகப் போர்ச் செயல்; எனக் கொண்டதும் அறிந்தவையே. தவிர மற்றொரு ரஷ்ய விமானம் இசைவு இன்றி வழி மாறி (எங்கோ காட்மண்டுவுக்குச் சென்றது) புது தில்லி விமானத்தில் இயங்கிய நிலையும் நாடறியும். இது பாகிஸ்தான் செயல் எனச் சந்தேகமும் உள்ளதே. அமெரிக்கா இந்திய நாட்டு வேண்டுகோளையும் கவனியாதோ, அன்றி அது பற்றிக் கவலையற்றோ, அண்டை நாட்டுக்குக் கொடிய அணு ஆயுதம் முதலியவற்றைத் தருவதும் அதற் கேற்ப நாமும் அணு ஆயுதம் தயார் செய்ய வேண்டும் என நாம் முனை வதும் மனித இன முடிவு நோக்கிய ஒன்றன்றோ! இவை யன்றி, உலக நாடுகள் பலவற்றிலும் நடந்த எண்ணற்ற கொடுமைகளையும் நாளிதழ் இதே பக்கங்களில் குறித் துள்ளது. இவ்வாறு நம் நாட்டில் மட்டுமின்றி உலகெங் கும் உள்ள நாடுகள் மனித இனத்தையே நாசமாக்கும் கொடுமைக்கு 'நிலம் என்னும் நல்லாள்' உடன் தக்க தண்டனை தராது விடுவாளோ!

இனி, இந்த 1995ல் நாட்டிலும் உலகிலும் மனிதரால் நடந்த பல கொடுமைகளை இந்து(Hindu)Weekly Edition) (pages I—II) நாளேடு தன் 31.12.95 இதழில் வெளியிட் டுள்ள சில கருத்துக்களையும் எண்ணிப்பார்க்க வேண்டும். திரு K கிருஷ்ணன் அவர்கள் எழுதிய அக்கட்டுரையில் இன்றைய சூழ்நிலையை நன்கு விளக்குகிறார்.

இச்செயல் நடக்க அடிப்படைக் காரணம் நம் நாட்டுப் பாதுகாப்பு சீரற்ற நிலையில் உள்ள தன்மை யினையும், முன் எச்சரிக்கை — விண்வழிப் பாதுகாப்பு,

தகாத புகுமுறை பிற நன்கு கவனிக்கப்படவில்லை என்றும், இந்நிலை நீட்டித்தால் வருங்காலம் அஞ்சத்தக்க கொடுமை வாய்ந்ததாக இருக்கும் என்றும் இம்மனிதக் கொடுமைகளைப் பற்றி இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் 1.1.1996ல் தலையங்கத்திலேயே (பக்கம் 10) Lesson from Purulia என்ற தலைப்பில் திரு N.N. வோரா (N N. Vohra) அவர்கள் விளக்கமாக எழுதியுள்ளார்.

அவர்தம் இறுதி எச்சரிக்கை வாக்கியத்தை மட்டும் இங்கே அப்படியே தருகிறேன்.

**'Let us hope that Purulia incident shall compel the Central authorities to undertake a comprehensive review of the national security apparatus and enforce prompt, effective and accountable performance by each of the agencies involved. Unless this is done most urgently grave dangers lie ahead'.**

நாட்டிலும் உலகிலும் கொடுமைகள் அதிகரித்து 'வல்லான் வகுத்ததே வாய்க்கால்' என்று ஆள்வோரும் பிறரும் செயலாற்றும் போது ஆண்டவன் அவதரித்து அறம் காத்து மறம் அழிப்பார் என்பது நமது கொள்கை. திருமாலின் பத்து அவதாரங்களும் முருகன் தோற்றமும் துர்க்கையின் சீற்றமும் பிறவும் அந்த வகையில் அமைந்தனவே. அவ்வாறு அவர்கள் செயலாற்றும்போது அக் கொடுஞ்செயல் புரிவோரை மட்டும் அழிப்பதில்லை; அவர்கள் வாழ்ந்த நிலப்பகுதிகளே இல்லா வகையில் கடலால் கொள்ளச்செய்வர். இராவணன் தென் இலங்கையும் சூரபதுமன் பெருநாடும் அவ்வாறே கடலால் கொள்ளப்பட்டன. எனவே கொடுமை மிகும் காலத்தில் இறைவன் தோற்றம் உண்டு என்பது எச்சமயத்தோரும் கொள்ளும் கொள்கையாகும்

திருமால் அவதாரத்தில் இறுதி அவதாரம் கல்கியாகும். இதுபற்றி அண்மையில் வந்த ஒரு செய்தி கண்டே

(தினமணி - செப்டம்பர் 22- 1995) இதை எழுதுகிறேன். மிகுந்த துன்பம் உயிர்களுக்கு உண்டாகும் வகையில் நாடு கெடுமானால் அப்போதே அவதாரம் உண்டு. ஆயினும் அந்த விளம்பரத்தில் கல்கி பிறந்து விட்டார் என்றே கூறப்பெறுகிறது. 'ஸ்ரீராமனுக்குப் பிறகு, ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவுக்குப் பிறகு, இதுவரை ஏக்கத்தோடு எதிர் பார்த்திருந்த கடவுள் கல்கி அவதரித்து விட்டார்' என்று வெளியிட்டுள்ளார்கள். அவ்விளம்பரத்தில் குதிரையின் மேல் இறைவன் அமர்ந்து வாளை வீசத் தயாராக இருப் பதையும் படம் போட்டுக் காட்டுகின்றனர். இதுஎட்படிப் பொருந்தும் என்பது தெரியவில்லை. கலியுக இறுதியில் கல்கி தோன்றுவார் என்பதே அனைவர்தம் கொள்கை. அது மட்டுமன்றி அத்துடன் இந்த உலகமே அழிந்துவிடும் என்றும் தெய்வச் சிந்தனையாளர் நம்புகின்றனர். உலகம் முழுவதும் இன்றேனும் சூரபதுமன், இரணியன், இராவணன் போன்றோர்தம் நாடுகள் அழிந்து ஒழிந் தமை போன்று கொடுமைக்கு இலக்கான — கொடுமை புரிகின்ற மக்கள் வாழ்கின்ற பகுதிகள் மறைந்து ஒழியும். அதற்குமுன் எச்சரிக்கையாகவே பூகம்பங்கள் தோன்றி அறிவுறுத்துகின்றன. கல்கி மனித வயிற்றில் பிறக்க மாட் டார் என்பதும் தெரியவேண்டும். இப்படியிருக்கச் 'செத்துச் செத்துப் பிறப்பதைத் தேவென்று பத்தி செய் மனப்பா றைகள்' என்று அப்பர் கூறியபடி யார் யாரையோ கடவுள் அவதாரம் என்று கூறுவதும் பொருந்தாத செயல். அவர்கள் இராம கிருஷ்ணரைப் போன்று இராமலிங் கரைப் போன்று மகான்களாக இருக்கலாம். ஆனால் கடவுளாக—கல்கியாக மாட்டார்கள். எனவே இத்தகைய நெறியும் மக்கள் சமுதாய வாழ்வுக்கு மாறுபட்டதே யாகும். இதை எண்ணி உண்மை இறை வழிபாட்டிலும் நடமாடும் தெய்வங்களாகக் கொள்ளும் மக்களுள் வேற் றுமை இன்றி வாழும் வகையிலும் மக்கள் செயலாற்ற வேண்டும். அதுவே உலகம் உய்ய உற்பாதங்கள் நீங்க

வழி! அவ்வழியினை அனைவரும் பின்பற்ற முயல்வார் களாக!

மேலே 'கல்கி' அவதாரம் பற்றி — புதிதாக வந்த 'மனித கல்கி'யைப் பற்றி (நாளிதழ் காட்டி) சொன்னேன். தற்போது இந்தியன் எக்ஸ்பிரஸ் (Indian Express) 31.12.95 ஞாயிறு இதழில் புதிய சிவன், வந்தமை பற்றி எழுதியதைக் குறிப்பிட விரும்புகிறேன். 'Austrian Siva in Kaieasam என்ற தலைப்பில் எங்கிருந்தோ வந்த தன்னைச் சிவன் எனக் கூறிக் கொண்டு, உடன் உள்ள ஒரு ஜர்மனி லிருந்து மயக்கி வந்த பெண்ணைப் பார்வதி எனக் கூறிக் கொண்டு கேரள 'ஆலப்புழை' வந்து தங்கி, அதையே தன் கயிலாசமாகக் கூறித் தங்க முடிவு செய்ததை அந்தச் செய்தி காட்டுகிறது. அவன் தன்னைச் சிவன்' எனக் கூறிக் கொண்டாலும்; பெண்களொடு பழகும் போது கிருஷ்ண னாக உள்ளான் என்பதை 'Though the he belives that he is the reincornation of Lord Siva, his nature is akin to that of Lord Krishna especially with women' என எழுதிக் காட்டுகிறது. அச்செய்தி இப்படித் தம்மைக் கடவுளராகக் காட்டி, கழிவுறு நிலையில் உண்மைக் கடவுளும், அதன் வழிச் செயல்படும் நிலம் எனும் நல்லாளும் வெறுமனே உட்கார்ந்து பார்த்துக் கொண்டிருப்பர்களா? இவ்வாறு தவறு செய்பவர்களை மக்கள் கண்டிக்காது, அவர்களுக்குத் துணை நிற்பார்களா னால் நாடு துன்புறாது இன்பத்தில் திளைக்குமா? எண்ணிப்பாருங்கள்.

இன்று விநாயகர் பால் உண்பது பற்றி நாட்டில் பெரும் செய்தி உலவுகிறது. அடியவர்கள் விநாயகர் உண்மையிலேயே உண்டார் என்கின்றனர். எனக்கு நன்கு அறிமுகமானவர்கள் கூட அவ்வாறு ஊட்டியதாகக் கூறி னார்கள். நம் நாட்டில் மட்டுமின்றி மேலை நாடுகளிலும்

இந்தக் காட்சி நடைபெற்றதெனச் செய்திகள் வந்துள்ளன. இதற்கு அறிவியலாளர் வேறு காரணம் காட்டுவர். இது தெய்வத்தன்மை அல்ல என்றும் கல்லின் தன்மை என்றும் வேறு பல வகையிலும் காட்டுவர். ஆனால் இந்த அறிவியலார் இத்தனை ஆண்டுகளாக இத்தன்மை அப்படி அக்கற்களுக்கு உண்டு என்று ஏன் கூறவில்லை? உண்மை எதுவாயினும் பலரும் செய்து கண்ட இந்தச் செயல் எண்ணத்தக்க ஒன்றாகும். தமிழ்நாட்டில் திருநாரையூர் பொல்லாப்பிள்ளையார் நம்பியாண்டார் நம்பி படைத்த உணவினை உண்டார் என்பது புராண மரபு. அப்போது நாட்டில் என்ன நடந்தது என்பதை நாமறியோம். இந்தத் தெய்வம் பற்றிய செயலும் வருங்கால நிலையை உணர்த்துவதாகவே கொள்ள வேண்டும். அது நலமாயினும் இருக்கலாம். அவலமாயினும் இருக்கலாம். தன்னை மறந்து தொண்டு செய்வார் தந்ததை உண்டார் என்றால் நலமாகும். ஆனால் இன்று யார் யாரோ— நாட்டில் தீங்கிழைப்பார் உட்பட ஊட்டினார் என்றால் இதை ஓர் உற்பாதமாகத்தானே கொள்ள வேண்டியுள்ளது. பயனைப் பொறுத்து இருந்து காண வேண்டும்.

இறைவன் வெள்ளெருக்கு அணிகின்றவன். உலகுக்கு ஊறுவிளைக்க நினைத்த, கங்கை, அரவு, பெருநெருப்பு, ஆலகாலவிடம் இவற்றைத் தான் ஏற்று, உலகம் உய்ய அருள் செய்தவன் ஆண்டவன். வெள்ளெருக்கும் அப்படியே. அதனாலே நாட்டில் வெள்ளெருக்கு அதிகமாகப் பூப்பதில்லை. ஆனால் இந்த ஆண்டு எங்கு நோக்கினும்— சாலை இருமருங்கிலும் பிறவிடங்களிலும் வெள்ளெருக்குத் தழைத்து, கொத்துக் கொத்தாய் பூத்திருப்பதை அனைவரும் காண்கின்றனர். கி.பி. 2000 இல் நகரையே உயர்வாக்க நினைக்கப் பேசும் சென்னை மாநகராட்சியின் தெருக்களிலே— தோட்டத்திலே இவை பூத்தால் தீமை வருவது என முன்னோர் உணர்ந்து அதை

அங்கெலாம் வளரவிடமாட்டார்கள். ஆனால் இன்று சென்னை நகரில் நான் தினந்தோறும் செல்லும் செனாய் நகர் பெருந்தெருக்கள் ஓரத்திலேயே இச்செடிகள் நன்கு வளர்ந்து கொத்துக் கொத்தாய் பூத்திருப்பதை நாள் தோறும் கண்டு கொண்டே செல்வேன். ஆனால் நான் என்ன செய்ய முடியும்?

இவ்வாறு வெள்ளெருக்கு அளவின்றிப் பூக்கும் நிலை நாட்டுக்கு ஏற்றதன்று. மனிதன் தவறு இழைக்கும்போது, இயற்கை இவ்வாறு காட்சி தந்து, அவனைத் திருத்த முயல்வதுவே மரபாகும். ஆனால் இன்றைய மனிதன்— தன் முடிவைத்தானே தேடிக்கொள்ளும் மனிதன் இந்த இயற்கை அன்னையின் எச்சரிக்கை ஏன் எண்ணிப் பார்க்கப் போகிறான்? இவன் செயல்கண்டு வள்ளுவர் கூறியாங்கு, 'நிலமென்னும் நல்லாள் நகும்' என்று தான் எண்ண வேண்டியுள்ளது. அக்கிரமம் மிகுந்தால் நல்லவர் சிரித்தே— இயற்கை பூத்தே உலகை அழிக்கும் நிலை நாடு அறிந்ததே. இறைவன் திரிபுரங்களைச் சிரித்தே அழித் தான். இவையெலாம் அறிந்தே மனிதன் இன்று தவறு கிறான் என்றால் இதன் பயன் அஞ்சத்தக்கதாக அன்றோ அமையும். நாடும் மனிதனும் எண்ணிப் பார்த்து, திருந்தி செம்மை நெறியில் வாழ முயன்றால் நல்லது. இன்றேல்...

24.10.95 தோன்றிய முழுச்சூரிய கிரகணங்கள் பற்றி உலகிலும் நாட்டிலும் பலபல உற்பாதங்களைப் பற்றிப் பேசியும் எழுதியும் உள்ளனர். சூரியனை நாம் பார்ப்பது இருக்கட்டும். அதற்குரிய கருமை படர்ந்த கண்ணாடி போன்றவற்றை உபயோகிக்கும் வழியை சாதாரண ஒன்றும் கல்லாத கிராமவாசி கூட அறிவான். மேலும் அந்த நாளில் உணவுப்பண்டங்களும் பிறவும் கெடா திருக்கத் தர்ப்பைப்புல் அல்லது துளசியை அவற்றுள் இடுவதை எழுபது ஆண்டுகளுக்கு முன் என் இளமை யிலேயே கண்டிருக்கிறேன். ஊர்ப் புரோகிதர் அதற்

கெனவே பச்சைத் தர்ப்பைப்புல்லைச் சேகரித்து வீடு தோறும் கொண்டு வந்து தருவார். அதை ஏளனம் செய்த வர்களும் உண்டு. ஆயினும் சில ஆண்டுகளுக்கு முன் மேலை நாட்டு அறிவியலார் அதன் திறனையும் கிரகணத்தால் மாசுபடாது பொருள்களை அது காக்கும் திறனையும் ஆராய்ந்து கண்டு எழுதியுள்ளமையை அன்று நம் நாட்டு நாளிதழ்களும் வெளியிட்டன. (1990லோ அதற்கு முன் பாகவோ இருக்கலாம்) மத்திய பிரதேச **ரேவா** பல்கலைக் கழகத்தில் 1980ல் ஆய்ந்த வகையில் இது உண்மை எனவும் காட்டப்பெற்று விளக்கப்பெற்றது (The Hindu 17.10.95 Page 5 & Indian express 22.10 95 Page—2) சோதிடர்கள் எத்தனையோ பாதகங்கள் நம் நாட்டிலும் உலகிலும் நிகழும் என்று கூறியுள்ளார்கள். அதற்குச் சான்றாக முந்திய நிகழ்ச்சிகளையும் மேற்கோள் காட்டியுள்ளனர். டாக்டர் S K. ஜெயின் என்பார் நிலநடுக்கம், பெரும்புயல், கொடிய கொடும் செயல்கள், அரசியலில் அவல அலைகள் பல நிகழவும் வாய்ப்பு உண்டு என்று கூறுகின் றார். (Indian Express— 22.10.95 Page—1)

இருகிரகணங்கள் உண்டானமையால் குருசேஷத்திரப் பாரதப்போரே நிகழ்ந்தது என திரு. B.V. இராமன் அவர்கள் காட்டியுள்ளார்கள் (The Hindu 17.10.95 Page 5) பழங்காலத்திலிருந்து கிரகணங்களின் விளைவுகள்- அவை வழி மாநிலங்களிலும் மனித வாழ்விலும் நேரும் நலக் கேடுகள் பற்றியும் விளக்கி. இவற்றை நன்கு அறியா நிலையிலேயே சிலர் தப்பாக வாதாடுகின்றனர் என்பதையும் அதே கட்டுரையில் விளக்கியுள்ளார். 'சோதிடம் பொய்யாது மெய் என்பதறிவதற்கு சூழ் கிரகணம் சாட்சியாம்' என்று முன்னூறு ஆண்டுகளுக்கு முன் எழுதிய சதகங்களும் காட்டுகின்றன.

(அறப்பளிச்சுரர் சதகம் 5வது பாடல்)

டாக்டர். K. நாகராஜ் என்பவரும் 'பிருகதி **சம்மதிலய**' ஏதுக்காட்டி விரைவில் நாட்டில் நிகழப்

போகும் கொடுமைகளைக் குறித்துள்ளார். கருவுடைப் பெண்கள் அக்காலத்தில் மிக எச்சரிக்கையாக இருக்க வேண்டும் எனப் பெங்களூர் M. D இராமானுஜர் எழுதியுள்ளார். (Indian express 22.10.95 – Page 9) இதுபற்றி கிராமத்து மக்கள் நன்கு அறிவர். கிரகணத்தைப் பார்த்தாலும் ஒரு சிறு துரும்பைக் கிள்ளினாலும் அனாவசியமாக அலைந்தாலும் கருவுக்குச் சேதம், உடற்குறை அல்லது அழிவு உண்டாகும் என்று ஒரு நூற்றாண்டுக்கு முன்பே கிராம மக்கள் அறிந்து செயல்பட்டதை என் முன்னோர் — பாட்டி காமாட்சி அம்மாள் கூறியதைக் கேட்டிருக்கிறேன் இந்தக் கிரகணம் அடுத்து வரப் போகும் மூன்றாவது உலகப்போருக்கு அடிக்கல் நாட்டும் என்றும் பதினாறு கிரகணங்கள் முடிய பெரும்போரே மூளும் என்றும் திரு. ஜெயின் அவர்கள் கூறுகின்றார். (Indian express-22.10.95 Page—1) 1900க்கும் 2,000க்கும் இடையே 24 சூரியக்கிரகணங்கள் வர வேண்டும் எனவும் அவற்றுள் இது (24.10.95) எட்டாவது முழுச் சூரியகிரகணம் எனவும் (வேறு குறைக் கிரகணங்களும் இடையில் வந்திருக்கலாம்) 1997 மார்ச்சு 9-ம் நாளிலும் 1999 ஆகஸ்டு 11-ம் நாளிலும் முழுச் சூரியக்கிரகணங்கள் உண்டு என்றும் கூறப்பெற்றுள்ளது (Indian Express 22.10.95 Page – 8). இவ்வாறு நிகழ்வன வென்று கூறுவதெல்லாம் தவறு என்று முற்றும் உணரா நிலையில் இங்கே சிலர் கூறினாலும் சோவியத், ஜப்பான் நாட்டு அறிவியல் அறிஞர்கள் 1978—மார்ச்சு 24—25' வலடி வாஸ்டாக்கில் நடத்திய (கிரகணம் நடந்தபோது) ஆய்வு வழியே, இவற்றால் பெரும் நிலநடுக்கம் முதலியன உண்டாகும் எனக்கூறுகின்றனர், என B.V இராமன் சுட்டிக்காட்டுகின்றார். (The Hindu 17.10.95 Page—5) இன்றைய (24.10.95) கிரகணமும் நல்ல வேளையில் தீங்கு இழைக்கவில்லை என மகிழலாம். ஆனால் இது வருங்காலக் கொடுமைகளுக்கு, மேலே கண்டபடி, உற்பாதமாக—

எச்சரிக்கையாக அமைகின்றது என அறிய வேண்டும். எனவே தரணியாகிய பூமாதேவி, மனிதன் தவறுகள் அளவற்று இழைக்கும்போது இத்தகைய முன் எச்சரிக்கை களை இட்டு 'குழந்தாய்! தவறாதே! மனிதத் தன்மையை விடாதே! விலங்கினும் கீழாகாதே, வாழ்! வாழவிடு! நாடெங்கும் வாழக் கேடொன்றுமில்லை! எல்லாரும் இன்புற்றிருக்க நினை, தாம்பெற்ற இன்பம் உலகம் பெற நினை. 'யான் 'எனது' என்னும் செருக்கு நீக்கு' என அறிவுறுத்துகிறாள். ஆனால் எங்கோ ஓடிக்கொண்டிருக் கும் இன்றைய மனிதனுக்கு இச்செயல்களும் அறிவுறுத்தல் களும் புரிவதில்லை; சொற்கள் கேட்பதில்லை, கேட்டால் நலன் விளையும் கேட்பானா?

இக்கருத்தினை உள்ளடக்கி, மனிதன் தனக்குத்தானே தன் செயலால் அழிவைத் தேடிக் கொள்ளுகிறான் என்றும் அவன் தன் சூழலையும் இயற்கை நிலையினையும் மாசுபடுத்தியும் பிறவகையிலும் வேறுபடுகிறான் என்றும் அந்த வேறுபாடே அவனை அழிக்கும் என்றும் மேலை நாடுகளைச் சுட்டிக்காட்டி, தினமலர் 27.10.95ல் (பக்—10) 'அழிவை ஏற்படுத்திய மனித குலம் பலனை அனுபவிக் கிறது இப்போது' என்ற தலைப்பில் ஒரு சிறுவிளக் கம் வந்துள்ளது. அதை இங்கே அப்படியே தருகிறேன்.

வாஷிங்டன்: அடுத்த நூற்றாண்டுகளில் உலகில் பாலைவனப் பகுதி அதிகரிக்கும். பனி மூடிய மலைப்பகுதி கள் உருகிப் பயங்கர வெள்ளப்பெருக்கு ஏற்படும்.

மனித குலம் கடந்த சில ஆண்டுகளாகத் தொழில்துறை நவீனப் புரட்சி என்ற பெயரில் சுற்றுச் சூழலை அளவு கடந்து மாசுபடுத்தி வருகிறது.

குறிப்பாக அமெரிக்கா, பிரிட்டன் போன்ற வர்த்தக நாடுகள் இயற்கையின் வளங்களைப் பயன்படுத்திய விதம், அதற்கே தீமை ஏற்படுத்தும் வகையில் அழிவைக் கொண்டு வந்துள்ளன.

சீதோஷ்ண நிலை மாறுபாடு, பருவ கால நிலையில் மாற்றம், அமில மழைப்பொழிவு, இயற்கையின் சீற்றங்கள் இவை நாள்தோறும் அதிகரித்து வருகின்றன.

இதைத் தடுக்க என்ன வழி என்பது பற்றி 30 நாடுகளுக்கும் மேற்பட்ட விஞ்ஞானிகள் ஆய்வு செய்தனர். இயற்கையில் ஏற்பட்ட மாற்றங்கள், சுற்றுச் சூழல் பாதிப்பு, வாயு மண்டலத்தில் ஏராளமான நச்சுக் கலப்பால் ஏற்பட்ட மாற்றம் ஆகியவற்றை ஆய்ந்து இந்த பிரச்சினைக்கு 'குளோபல் வார்மிங்' எனப்பெயரிட்டனர்.

குறிப்பாக பிரிட்டன் போன்ற குளிர் நாடுகளில் பரவி வரும் மாசு பிரச்சினையில் பருவ காலங்களில் மாற்றம் ஏற்படத் துவங்கியிருக்கிறது. வழக்கமாக இருக்கும் சீதோஷ்ண நிலையும் மாறிவிட்டது.

தொழிற்சாலைகள் வெளிவிடும் நச்சுப் புகைகள், வாகனப் பெருக்கத்தால் ஏற்படும் கார்பன் டை ஆக்சைடு புகை பாதிப்பு இவை சுற்றுச் சூழலில் அதிகமாக ஏற்படக் காரணமாகி விட்டது.

கிட்டத்தட்ட 30 நாடுகளைச் சேர்ந்த விஞ்ஞானிகள் இது குறித்து ஆய்வு செய்தனர். ஆய்வு முடிவில் அவர்கள் வெளியிட்ட அறிக்கையில் கூறியிருப்பதாவது:

☐ வழக்கமாக உஷ்ணமாக இருக்கும் பிரதேசங்கள் கடற்கரை ஓரப்பகுதிகளில் பெரும் பாதிப்பு இருக்கும்.

☐ ஏற்கனவே வெப்பம் வாட்டும் பகுதிகளில் வெப்பம் அதிகரிக்கும். குறைந்த அளவு விளைச்சல் உள்ள பகுதிகளில் மேலும் பாதிப்பு ஏற்படும்.

☐ வெப்பத்தால் மழைக்காலக் காடுகள் மாறி வெறும் புல் தரைகளாக ஆகி விடும்.

☐ பாலைவனங்களில் வெப்பம் அதிகரிக்கும்.

☐ பனி மூடிய மலை முகடுகளில் உள்ள பனி உயரம் பாதியளவு குறையும். இதனால் ஆறுகளில் வெள்ளம் பாய்ந்து, புனல் மின் நிலையங்கள் பாதிக்கப்படும்.

☐ கடல் மட்டம் உயர்வதால் சீனா மற்றும் வங்க தேசம் மிகவும் பாதிக்கப்படும்.

☐ வட துருவப் பகுதிகளில் வெப்பம் அதிகரிப்பதால் நோய் பரப்பும் கிருமிகள் அதிகரிக்கும். ஏற்கனவே கொசு பாதிப்பால் மலேரியா அதிகரிக்கிறது.

இவ்வாறு நிபுணர்கள் எச்சரித்துள்ளனர்.

'தன்னை மறந்தாள் தன்நாமம் கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்று
அப்பர் இறையருளுக்குக் காட்டிய தெய்வ நெறி எல்லா வாழ்வுக்கும் — சிறப்பாகப் பொது வாழ்வுக்குப் பொருந்தும். அப்படி வாழ்ந்தவர் செயல் வையம் உள்ளளவும் வாழும். தம் புகழுக்காக ஆற்றும் செயல் கால வெள்ளத்தில் காணாது நீங்கும். தன்னை மறந்து பெரிய கோயில் கட்டிய இராசராசன் புகழும் அப் பெரிய கோயிலும் இன்றளவும் சிறக்க வாழ்கின்றன. ஆனால், அவன் மகன் கங்கையை வெற்றி கொண்டதற்காக அமைத்த 'கங்கை கொண்ட சோழபுரம்' எங்கோ சிற்றூராய் யார்க்கும் தெரியாமல் ஒதுங்கிக் கிடக்கிறது. அப்படியே வடக்கே வெற்றி பெற்று வாழ்ந்த அக்பர் அதற்கெனக் கட்டிய 'பெதேபூர் சிக்ரி' ஒரு காட்சிப் பொருளாக உள்ளது. ஆனால், தம்மை மறந்து அமைந்த காசியும், காஞ்சியும் இன்றும் வாழ்கின்றன. எனவே, பதவியில் உள்ளவர் தம்மை மறந்து நாட்டுநலம் செய்யின் அவர்தம் புகழ் என்றும் வாழும். தம்மை மறந்த காந்தியார் பெயர் என்றும் வாழ்கிறது. மேலை நாட்டில் பலர் இன்றும் இந்தியாவைக் 'காந்தி நாடு' என்றே அழைக்கின்றனர்.

'சொல்லுதல் யார்க்கும் எளிது அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்' என்றார் வள்ளுவர்.

எனவே யாவரும் — சிறப்பாக ஆள்வோரும் எதை எதையோ செய்வதாகச் சொல்லி, பின் செய்யாதிருத்தல் பெரிய கொடுமையாகும். எனவே, அளவறிந்து சொல்லுக — சொல்லியவற்றைச் செயல்படுத்துக தமிழில் உள்ளத்து மெய்மையாகிய உண்மை, வாக்கில் மெய்யாகிய வாய்மை, உடல் அல்லது மெய்யில் மெய்யாகிய மெய்ம்மை என்று

மூன்றும் உள்ளன. எனவே, நாம் மனம், வாக்கு, காயம் என்ற மூன்றும் ஒன்றிய வகையில் வாழ வேண்டும். 'உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார் உறவு கலவாமை வேண்டும்' என்று வள்ளலார் பாடியுள்ளார். எனவே, நல்லதை எண்ணி, அதையே சொல்லி, அதைச் செயலாக்க வேண்டுவது நம் கடமையாகும்.

'நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்'

என்ற சங்க காலப் புலவர் நரிவெரூஉத் தலையார் சொல்லியபடி நல்லது செய்ய முயலுங்கள். இல்லையானால் அமைதியாக இருங்கள். கெட்டவற்றை எண்ணாதீர்கள்—சொல்லாதீர்கள்— செய்யாதீர்கள் இன்று 'எல்லாரும் இந்நாட்டு மன்னர்' ஆதலால் இப்பாரத நாட்டில் வாழும் ஒவ்வொருவரும் இத்தகைய நல்லொழுக்கங்களைக் கடைபிடிக்க வேண்டும். நல்ல பண்பாட்டினை ஓம்ப வேண்டும். பிசிராந்தையார் கூறியபடி வேந்தன் அல்லவை செய்யாது, அனைவரும் சான்றாண்மை மிக்கவராய் இருப்பின் நமக்கு நரை தோன்றாது—என்றும் இளமையாய் இருப்போம். நாட்டுக்கும் உலகுக்கும் நல்லனவே செய்வோம். அப்போது நிலமென்னும் நல்லாள் நம்மை நலம் பெற வாழ வைப்பாள். காலந்தோறும் தவறாது தேவையான அளவு மழை பெய்யும். மக்கள் மன நிறைவோடு வாழ்வார்கள். வையகமெல்லாம் வளம் பெற்று வாழும். நாட்டில் வாழும் நல்லீர்! அனைவரும் பண்பு காத்து — பழம் பெரும் சிறப்பினைப் போற்றி, அல்லவை செய்யாது அறங்காத்து வாழ முயலுங்கள். அதனால் மக்கள் வாழ்வு சிறக்கும்! தரணியும் மகிழ்ந்து உங்களுக்கு வேண்டியவற்றைத் தந்து உதவும். இன்றே உறுதி பூணுங்கள். எல்லாரும் இன்பம் காண வழி வகுத்துக் கொண்டு சிறக்க வாழ முயலுங்கள்! நாடு நாடாகும்—நாம் மனிதராவோம்! மகிழ்ச்சி பொங்கும் — வற்றாத வளம் சுரக்கும். அதுவே நமக்கு வேண்டுவது. முயலுங்கள், வெற்றி காணுங்கள்! நாடு நலம் பெற நல்லவை காணுங்கள்!

## ஆசிரியர் அ.மு.ப. அவர்கள் எழுதிய நூல்கள்—85க்கு மேல் தற்போது உள்ளவை

| நூல் | | |
|---|---|---|
| இளமையின் நினைவுகள் | 2 | 50 |
| கொய்த மலர்கள் | 4 | 50 |
| துன்பச் சூழல் (நாவல்) | 2 | 00 |
| மக்கட் செல்வம் | 2 | 00 |
| பெண் | 1 | 50 |
| மனிதன் எங்கே செல்கிறான்? | 1 | 50 |
| தாயின் மணி வயிற்றில் | 1 | 00 |
| தொழில் வளம் | 5 | 00 |
| வெள்ளி விழாச் சொற்பொழிவுகள் | 3 | 00 |
| மலைவாழ் மக்கள் | 5 | 00 |
| சிறுவர்களுக்கு | 2 | 00 |
| வானொலி வழியே | 3 | 00 |
| நாலும் இரண்டும் | 2 | 00 |
| 19ம் நூற்றாண்டு உரை நடை | 8 | 00 |
| புதிய கல்விமுறை | 3 | 00 |
| பல்கலைக் கழகச் சொற்பொழிவுகள் | 2 | 00 |
| சாத்தனார் | 6 | 00 |
| கவிதை உள்ளம் | 5 | 00 |
| மு.வ.தமிழ்த்தொண்டு | 5 | 00 |
| வையைத் தமிழ் | 3 | 00 |
| கங்கை கரையில் காவிரித் தமிழ் | 5 | 00 |
| தமிழ்நாட்டு விழாக்கள் | 4 | 00 |
| காஞ்சி வாழ்க்கை | 5 | 00 |
| கவிதையும் வாழ்க்கையும் | 20 | 00 |
| வழுவிலா மணிவாசகர் | 7 | 00 |
| ஏழு நாடுகளில் எழுபது நாட்கள் | 36 | 00 |
| திரும்பிப் பார்க்கிறேன் திகைத்து நிற்கிறேன் | 16 | 00 |
| வரலாற்றுக்கு முன் வடக்கும் தெற்கும் | 16 | 00 |
| தமிழர் வாழ்வு | 16 | 00 |
| ஓங்குக உலகம் | 16 | 00 |
| தாய்மை | 20 | 00 |
| கல்வி எனும் கண் | 12 | 00 |
| ஆனந்த முதல் ஆனந்த வரை | 40 | 00 |
| சான்றோர் வாக்கு (குறள் வழி) | 17 | 00 |
| நல்லவை ஆற்றுமின் (வானொலிப் பேச்சு) | 20 | 00 |
| அருந்திறலாளர் அ. மு. ப. (மாணவர் தொகுத்தவை-1992) | 20 | 00 |
| அம்மையும் அப்பனும் | 20 | 00 |
| தமிழக வரலாறு (மறுபதிப்பு) | 50 | 00 |
| நாடு நலமுறை | 24 | 00 |